22

# கண்ணன் பாட்டுத் திறன்

பேராசிரியர்
டாக்டர் ந. சுப்பு ரெட்டியார்



சர்வோதய இலக்கியப் பண்ணை
மதுரை-625 001.

# கண்ணன் பாட்டுத்திறன்

(பாரதி நூற்றாண்டு விழா வெளியீடு)


பேராசிரியர்

**டாக்டர் ந. சுப்பு ரெட்டியார்**

*தமிழ்ப் பேராசிரியர்—துறைத் தலைவர் (ஓய்வு)*

திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி.





சர்வோதய இலக்கியப் பண்ணை

32/1, மேலவெளி வீதி, மதுரை - 625001.

முதற்பதிப்பு - செப்டம்பர் 11, 1982



விலை : ரூ. 15-00

*Publishers :*
Sarvodaya Ilakkiya Pannai
32/1, West Veli St, Madurai - 625 001.

அச்சிட்டோர் :
மாருதி பிரஸ், 173, பீட்டர்ஸ் சாலை,
சென்னை - 600 014. தொ. பே. 87453.

# அணிந்துரை

**பேராசிரியர் டாக்டர் கா. மீனாட்சி சுந்தரம்**
*(கல்லூரிக் கல்வி இயக்குநர் (பொறுப்பு), சென்னை-600 006.)*

'**பாட்**டுத் திறத்தால் வையத்தைப் பாலித்திடும்' மகாகவி பாரதியாரைப்பற்றிப் பட்டி தொட்டியும் இன்று அறியும். உலகப் புலவராக, இன்று, உலகம் அந்த மாமேதைக்கு நூற்றாண்டு விழாக் கொண்டாடுகிறது. பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் தானும் தனித்து நின்று பாரதியைக் **கண்ணன் பாட்டுத்திறன்** என்ற நூல்வழி தன் பற்றையும் பாசத்தையும் காட்டிப் போற்றுகிறார்.

முல்லை, குழல், கண்ணன் இம் மூன்றும் மணம், இனிமை, அழகு ஆகியவற்றைத் தமிழகத்தில் பரப்பிக்கொண்டு ஒளி விட்டுக்கொண்டிருக்கும் சொற்களாம். முல்லை நிலத்தில் குழலிசையை மாயோன் பரப்புவதைத் தமிழ்க் கவிஞர்கள் சுவைத்துச் சுவைத்து உருகி உருகி உருக்கமாகப் பாடி யுள்ளார்கள். ஆயினும், அவரவர் முத்திரையை ஆங்காங்கே பதித்துள்ளனர். அந்த வரிசையில் கண்ணனைப் பாரதியார் தம் முத்திரையுடன் பாடியுள்ள தன்மைகளைச் சுவைபட ஆய்வதே "கண்ணன் பாட்டுத்திறன்" என்ற நூலாகும்.

பேராசிரியர் டாக்டர் ரெட்டியாரின் ஆழ்ந்த புலமையும், தெளிவுடன் கூறும் நெறியும் நூல் முழுதும் மின்னுகின்றன.

ஆங்கிலம், வடமொழி, தமிழ் ஆகிய மொழிகளில் நிலைத்து வாழ்ந்து வரும் இலக்கிய இலக்கணங்களை நன்கு கற்றுத் தெளிந்து அவைகளிலுள்ள கருத்துகளை, 'கண்ணன் பாட்டுத் திறனை' விளக்குவதற்கு ஆசிரியர் பயன்படுத்தியுள்ளமை அவருடைய பரந்துபட்ட ஆய்வுநெறியைப் புலப்படுத்துகிறது.

தொல்காப்பியத்தில் பல தேவனைக் காட்ட ஆசிரியர் முயன்றிருப்பதை (பக்கம் 5) நோக்கின் அவர் வேட்கை புலனாகும்.

சம்பந்த ஞானத்தை "இறைவனுடன் நமது உறவுகள்" என்ற தலைப்பில் மிக அற்புதமாகப் பேராசிரியர் டாக்டர் ரெட்டியார் எடுத்துவிளக்கியுள்ளார்.

கண்ணன் பாடல்களில் 'ரசங்களைக்' கூறிப் பாரதி எழுதியுள்ளதை யாவரும் அறிவர். எனவே, அச்சுவைகளைப் பற்றி ஆசிரியர் வடமொழிவழி நின்று விளக்குவது ஆய்வாளர் கவனத்தை ஈர்ப்பதாகும். "எல்லாவற்றையும் இன்பமாக உணரும் நிலை மனத்திற்குக் கிட்டிவிட்டால் அது பெறற்கரிய பேறாகும். அந்நிலை கொண்ட மனம் வாய்க்கப் பெற்றவனே கவிஞன்" (பக்கம் 17) என்ற ஆசிரியர் கூற்று ஆழ்ந்து எண்ணத்தக்கது.

"முனிவர் துக்ககரமான நிகழ்ச்சியை ஏற்றிருப்பாராயின் அவரது வாயினின்று கவிதை வெளிவராது என்பது திண்ணம். கவிதை ஆனந்தக் களிப்படைந்த உள்ளத்திலே உருவெடுக்கும் என்பதை நாம் நன்கு அறிவோம்" (பக்கம் 27) என்ற கருத்தைப் பார்க்கும்போது அவல நிலையில் ஒப்பாரி தோன்றுகிறதே என்ற எண்ணம் முகிழ்க்கலாம்.

சுவைகளை ஒவ்வொரு பாடலிலும் ஆசிரியர் பொருத்திக் காட்டியிருப்பது மிகப் பயனுடையதும் தக்கதுமாம். நூல் முழுமையும் ஆங்காங்கே அவை எடுத்துக்காட்டப் பட்டுள்ளன.

பாரதியாரின் புது நெறியை டாக்டர் பேராசிரியர் ரெட்டியார் காட்டுவதற்கு ஒரு சான்று. "பண்டைய சங்கப் பாடல்களிலும் பிற்காலத்தில் எழுந்த பக்திப் பாசுரங்களிலும் பிரிவாற்றாமையைத் தாங்க முடியாது நாயகியே தவிப்பதாக நவிலப் பெற்றிருக்கும் இதுவே அகத்திணை நெறி. ஆனால், இங்கு நாயகன் தவிப்பதாக ஒரு புது நெறியை வகுத்து விடுகின்றார் பாரதியார்" (பக்கம் 178).

பாரதியின் கீதோபதேசம் என ஆசிரியர் எடுத்துக் காட்டுவது நினைக்கத் தக்கது. "அன்றாடம் வாழ்வே சதம் என்று கருதி மயங்கி நிற்கும் மக்களுக்குப் புதிய வாழ்வில் புகுவதற்கு மக்கள் யாவரும் சுதந்திரப் போரில் பங்கு பெற வேண்டும் என்பதே பாரதியின் கீதோபதேசம்" (பக்கம் 206) எனக் கண்ணன் பாடல்கள்வழி அதனை ஆசிரியர் காட்ட விழைகிறார்.

பாட்டிலமைந்துள்ள படிமங்களையும் கலவை உருக் காட்சிகளையும் வெளிநாட்டார் இலக்கியத் திறனாய்வுவழி எடுத்துக் காட்டியுள்ளமை, சுவையாகவும், இலக்கிய மாணவர்க்குப் பயனுடையதாகவும் அமைந்துள்ளது.

பேராசிரியர் டாக்டர் ரெட்டியாரின் அறிவியல் அறிவும் (பக்கம் 29, 87, 113) தம் ஆசிரிய அநுபவமும் (பக்கம் 75) ஆங்காங்கே ஒளிவிடுகின்றன. மாணவர் சமுதாயத்திலும் பொதுக்கூட்டங்களிலும் பேசப்படும் "அறுவை"யைக் கூட ஆசிரியர் விடவில்லை (பக்கம் 58, 140).

நாட்டுத் தலைவர்களையும் தன் ஆய்வுக்குக் கொண்டு வருகிறார் ஆசிரியர். "இப்பகுதியைப் படிக்கும்போது 'தந்தை பெரியாரே' கண்ணனாக நின்று பேசுவதுபோல் தோன்றுகிறது (பக்கம் 66) என்பது அவர் குறிப்பாகும்.

ஆசிரியர் ஆங்காங்குத் தந்துள்ள அடிக்குறிப்புகள் மிகப் பயனுடையன. "இதனால் சில மேதாவிகள் ஆங்கில இலக்கியங்

களை மட்டிலும் படித்துவிட்டு—இன்னும் சிலர் எதனையும் படிக்காமல்-இவர்கள் நெருப்பு என்றாலே வாய் வெந்துவிடும் என்று கருதும் அதி மேதாவிகள்—நமது இலக்கியங்களில் சிருங்காரம் ஒன்றே அதிகமாகத் தென்படுவதாயும், அவற்றி லுள்ள பச்சையான வருணனைகளைக் கண்டு அவ்விலக்கியங் களை அதிகமாக இகழ்கின்றனர்" (பக்கம் 137) என எழுதி அங்கு அடிக்குறிப்பில் யார் எனக் குறிக்காமல் திட்டவட்ட மாகக் குறிப்பிட முடியவில்லை என எழுதும் நெறியை ஆய்வு நெறியாளர் ஒத்துக்கொள்ள மாட்டார்கள்.

பேராசிரியர் டாக்டர் ரெட்டியாரின் 'கண்ணன் பாட்டுத் திறனைப்' பலரும் படித்து நற்பயன் பெறுவர் என்பதில் ஐயமில்லை. அவருடைய நடை தெளிவாக, நேராகச் செல்கிறது. வடமொழிச் சொற்கள் இருபபினும் அவை தத்துவங்களை விளக்கவே பயன்படுத்தப்பட்டுள்ளன. ஓட்டம் தடைபடவில்லை.

பல நூல்களைத் தமிழுலகிற்கு வழங்கிவரும் பேராசிரியர் மேலும் பல நல்ல நூல்களைப் படைத்து தமிழ்த் தொண்டாற்றி மென்மேலும் பேரும் புகழும் பெறத் தமிழன்னை தண்ணருள் சுரப்பாளாக.

சென்னை-600 006
27-9-82

கா. மீனாட்சிசுந்தரம்

# நூல் முகம்

*உருவாய் அறிவில் ஒளிர்வாய்—கண்ணா!*
*உயிரின் அமுதாய்ப் பொழிவாய்க் கண்ணா!*
*கருவாய் என்னுள் வளர்வாய்—கண்ணா!*
*கமலத் திருவோ டிணைவாய்—கண்ணா!*
*வருவாய், வருவாய், வருவாய், கண்ணா![1]*

—பாரதியார்

பாரதியாரின் கண்ணன் பாட்டு கவிதை இன்பத்தின் —பக்தி அநுபவத்தின் கொடுமுடிக்குப் படிப்போரைப்— —பாடி அநுபவிப்போரை—இட்டுச் செல்லும் ஓர் அற்புத இலக்கியப் படைப்பு. இதனைப் படித்து அநுபவித்த பிறகு என் உள்ளத்தில் குமிழியிட்டெழுந்த சில கருத்துகளே இந் நூலாக வடிவம் பெறுகின்றன. பாரதியாரின் நூற்றாண்டில் இந்நூல் உலாவரத் தொடங்குகின்றது. தமிழன்பர்கள் இதனை ஒரு விருந்தாக ஏற்று அநுபவிப்பார்களானால் அதனை நான் பெற்ற பேறாக மகிழ்வேன்.

> "இதன்(கண்ணன் பாட்டின்) ஆசிரியர் ஸ்ரீமான் சி. சுப்பிரமணிய பாரதியாரைத் தமிழ் நாட்டார் அறிவார்கள். ஆனால் அவர் பெருமையை உள்ளபடி அறிந்தவர்கள் மிகமிகச் சிலரே யாவர். ஸ்ரீமான் பாரதியார் ஒரு பெரிய மேதாவி; மகா பண்டிதர்; தெய்விகப் புலவர்; ஜீவன் முக்தர். இவர் தமிழ் நாட்டின் 'ரவீந்திர நாதர்'; இவர் எனது தமிழ்நாட்டின் தவப்பயன்...இந்த ஆசிரியரின் காலத்திற்குப் பின், எத்தனையோ

---

1. தோ. பா. வருவாய் கண்ணா!

நூற்றாண்டுகட்குப்பின், இவர் பாடல்களைத் தமிழ் நாட்டு மாதர்களும் புருஷர்களும் மிகுந்த இன்பத்துடன் படித்துக் களிப்படையும் காட்சியை யான் இப்பொழுதே காண்கின்றேன். இந்நூல் வாழ்க! என்னவர் வாழ்க!' எந்தாய் வாழ்க!!!'[2]

இது 'கண்ணன் பாட்டுக்கு' நெல்லையப்ப பிள்ளை எழுதிய முகவுரையின் பகுதி. பிள்ளையவர்களின் 'உபநிடத உண்மை' போன்ற கூற்றின் உண்மையை இன்று நாம் காண்கின்றோம்.

கண்ணன் பாட்டில் தெய்விகப் புலவர் காட்சி தருகின்றார். ஜீவன் முக்தராகத் திகழ்ந்த கவிஞர் தென்படுகின்றார். இவரைத் தமிழ் நாட்டின் தவப் பயனாகக் காண்கின்றோம்; உணர்கின்றோம். 'கண்ணன் பாட்டு' வாழ்கின்றது. 'இறவாத புகழுடைய புதுநூலாக' வாழ்கின்றது. அதனை இயற்றிய 'என்னவர்' வாழ்கின்றார். கவிஞரின் பெயரால் தமிழக அரசு எடுத்த பல்கலைக் கழகம் கவிஞரின் புகழுடம்பாகத் திகழ்கின்றது. அதில் 'எந்தாயும்' வாழ்கின்றாள்; 'புகழ் ஏறிப் புவிமிசை என்றும் இருப்பேன்' என்ற கவிஞரின் கூற்று உண்மை, வெறும் புகழ்ச்சி இல்லை.

இந்நூல் வெளிவரும் "பேறு' கிட்டுமோ என்ற ஐயம் முளைவிட்டது. கண்ணன் அருளால் 'சர்வோதயம்' உதயமாயிற்று. சர்வோதய இலக்கியப் பண்ணை என் கைப்படியை அன்புடன் ஏற்று வெளியிட்டது. இந்நிறுவனத்தின் அன்பைப் போற்றுகின்றேன்; நிறுவனத்தாருக்கு என் அன்புகலந்த நன்றியைப் புலப்படுத்திக்கொள்கின்றேன்.

இந்நூலை அழகுற அச்சிட்டும், மேலுறையைக் கண்கவர் வனப்புடனும் பக்தியுடனும் அச்சிட்டும்

---

2. முதற் பதிப்பின் முகவுரை.

கட்டமைத்துத்தந்த மாருதி அச்சகத்தாருக்கு என் நன்றியை யும் பாராட்டுதலையும் தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

டாக்டர் கா. மீனாட்சி சுந்தரம் பல இடங்களில் பணி யாற்றியபொழுது அவர்தம் புகழால் அவரை அறிவேன்; அண்மைக் காலமாக அவர்தம் சென்னை வாழ்க்கையால் எனக்கு அவரிடம் நெருக்கம் ஏற்பட்டது; நெருங்கிய நண்பரானார். நெருங்கிப் பழகுந்தோறும் இவரிடம் இயல்பாகவே அமைந்துள்ள நேர்மை, ஒழுங்கு, பெருமித தோரணை, நெஞ்சுரம், எளிமை இத்துணைக்கும் மேலாக அடக்கம் ஆகிய நற்குணங்களும் புலமையும் மிகுதிறமும் என்னைக் கவர்ந்தன. இவர் 'பண்புடையார் பட்டுண்டு உலகம்' 'உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே' என்ற பொன்மொழிகட்கு இலக்கியமாகத் திகழ்வதையும் கண்டேன். பாரதியாரின் நூல்களை ஆராய்ச்சிப் பட்டத் திற்கு முதன் முதலாக 'ஆய்வுப் பொருளாக' எடுத்து ஆய்ந்த பெருமை இவரைச் சாரும். இந்தப் பெருமையையே பற்றுக்கோடாகக் கொண்டு இந் நூலுக்கு 'அணிந்துரை' வழங்குமாறு வேண்டினேன். என் வேண்டுகோளை அன்புடன் ஏற்று அழகியதோர் அணிந்துரை நல்கிய என் கெழுதகை நண்பருக்கு என் இதயம் கலந்த நன்றி என்றும் உரியது.

இந்நூலை யான் எழுதி வெளியிட்டதற்குக் காரணம் என் இதயத்தில் 'கோயில் கொண்ட கோவலனே'—கண்ணனே— ஆவான். இவனே பாரதியார் இதயத்தில் வீற்றிருந்து அவரைக் கருவியாகக் கொண்டு தன்னைப் பாடுவித்துக் கொண்டான்; அப் பாட்டை என்னை அநுபவிக்கச் செய்து— என்னைக் கொண்டு—தன் புகழை மேலும் பரவச் செய்கின்றான்; நிலைநிறுத்திக் கொள்ளுகின்றான். எம்பெருமானின் தற்புகழ்ச்சி அவா நம்முடைய தற்புகழ்ச்சி அவாவைவிட விஞ்சி நிற்பது. சகஸ்ரநாமப் பிரியன் அல்லவா? இங்ஙனம் எனக்கு எல்லா நலன்களையும் நோயற்ற வாழ்வையும் ஈந்து என்னை இயக்கி நன்னெறிப்

படுத்திவரும் திருவேங்கடமுடையானை—வேங்கடக் கிருஷ்ணனை—மனம், மொழி, மெய்களால் வாழ்த்தி இறைஞ்சி வணங்குகின்றேன்.

கண்ணன் திருவடி
எண்ணுக மனமே
திண்ணம் அழியா
வண்ணம் தருமே[3]

—பாரதியார்

சென்னை - 600 040
செப்டம்பர் 25, 1982

ந. சுப்பு ரெட்டியார்

3. தோ. பா. கண்ணன் திருவடி

# உள்ளுறை

# வழிவழிக் கண்ணன்

தமிழ் மக்களின் பண்டைய சமயங்களுள் ஒன்று திருமாலைப் பரம்பொருளாகக் கொண்டு வழிபட்டுவந்த முறையாகும். பண்டுதொட்டே தமிழகத்தில், திருமால் சமயம் தோன்றி நிலைபெற்றது என்பதற்குத் தொல் காப்பியம் போன்ற தமிழ் முன்னூல்களே சான்றாக நிற்கின்றன. நிலத்தை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்று நான்காகப் பகுத்தும் அந் நிலங்களுக்குத் தெய்வங் களை வகுத்தும் போந்தவர்கள் ஆதித் தமிழர்கள். அவர்கள், காடு சார்ந்த முல்லையையும் அதன் தெய்வ மான திருமாலையும் முதற்கண் வைத்து சிறப்பித் துள்ளமை,

'மாயோன் மேய காடுறை உலகம்'[1]

என்ற தொல்காப்பிய நூற்பாப் பகுதியால் அறியக்கிடக் கின்றது. இதனால் 'நானிலம்' என்ற பெயரை இந்த நிலப் பகுதி பெறுவதற்கு முன்னரே திருமாலுக்கு உரிமை யும் தலைமையும் தமிழகத்தில் ஊன்றிவிட்டன என்பது தெளிவாகும். இந்த உரிமை பற்றியே சேக்கிழார் பெருமானும்,

1. தொல். பொருள். அகத்திணை-5

அங்கண் முல்லையின் தெய்வமென்று
அருந்தமிழ் உரைக்கும்
செங்கண்மால்[2]

என்று திருமாலைச் சிறப்பித்துப் பேசுவர். முல்லைக்குரிய மக்களை, ஆயர் ஆய்ச்சியர் என்று வழங்குவர் பண்டைத் தமிழர்கள். 'தென்னவன் தொல்லிசை நட்ட குடியொடு தோன்றிய நல்லினத்தவர்' என்று இலக்கியமும் இவரைப் போற்றி உரைக்கும். இவர்கள், யதுகுலத்தில் தோன்றித் தம் குலத்தில் வளர்ந்தருளிய கண்ணனைத் தம் குலக் தெய்வமாகக் கொண்டுள்ளனர் என்பதை நாம் அறிவோம். 'மாயோன்' என்ற முல்லைத் தெய்வம் திருமாலின் அவதாரமான கண்ணன் என்பதும் நமக்குத் தெரியும். மாயோன், கண்ணன் என்ற சொற்கள் 'கருநிற முடையோன்' என்ற ஒத்த பொருளுடையன. இந்தக் கண்ணனின் இறைமைப் பண்பின் காரணமாகவே இவனுக்கு உரிமையும் தலைமையும் இவனை வந்தடைந்தன என்பது நாம் நினைவிலிருத்தவேண்டிய ஓர் உண்மை.

மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பில்
தாவா விழுப்புகழ் பூவை நிலையும்[3]

என்பது 'பூவைநிலை' என்னும் புறத்துறையைக் கூறும் தொல்காப்பிய நூற்பாப் பகுதியாகும். இதில் ஆசிரியர் தொல்காப்பியனார் மாயோனின் பொருள்சேர் புகழ் களைப் பலபடச் சிறப்பித்துக் கூறுவதனாலும் இதனைத் தெளியலாம்.

இங்ஙனம் தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே கண்ணனைப் பரதெய்வமாகக் கொண்டு அவனது குழவிச்

2. பெரியபு. திருக்குறிப். 18

3. தொல். பொருள். புறத்திணை-5

செயல்களில், பிள்ளைப்பிராயத்தில் ஆற்றிய அருஞ்செயல் களில், தமிழ் மக்கள் ஈடுபட்டிருந்தனர் என்பதற்குத் தொல்காப்பியத்தில் வேறொரு சான்றும் உள்ளது. மானிடராகிய பெண்மக்கள் தம்மினத்து ஆண் மக்களிடமும் ஆண்குழவிகளிடமுமே யன்றி கடவுளரிடத்தும் கடவுட் குழவிகளிடத்தும் காமப்பகுதி செலுத்தற்குரியர் என்பதற் குத் தொல்காப்பியர் விதிகள் அமைத்துக் காட்டுவர்.

காமப் பகுதி கடவுளும் வரையார்
ஏனோர் மருங்கினும் என்மனார் புலவர்[4]
குழவி மருங்கினும் கிழவ தாகும்.[5]

என்ற நூற்பாக்களைக் காண்க. இஃது இத்தகைய தெய்வக் குழவியாகிய கண்ணனிடம் ஆயமகளிர் கொண்ட காதல் வெள்ளத்தை உட்கொண்டு கூறிய தாகவே கொள்ளற்பாலது. சிலப்பதிகாரம், ஆழ்வார்கள் அருளிச்செயல்கள் இவற்றில் அமைந்த காதற் பாக்கள் யாவும் ஆயர் பெருமக்கள் கண்ணனிடம் வைத்துள்ள காமப் பகுதியையே சுட்டி உரைப்பனவாகும்.

வாசுதேவனான இக் கண்ணனை, சங்கர்ஷண மூர்த்தி யான[6] பலதேவனுடன் கொண்டு போற்றிய முறை விந்திய மலைக்கு அப்பாலுள்ள வடபுலத்தில் ஒரு காலத்தில் மிகுபுகழ் பெற்றிருந்தது என்பதைப் பண்டைய வடநூல் களாலும் கல்வெட்டுகளாலும் தெளியலாம்.[7] இந்த

4. தொல். பொருள். புறத்திணை-23

5. மேலது-24

6. திருமாலின் ஐந்து நிலைகளில் ஒன்று 'வியூகம்' இங்கு இறைவன் வாசுதேவன் சங்கர்ஷணன், பிரத்தியும்னன் அநிருத்தன் என்று நான்காக வைத்துப் பேசப்படுவான். விவரம் 'தத்துவத் திரயம்' என்ற நூலில் காண்க.

7. Dr. Bhandarkar's *Vaishnavism Saivism and other Minor Religous Systems pp (3-4.)*

வழக்கு காலப்போக்கில் தென்னாட்டிலும் பரவி வழங்கியது. இதற்குச் சங்க இலக்கியங்கள் பலவும் சான்று பகர்வனவாகும். பலதேவனைப்பற்றித் தொல்காப்பியனார் கூற, அவருக்கு வாய்ப்பு நேரவில்லை. எனினும், நம்பி மூத்தபிரானைப் போற்றும் முறையும் இருந்ததென்பதற்குத் தொல்காப்பியத்தில் ஒரே ஒரு குறிப்பினைக் காணலாம். தொல்காப்பிய எழுத்ததிகாரத்தில் 'பனை' என்ற சொல்லுக்குமுன் வரும் சொற்கள் புணரும் முறையை,

> கொடிமுன் வரினே ஐ அவண் நிற்பக்
> கடிநிலை இன்றே வல்லெழுத்து மிகுதி.[8]

என்ற விதி விளக்கும். அதாவது, 'பனை' என்பதற்கு முன் 'கொடி' என்பது வருமொழியாக வருங்கால் ஏனையவைபோல ஐகாரம் கெட்டு அம்முச் சாரியை பெறாது ஐ நிற்ப வல்லெழுத்துப் பெற்றுப் புணரும் என்பதாகும். பனை+கொடி=பனங்கொடி என்று வராது; பனை+கொடி=பனைக்கொடி என்றே வரும். இங்ஙனம் தொல்காப்பியர் பனைக்கொடியைத் தனியாக எடுத்துக்கொண்டு விதி கூறுவதனால் அக்கொடி அக்காலத்து வழக்கு மிகுதி பெற்றிருந்தது என்பதை அறியலாம். இங்ஙனம் வழக்கு மிகுதிபெற்ற பனைக்கொடி பலதேவர்க்கு மட்டிலுமே உரியது. இதனால் சங்கர்ஷண வாசுதேவர்கள் வடபுலத்தைப் போலவே தமிழகத்தும் தொன்றுதொட்டு வழிபடப்பெற்று வந்த அவதார மூர்த்திகள் என்பது தெளிவாகும்.

இங்ஙனம் தமிழ் மக்களின் ஆதி தெய்வங்களுள் ஒருவரான கண்ணன், தாமே தனித்தும் நம்பி மூத்தபிரா

---

8. தொல். எழுத்து. உயிர்மயங்கியல்-83

னுடனும் நிகழ்த்தியனவாக அம் மக்கள் வழங்கிவந்த வரலாறுகள் பலவாகும். இவற்றுள் பல வடநூல் வழக்குப் பெற்றவை; எனினும் தமிழகத்திற்கே உரிய சில வரலாறு களும் உள்ளன; இவற்றிற்குப் பாரதம், பாகவதம் முதலிய புராண இதிகாசங்களில் ஆதாரம் காண்டல் அரிது. இதனால் கண்ணன் வழியினராய்த் தென் னாட்டில் குடியேறிய வேளிரும் அப்பிரான் வளர்ந்த ஆயர்பாடியராய் (கோகுலத்தவராய்) இங்கு வந்தேறிய ஆயரும் போன்ற பழந்தமிழ்க் குடிகளால் அவ் வரலாற்று வழக்குகள் இங்கும் வழங்கி நடைபெறலாயின என்று கொள்ளத் தட்டில்லை. இவ் வரலாறுகளில் சிறப்புடை யவை நப்பின்னைப் பிராட்டித் திருமணம், கண்ணன் குருந்தொசித்தது, குடக்கூத்தாடியது, ததிபாண்டனுக்கு வீடளித்தது முதலியனவாகும். இச் செய்திகள் சங்க இலக் கியங்கள், சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவக சிந்தாமணி, பழமொழி, ஆழ்வார் அருளிச் செயல்கள், பிள்ளைப் பெருமாள் அய்யங்காரின் அஷ்டப் பிரபந்தம் முதலிய நூல்களில் காணப்பெறுகின்றன. இத்தகைய வழக்கு களால் தமிழகத்தில் கண்ணனைப்பற்றிய வரலாறு தொன்றுதொட்டே வழிவழியாக இருந்துவருவதைத் தெளியலாம். இதனால்தான் பாரதியாரும் கண்ணனைப் பற்றி விரிவாகப் பாடியுள்ளார் என்று கருதவும் இடம் ஏற்படுகின்றது.

# இறைவனுடன் நமது உறவுகள்

எல்லாம் வல்ல எம்பெருமானாகிய சர்வேசுவரனுக்கும் ஆன்ம கோடிகளாகிய—அதாவது சீவான்மாக்களாகிய—நமக்கும் உள்ள உறவை அறிந்துகொள்வதே சம்பந்த ஞானம் என்று வழங்கப்பெறுவது. இந்தச் சம்பந்த ஞானம் இல்லாத காரணத்தினால்தான் நெடுங்காலமாக எம்பெருமானைவிட்டுப் பிரிந்து சம்சாரமாகிய பிறவிக் கடலில் ஆழ்ந்து தத்தளிக்கின்றோம்; துன்புறுகின்றோம். சர்வேசுவரனையும் நம்மையும்பொருத்திவைப்பது இந்தச் சம்பந்த ஞானமாகும். சம்பந்த ஞானமுடைய இடத்தில் எம்பெருமான் விரும்பியடைவான். ஆதலால், சம்பந்த ஞானம் அவன்மீது—அந்த எம்பெருமான்மீது—விருப்பம் கொள்வதற்கு உரியதாகின்றது. இந்த ஞானமில்லாத சன்மம்—பிறப்பு—பிறப்பென்று சொல்வதற்கே தகுதி யாவதில்லை.

இந்தக் கருத்தைத் திருமழிசையாழ்வார் மிக அற்புத மாகப் புலப்படுத்துகின்றார்.

நின்ற தெந்தை ஊர கத்து
இருந்த தெந்தை பாட கத்து
அன்று வெஃக ணைக்கி டந்த(து)
என்னி லாத முன்னெ லாம்

அன்று நான் பிறந்தி லேன்
　　பிறந்த பின் மறந்தி லேன்
நின்ற தும்இ ருந்த தும்
　　கிடந்த தும் என் நெஞ்சுளே[1]

இந்தப் பாசுரத்தின் கருத்தைத் தெளிவாக்க வேண்டியது இன்றியமையாததாகின்றது. உலகியலில் ஒரு நிகழ்ச்சியை நோக்குவோம். ஒருவன் கடன்பட்டிருக்கின்றான். அக் கடனைத் திரும்பப் பெறுவதற்காகக் கடன் கொடுத்தவன் வீட்டிலே வந்து கேட்கின்றான். அப்படி வருகின்றவன் முதலில் சில நாட்கள் நின்றவண்ணம் கேட்டுவிட்டுப் போய்விடுவான்; பலன் இருக்காது. அடுத்து வருகின்ற சில நாட்களில் வாங்கினவன் திண்ணைமீது உட்கார்ந்து கடனை நிர்ப்பந்தித்துவிட்டுப் போவான். இவ்வளவிலும் அவன் மிசையாவிடில் 'கடனைத் தீர்க்காவிடில் நான் போவதில்லை' என்று படுக்கையாகப் படுத்து நிர்ப்பந்திப் பான். இப்படியாக எம்பெருமானும் நம் போன்ற ஆன்ம கோடிகள் செலுத்தவேண்டிய கைங்கரியக் கடனைப் பெற்றுக்கொள்வதற்காக ஓரிடத்தில் (ஊரகத்தில்)[2] நின்று பார்க்கின்றான். மற்றோரிடத்தில் (பாடகம்)[3] வீற் றிருந்து பார்க்கின்றான். இன்னுமோரிடத்தில் (திருவெஃகாவில்)[4] சாய்ந்து பார்க்கின்றான். "இப்படிச் செய்த தெல்லாம் நான் எதிர்நோக்கி இல்லாத காலத்தில், நித்திய விபூதி, லீலா விபூதிகட்கு நாதனான எம் பெருமான் சம்சாரியான எனக்கு ருசி பிறவாத காலமெல் லாம் ருசி பிறப்பிப்பதற்காக நின்றான், இருந்தான், கிடந்

1. திருச்சந்த-64.
2. காஞ்சி உலகளந்த பெருமாள் சந்நிதியில்.
3. காஞ்சி பாண்டவ தூதர் சந்நிதியில்.
4. காஞ்சி சொன்னவண்ணம் செய்த பெருமாள் சந்நிதியில்.

தான். என்னிடம் ருசி உண்டாக்குகை அவனுக்குச் சாத்தியம் (பலன்); அதற்குச் சாதனம் (வழிமுறைகள்) நிற்றல், இருத்தல், கிடத்தல் என்றவை. பலன் கை புகுந்ததும்—என்னிடம் ருசி பிறந்ததும்—அவன் திவ்விய தேசங்களில் நிற்றல், இருத்தல், கிடத்தல்களைத் தவிர்த்து,

அரவத்து அமளியி னோடும்
அழகிய பாற்கட லோடும்
அரவிந்தப் பாவையும் தானும்
அகம்படி வந்து புகுந்து[5]

என்று பெரியாழ்வார் கருதுவதைப்போலே, அந்த விருப்புகளையெல்லாம் என் நெஞ்சிலே செய்தருளினான்" என்கின்றார். அடுத்த பாசுரத்தில்[6] "எம்பெருமான் திருவேங்கடத்தில் நிற்பதும், திருநாட்டில் (பரமபதத்தில்) இருப்பதும், திருப்பாற் கடலில் கிடப்பதும் தன்னோடு உண்டான முறையை அறியாது நான் ஆற்றலற்றிருந்த காலத்தில் தான், நான் முறையறிந்துப் (சம்பந்த ஞானம் பெற்றுப்) பரிமாறின பின்னர் அவ்வெம்பெருமானுடைய பரிமாற்றமெல்லாம் என் நெஞ்சில்—என் இதயத்தில்—நடைபெறுகின்றது" என்று மேலும் இதனை உறுதிப்படுத்திப் பேசுவர் ஆழ்வார்.

நம்மாழ்வாரும் இந்த சம்பந்த ஞானத்தின் பெருமையைத் திருவாய்மொழியில் குறிப்பிடுகின்றார்.

அடங்குஎழில் சம்பத்து
அடங்கக்கண்டு, ஈசன்
அடங்குஎழில் அஃது என்று
அடங்குக உள்ளே.[7]

---

5. பெரியாழ். திரு. 5. 2:10
6. திருச்சந்த-65
7. திருவாய். 1. 2 :7

"எம்பெருமானது ஐசுவரியம் அளவற்றது. இந்த ஐசுவரியம் நம் நாதனுடைய ஐசுவரியம் என்று அநு சந்தித்து, நாமும் அந்த ஐசுவரியத்தினுள் அடங்கவும் பெற்றால் அளவிட முடியாத விபூதியைக் கண்டு நாம் பின் வாங்க அவசியமும் இல்லை. எம்பெருமானுக்கும் நமக்கும் உள்ள உறவை—சம்பந்த ஞானத்தை —உணரவே கூச்சம் குலையும். சம்பந்த உணர்ச்சி உண்டாகும் அளவே வேண்டற்பாலது" என்பது இப் பாசுரத்தின் தேர்ந்த பொருளாகும். "எம்பெருமானது விபூதியிலுள்ள நாமும் ஒருவராக அடங்கப் பார்க்கவேண்டும். இதனைத் தெளிந்து நாம் கைங்கரியங்கள் செய்யவேண்டும்" என்பது கருத்து. இந்தப் பாசுர விளக்கஉரையில் உரையாசிரியர் காட்டும் கதையும் இந்தச் சம்பந்த ஞானத்தை அறிய நமக்குத் துணை செய்யும்; சம்பந்த ஞானம் என்ற கருத்து மனத்தில் பதியவும் வகை செய்யும்.

வணிகன் ஒருவன் தன் மனைவி கருவுற்றிருக்கும் காலத்தில் பொருள் தேடும்பொருட்டு வெளிநாடு செல்கின்றான்—இப்போது மலேயா, சிங்கப்பூர், துபாய் போன்ற வெளி நாடுகட்கு மக்கள் செல்லுவதுபோல. அவன் வெளிநாட்டிலிருந்தபோது மனைவி கருவுயிர்க்கின்றாள். மகனும் தக்க வயது அடைந்து தன் தந்தையாருடைய தொழிலாகிய வாணிகத்தையே மேற்கொள்ளுகின்றான். இவனும் வெளிநாடு சென்று பொருள் சேமிக்கின்றான். இருவரும் தத்தமக்கு வேண்டிய சரக்கு பிடித்துக்கொண்டு வந்து ஒரு பந்தலில் தங்குகின்றனர். அப் பந்தலில் உள்ள இடம் போதுமானதாக இல்லை. இருவரிடையேயும் இடம்பற்றி வாக்குவாதம் நிகழ்கின்றது. அவ்வமயம் இருவரையும் அறிவான் ஒருவன் வந்து தலையிட்டு 'இவன் உன் தந்தை; நீ இவன் மகன்' என்று அறிவிக்கின்றான். இருவரும் கீழ் இழந்த நாட்கட்கு

மனம் வருந்தி, இருவர் சரக்குகளையும் ஒன்றாகச் சேர்க்கின்றனர். தந்தை காப்பாற்றுகின்றவனாய், மகன் காப்பாற்றப்படும் பொருளாய்க் கலந்துவிடுகின்றனர். இருக்கு வேதத்திலும் இக்கருத்து காணக் கிடக்கின்றது. "சீவான்மாவும் பரமான்மாவும் உடலாகிய ஒரு மரத்தைப்பற்றியிருந்தால், சீவான்மா இருவினைப் பயன்களை நுகரா நிற்கின்றது; பரமான்மா அவனை நுகர்வித்து விளங்கா நிற்கின்றது" என்பது. இறைவன் ஏவுகின்றான்; நாம் ஏ வ ப் ப டு ம் பொருளாகின்றோம். இதனையறிவதே சம்பந்த ஞானம் ஆகும்.

இதனை மேலும் விளக்கலாம். இந்த ஐசுவரிய மெல்லாம் வகுத்த சேஷியாகிய எம்பெருமானுடைய ஐசுவரியம் என்று நினைத்தால் நாமும் அந்த ஐசுவரியத்துடன் சேர்கின்றோம். போக பூமியாய் இருப்பது நித்திய விபூதி; நமது கர்மம் காரணமாக எம்பெருமானால் ஏவப்படுவதாய், அவன் விளையாட்டிற்காக இருப்பது லீலா விபூதி; இந்த உலகம். இதனை 'அவன் உடைமை' என்று நினைக்கத் தொடங்கும்போதே இதில் கர்மம் காரணமான தன்மை தோன்றாது; அவனுடைமை என்னும் தன்மையே தோன்றும்.

இதனுள் அடங்குகையாவது, 'தொன்று தொட்டே அவன் விபூதியில் சேர்ந்தேயன்றோ இருக்கின்றேன்' என்று உணர்வது. அதாவது, உடைமையுடையவன் என்னும் சம்பந்த ஞானம் அடியாக நாமும் அவன் விபூதியில் ஒருவனாய்ச்சேர்தல் வேண்டும் என்பது. நாம் கடலில் புக்க துரும்பு என இரண்டு தலையிலும் நினைவின்றி இருக்க, அத்துரும்பு திரைமேல் திரையாகத் தள்ளுண்டு போந்து கரையில் சேர்கின்றதைப்போன்று, நாமும் ஐசுவரிய அலையால் தள்ளுறமாட்டோமா என்று கருதலாம்

கடல் அளவிடக் கூடாததாக இருப்பினும், அதனுள் மீன் முதலிய உயிர்கள் தம் விருப்பப்படிப் புகலாமன்றோ? அது போன்று நாமும் சம்பந்த ஞானம் அடியாகக் கிட்டலாம். சம்பந்த ஞானம் அற்ற துரும்பை யன்றோ கடல் கரையிலே ஏறத் தள்ளுகின்றது. ஆயின், இந்தச் சம்பந்த ஞானத்தைப் பிறப்பித்தல் ஆசாரியனுடைய செயலாக அமைகின்றது.

இங்ஙனம் எம்பெருமானுக்கும், நமக்கும்—பரமான் மாவுக்கும் சீவான்மாவுக்கும்—உள்ள சம்மந்தம் ஒன்பது வகைப்படும். இந்த ஒன்பது வகை சம்பந்தங்களும் வைணவ மந்திரங்களில் மூன்றனுள் ஒன்றாகிய திருமந்திரத் தினுள் பெறப்படுகின்றன என்பது வைணவ சமயக் கோட்பாடு. 'ஓம் நமோ நாராயணாய' என்பது திருமந்திரம். இதில் 'ஓம்', 'நமோ', 'நாராயணாய' என்று மூன்று பதங்கள் அடங்கியுள்ளன. இவற்றுள் முதற் பதமாகிய பிரணவம் அ, உ, ம என்ற மூன்று எழுத்து களைக் கொண்டது. இவற்றுள் அகாரம் (1) தந்தை—மகன் (பிதா—புத்ர), (2) காப்பாற்றப் படுபவன்—காப்பவன் (ரட்சிய—ரட்சக) என்ற சம்பந்தங்களைக் கூறு கின்றது. அகாரம், நாராயண பதத்தின் சுருக்கமாகும். இவ்வகாரம், 'ஆய' என்னும் நான்காம் வேற்றுமையை (சதுர்த்தியை) இறுதியில் பெற்றுள்ள 'நாராயணாய' (நாராயண + ஆய) என்னும் பதத்தின் சுருக்கமாகும். ஆதலின், நாராயண பதத்திலுள்ள வேற்றுமையுருபு இவ் வகாரத்தில் மறைந்து கிடக்கின்றது என்பதை ஊகித்தல்

---

8. திருமந்திரம், துவயம், சரம சுலோகம் என்பன வைணவமந்திரங்கள்—இவற்றின் விளக்கத்தை பிள்ளையுலக ஆசிரியர் அருளிய முட்சுபடி என்ற நூலில் காண்க. டாக்டர் ந. சுப்புரெட்டியாரின் 'முத்தி நெறி' என்ற நூலிலும் இவை கடித வடிவில் தெளிவாக விளக்கப்பெற்றுள்ளன.

வேண்டும். இதனை 'லுப்த சதுர்த்தி' என்று கூறுவர் வடமொழியாளர். இந்த லுப்த சதுர்த்தியாகிய 'ஆய' என்பது (3) அடிமை—ஆண்டான் (சேஷ—சேஷி) என்ற சம்பந்தத்தைக் கூறுகின்றது. உகாரம் (4) நாயகன்—நாயகி : (பர்த்ரு—பார்யா) சம்பந்தத்தைச் சொல்லுகின்றது. மகாரம் (5) அறிபவன்—அறியப்படும் பொருள் (ஜ்ஞாத்ரு—ஜ்ஞேய) என்ற சம்பந்தத்தைக் குறிப்பிடுகின்றது. நம்ஸ்ஸு (6) சொத்து—சொத்துக்குரியவன் (ஸ்வஸ்வாமி) என்ற சம்பந்தத்தை உரைக்கின்றது. நாரபதம் (7) உடல்—உயிரையுடையவன் (சரீர—சரீரி) சம்பந்தத்தைக் கூறுகின்றது. அயன பதம் (8) தாங்குகிறவன்—தாங்கப்படும் பொருள் (ஆதார—ஆதேய) சம்பந்தத்தைத் தெரிவிக்கின்றது. ஆய பதம் (9) போகத்தை அனுபவிக்கிறவன்—போகப் பொருள் (போக்த்ரு—போக்கியம்) என்ற சம்பந்தத்தைச் சொல்லுகின்றது. ஆக, திருமந்திரம் இவ்வாறு ஆன்மாவுக்கும் இறைவனுக்கும் உள்ள ஒன்பது வித உறவுமுறைகளைக் கூறித் தலைக்கட்டுகின்றது. ஓர் ஆன்மாவுக்கும் மற்றோர் ஆன்மாவிற்கும் கர்மம் காரணமாக நேரிடும் 'தந்தை—மகன்' போன்ற உறவுகள் அக்கர்மத்தின் தொடர்பு நீங்கும்போதெல்லாம் மாறிவிடுதல் போல் நீங்காமல்,

குறைவு ஒன்றும் இல்லாத
கோவிந்தா! உன்தன்னோடு
உறவேல் நமக்கு இங்கு
ஒழிக்க ஒழியாது[9]

என்று ஆண்டாள் கூறுவதுபோல், இந்த ஒன்பது வகை சம்பந்தங்கள் என்றும் அழியாதிருக்கும். இந்த உறவு முறைகளைப் பிள்ளை உலக ஆசிரியர் அருளியுள்ள 'நவவித

9. திருப். 28

சம்பந்தம்'[10] என்னும் நூலில் விரிவாக விளக்கப்பெற்றுள்ளது. இந்த உறவு முறைகளை ஆழ்வார் பாசுரங்களிலும் காணலாம்.

கண்ணன் பாட்டு' என்றதொரு பகுதியில் 23 பாடல்கள் உள்ளன. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்துள் பெரியாழ்வார் அருளிச் செய்த திருப்பாசுரங்களின் அநுசந்தானம் இப் பாடல்கள் முகிழ்ப்பதற்குப் பாரதிக்குக் கைகொடுத்து உதவியுள்ளது என்ற வ. வெ. சு. அய்யர் கருதுவது[11] முற்றிலும் ஒப்புக்கொள்ளத் தக்கதாகவே உள்ளது. இப் பாட்டின் முதற்பதிப்பின் முகவுரையில் நெல்லையப்ப பிள்ளையவர்கள் "பாரதியாருக்குக் கண்ணபிரான்மீதுள்ள அதிதீவிர பக்தி காரணமாக இந்நூலிலுள்ள பாடல்கள் வெளியாயின" என்று கூறியிருப்பதிலும் உண்மை இல்லாமல் இல்லை.

பெரியாழ்வாரின் கவிதையின் அழகு அவருடைய சமய வேட்கையிலிருந்தும் ஆழ்ந்த பக்தியிலிருந்தும் ஒளி பெற்றுள்ளது; இவர்தம் பக்திச் சுவை ஆழ்ந்த அநுபூதி நிலையைச் சார்ந்தது.

பொன்னைக் கொண்டு உரைகல்மீதே
நிறம்எழ உரைத்தாற்போல
உன்னைக் கொண்டுஎன் நாவகம்பால்
மாற்றின்றி உரைத்துக் கொண்டேன்
உன்னைக் கொண்டு என்னுள்வைத்தேன்
என்னையும் உன்னில் இட்டேன்[12]

என்றும்,

---

10. பதினெட்டு இரகசிய நூல்களில் இஃது ஒன்று.
11. கண்ணன் பாட்டு—இரண்டாம் பதிப்பின் முன்னுரை.
12. பெரியா. திரு. 5.4:5

உன்னுடைய விக்கிரமம்
ஒன்றுஒழியாமல் எல்லாம்
என்னுடைய நெஞ்சகம்பால்
சுவர்வழி எழுதிக்கொண்டேன்[13]
(விக்கிரமம் - வீரச்செயல்கள்.)

என்றும்,

பனிக்கடலில் பள்ளிக்கோளைப்
பழகவிட்டு ஓடிவந்து, என்
மனக்கடலில் வாழவல்ல
மாயமணாள நம்பீ![14]

என்றும் கூறுவதில் இந் நிலையைக் காணலாம். ஆனால், பாரதியின் பக்திச்சுவை இந்நிலையைச் சார்ந்ததல்ல; அவருடைய உணர்ச்சி கவிதை ஆற்றலினின்றும் கனிந்துள்ளது. இந்த இயலில் தொடக்கத்தில் குறிப்பிட்ட சம்பந்த ஞானம் இவருக்கு வழிகாட்டியிருக்க வேண்டும் என்று நினைக்கத் தோன்றுகின்றது. தவிர, இஷ்ட தெய்வத்தை—வழிபடு கடவுளைப்—பல்வேறு பாவனைகளால் வழிபடலாம் என்று நம் நாட்டு பக்திப் பனுவல்கள் கூறுகின்றன.ஆழ்வார் பாசுரங்களிலும், எம்பெருமானைத் தாய், தந்தை, குரு, தெய்வம் என்று பேசப்பெற்றிருப்பதையும் காணலாம். பாரதியாரும் இவற்றையெல்லாம் மனத்திற்கொண்டு கண்ணனைத் தந்தையாகவும் தாயாகவும், தோழனாகவும், சீடனாகவும், அரசனாகவும், காதலியாகவும், காதலனாகவும், சற்குருவாகவும், தெய்வமாகவும் பாவித்துப் பாடியுள்ளார் என்று கூறுவதில் இருவேறு கருத்திற்கு இடம் இல்லை. இனி வரும் இயல்களில் இப் பாடல்களை ஆராய்வோம். ஒரு சில பாடல்களில் வடமொழி இலக்கணத்தை யொட்டி ரஸம் (சுவை) பற்றிய குறிப்புகள் உள்ளன. இக் குறிப்புகளையும் விளக்குவோம்.

13. மேலது 5. 4:6
4. மேலது 5. 4:9

இயல்—3

## ரஸத்தைப்பற்றி ஒரு சிறு விளக்கம்

உலகப் பொருள்களைக் காண்பது ஒரு நிலை; அவற்றைக் கண்டு இன்புறுவது மற்றொரு நிலை. ஒவ்வொருவரும் பொருள்களைக் கண்டு மகிழ்வதற்கும், மகிழாது இருப்பதற்கும் அவரவருடைய மன நிலையே காரணமாகும். மனத்தின் போக்கும் ஒரு நிலையிலிருப்பதில்லை. அஃது இன்பமுற்றிருக்கும்போது உலகமே இன்பமயமாகத் தோன்றும்; துன்பமுற்றிருக்கும்பொழுது உலகம் துன்பமயமாகக் காட்சியளிக்கும். ஆனால் மனம் இன்பத்திலும் துன்பத்திலும் நிலைத்திருப்பதில்லை! அது பொருள்களின் நிலையைப் புறக்கணித்து இன்ப துன்பங்களை அநுபவிக்கின்றது. இவ்வாறு மனம் தொன்று தொட்டு எத்தனையோ பொருள்களை அநுபவித்திருக்கின்றது; மனம் அப்பொருள்களை அநுபவிக்கின்றபொழுது அஃது அநுபவித்தவாறு அப்பொருள்கள் தமது உருவத்தை நம் மனத்தில் செதுக்கிவிட்டுப் போகின்றன. பிறகு மனம் மீண்டும் அப் பொருள்களைக் கான நேரிடுங்கால் அவை முன் அநுபவித்த—சுகம் அல்லது துக்கம்—உணர்ச்சியைத் தட்டி எழுப்புகின்றன. இவ்வாறு மனத்தில் செதுக்குண்டிருக்கும் உணர்ச்சியைத்தான் அறிஞர்கள் வாஸனை என்று கூறுகின்றனர். வெளியில் பொருள்களைக் காணும்பொழுது உள்ளே உறங்கிக் கிடக்கும் அப் பொருள்

களைப் பற்றிய வாஸனை மலருகின்றது. அவ் வாஸனைக் கேற்றவாறு நாம் உலகப் பொருள்களை நல்லவை என்றும் தீயவை என்றும் கொள்ளுகின்றோம். எல்லாவற்றையும் இன்பமாக உணரும் நிலை மனத்திற்குக் கிட்டிவிட்டால் அது பெறற்கரிய பேறாகும். அந் நிலைகொண்ட மனம் வாய்க்கப் பெற்றவனே கவிஞன். யாவற்றையும் ரஸமாய்க் கண்டு உணரும் உள்ளத்தையுடையவனே சிறந்த கவிஞன் என்பது அறிஞர் கருத்தாகும்.

இறையநுபவத்திற்கு அடுத்த நிலையில் வைத் தெண்ணக்கூடியது இலக்கியச் சுவையாகும். இலக்கியச் சுவையில் ஈடுபட்டு மனத்தை அதில் பறிகொடுத்த புலவர் ஒருவர்,

> இருந்தமிழே உன்னால் இருந்தேன்; இமையோர்
> விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்

என்று பேசுகின்றார். தம் வாழ்நாள் முழுவதும் தமிழ் இலக்கியத் தேனை மாந்திய பாவேந்தர்,

> கன்னற்
> பொருள் தரும் தமிழே நீஓர்
> பூக்காடு; நானோர் தும்பி

என்று தம் அநுபவத்தை வெளியிடுகின்றார்.

நாம் ஆழ்ந்து சிந்தித்தால் 'சுவை' (ரஸம்) என்பது ஒரு புதிய கருத்தன்று என்பது தெளிவாகும். வண்ணப்படத்தில் வரையப்பெற்ற பன்றி ஒன்று சேற்றில் மூழ்கி வெளியேறிய தோற்றத்தை அப்படியே ஓவியர் காட்டுவதாக வைத்துக்கொள்வோம். அதைப் பார்க்கும் நாம்

1. தமிழ்விடு தூது—கண்ணி-151
2. அழகின் சிரிப்பு—தமிழ்—செய். 10

அதனையே பன்முறை உற்று நோக்கி ஒருவித இன்பத்தை அடைவோம் அல்லவா? ஆயினும், பன்றி ஒன்று சேற்றில் புரண்டு எழுந்து, சேறும் அழுக்குமாக நம் எதிரில் தோன்றினால் நாம் அக்காட்சியைக் கண்டு இன்பம் அடைகின்றோமா? இல்லையன்றோ? சில சமயம் அக்காட்சியைக் காணவும் சகியாமல் அருவருப்புடன் முகத்தைக்கூட வேறு பக்கமாகத் திருப்பிக் கொள்ளுகின்றோமன்றோ? அதுவும் சேற்று நாற்றமும் வீசத்தொடங்கினால் சொல்ல வேண்டியதில்லை. இதிலிருந்து பெறப்படும் உண்மை என்ன? கலை நமக்கு ஊட்டுவது ஓர் இன்ப உணர்ச்சியின் விளைவு என்பதை நாம் அறிகின்றோ மன்றோ? இதனையே இலக்கண நூலார் 'சுவை' (ரஸம்) என்று பெயரிட்டுள்ளனர். சுவையை ஒன்பது வகையாகப் பிரித்தும் காட்டியுள்ளனர். 'நவரஸம்' என்று பேசப்படுவதை நாம் கேள்வியுற்றிருக்கின்றோ மல்லவா? இந்த ஒன்பதிலும் அவர்கள் எல்லாவித உணர்ச்சிகளின் விளைவுகளையுமே அடக்கியிருப்பதுதான் வியப்பினும் வியப்பாகும். நம்மவர்கட்கு இதில் சிறிதேனும் சிரமம் இல்லை. ஏனெனில், இசையினை ஏழே சுரத்தின் சேர்க்கையாக உணர்த்திய அதிசயத்தை எந்த நாட்டில் காணமுடியும்?

பாரதியார் கண்ணன் பாட்டின் சிலவற்றில் ரஸங்களைப்பற்றிய குறிப்புகள் தந்துள்ளார். இவர் இக்குறிப்புகளை வடநூலார் கொள்கையினை யொட்டித் தந்துள்ளார்போல் தோன்றுகின்றது. அவர் பாடல்கள் அனைத்தையும் ஆழ்ந்து கற்றால் சங்க இலக்கியங்களையோ, தொல்காப்பியத்தையோ எங்கும் குறிப்பிட்டதாகத் தெரியவில்லை. காசியில் வாழ்ந்த காலத்துப் பாரதியார் வடமொழியை ஆழ்ந்து கற்றிருத்தல் வேண்டும். வடமொழி இலக்கியங்களை நன்கு சுவைத்திருத்தல்; வேண்டும். ஆகவே, ரஸம் பற்றி அவர் தந்துள்ள குறிப்பு

களைச் சரிவரத் தெரிந்துகொள்ளவேண்டுமாயின், ரஸம் பற்றி வடமொழி இலக்கண நூலாரின் கருத்துகளை ஓரளவு அறிந்துகொள்ளவேண்டும். எனவே, அவ்விலக்கணப்படி சுவைகளின் இயல்பையும் அவை உண்டாகும் முறையினையும் விளக்குவேன்.

மக்கள் உள்ளத்தில் ஒவ்வொருகால் எழும் உளவேறுபாடு பாவம் எனப்படும். பாவங்களுள் சில நிலைபெற்றிருக்கும். பல சிறிது நேரம் நின்று மறையும். தனக்கு ஒற்றுமையுடையனவும் வேற்றுமையுடையனவுமான பிற பாவங்களால் கேடுறாமல்[3] ரஸமாகிச் சமையும் அளவும் நிலை நிற்கும் பாவம் ஸ்தாயி பாவம் (நிலையான பாவம்) எனப்படும். அது காதல், சோகம் முதலாக ஒன்பது வகைப்படும். அதனைப் பின்னர் விளக்குவேன். உலகியலில் உண்டாகும் காதல் முதலியவற்றிற்குக் காரணமாயும் காரியமாயும் துணைக்காரணமாயும் இருப்பவை கவிஞனின் வாக்கிலும் நடிகனின் அபிநயத்திலும் அறிவிக்கப்படும்போது, முறையே விபாவம் (நன்கு தோன்றச் செய்வது) என்றும், அனுபாவம் (விபாவத்துடன் இயைந்துள்ளது) என்றும், சஞ்சாரி பாவம் (துணை செய்யும்

---

3. ஒற்றுமையுடைய பாவத்தால் கேடுறாமல் நிலைபெறுதலாவது ; ஓர் அழகிய மாதினைக் கண்டு அவளிடம் காதல் கொண்டானொருவன், பின்னர் அவளைவிட அழகினையுடைய வேறொரு மாதினைக் காணும்போது பின்னவள் பால் காதல் செலுத்தாமல், முன்னைய மாதின் நினைவுண்டாகி, அவள்பால் காதல் கொள்வது. வேற்றுமையுடைய பாவத்தால் கேடுறாமல் நிலைபெறுதலாவது: ஒரு மகள்பால் காதலித்தான் ஒருவன் பின்னர் இளமகள் ஒருத்தியின் சாவு, பிரிவு முதலியவற்றைக் கண்டவிடத்தும் 'காயமே இது பொய்யடா, காற்றடைத்த பையடா'' என்றவாறு அவற்றால் சோகமும் வெறுப்பும் உண்டாகி முன் காதலிக்கப் பெற்றவளிடத்து முன்னைய காதல் கெடாதிருப்பது.

உணர்வுகள்—இது நிலைபேறில்லாத பாவம்) என்றும் வழங்கப் பெறும். அஃதாவது:

காரணம்—விபாவம்
காரியம்—அனுபாவம்
துணைக்காரியம்—சஞ்சாரிபாவம்

என்று வழங்கும். இந்த விபாவ அனுபாவங்களால் வெளிப்படுகின்ற ஸ்தாயி பாவமே ரஸம் அல்லது சுவை எனப் பெயர் பெறும்.

மேற்கூறிய விபாவம் இருவகைப்படும். அவை 'ஆலம்பன விபாவம்'[4] என்றும், 'உத்தீபன விபாவம்'[5] என்றும் பெயர்களைப் பெறும். ஒருவரின் காதல் முதலிய உள்ள நிகழ்ச்சிக்கு எப்பொருளின் சார்பு காரணமோ அப் பொருள் அதற்கு 'ஆலம்பனம்' எனப்படும். எவ்வாறெனின் தலைவியின் உள்ளத்துள்ள காதலுக்குத் தலைவனும், தலைவனின் உள்ளத்துள்ள காதலுக்குத் தலைவியும் 'ஆலம்பன விபாவம்' ஆகும். அங்ஙனமே, தலைவியின் உள்ளத்துள்ள சோகத்திற்குத் தலைவனின் மரணமும் தலைவனின் உள்ளத்துள்ள சோகத்திற்குத் தலைவியின் மரணமும், 'ஆலம்பன விபாவம்' ஆகும் என அறிதல் வேண்டும். மேற்கூறியவாறு தோன்றிய காதல் முதலிய வற்றை வளர்த்து விளங்கச் செய்வது 'உத்தீபன விபாவம்' எனப்படும். அவர்களுடைய உருவின் சிறப்பு, குணநலன், செயல், அணிகலன் முதலியனவும், தென்றல், நிலா, கடலொலி முதலியனவும் 'உத்தீபன விபாவம்' ஆகும்.

---

4. ஆலம்பன விபாவம்; ஆலம்பனம் - பற்றுக்கோடு; விபாவம் - தூண்டல்; அதாவது, பற்றுக்கோடாய தூண்டல்.

5. உத்தீபன விபாவம் : உத்தீபனம் - கிளர்த்தல்; விபாவம் - தூண்டல்; அதாவது, கிளர்த்தும் தூண்டல்.

இவற்றையே தொல்காப்பியர் செல்வம், புலன், புணர்வு, விளையாட்டு முதலியனவாகக் குறிப்பிடுவர்.[6]

இனி, காரியமாகிய அனுபாவமும் இரண்டு வகைப் படும். ஒன்று அகத்தது: மற்றொன்று புறத்தது. அந்தக் கரணத்தைச் சார்ந்தனவாகிய ஸ்தம்பம், பிரளயம் முதலியவை முதற் பிரிவிற்குரியவை; அவை சாத்விக பாவம் எனப்படும்.[7] கடைக்கண் நோக்குதல் முதலிய செய் கைகள் இரண்டாம் பிரிவைச் சேர்ந்தவை. காதல் முதலிய ஸ்தாயி பாவங்களைத் துணைக் காரணமாய் நின்று வளர்க்கின்ற நலிவு, நினைவு, விரைவு முதலியன சஞ்சாரி பாவம் எனப்படும்; இதனை வியபிசாரி பாவம் என்று கூறு தலும் உண்டு. இஃது அரசனைப் பின்தொடரும் ஏவலர்

6. மெய்ப் - நூற்பா 3 முதல் 11 முடிய நந்நான்காகப் பிரித்துக் கூறியவை. ஆசிரியர் தொல்காப்பியனார் கூறும் முதற்பொருளும் கருப்பொருளும் உத்தீபன விபாவம் ஆகும். இவை வரும் சங்கப்பாடல்களை நோக்கி இதனை அறிய லாம்.

7. இது எட்டுவகைப்படும் : 1. ஸ்தம்பம் - செயலற்று நிற்றல்; 2. பிரளயம் - மூர்ச்சித்தல்; 3. ரோமாஞ்சம் - மயிர்க்கூச்செறிதல்; 4. சுவேதம் - வியர்த்தல்; 5. வைவர்ண்யம் - நிறமாற்றம்; 6. வேபது - உடல் நடுக்கம்; 7. அஸ்ரு - கண்ணீர் உகுத்தல்; 8. வைஸ்வர்யம் - குரல் மாறுபாடு.

இந்த மெய்க்குறிகளை விறல் அல்லது சத்துவம் என்று வழங்குவர் இலக்கண நூலார். இது பத்துவகைப்படும். அவை மெய்ம்மயிர்சிலிர்த்தல், கண்ணீர் வார்தல், நடுக்கமெய்தல், வியர்த்தல், தேற்றம், களித்தல், விழித்தல், வெதும்பல், சாக்காடு, குரல் சிதைவு என்பவனாகும். அவ்விறல் சுவை களிலே மனக்குறிப்பு உளதாயவழி உடம்பிலே தோற்றும்; உடம்பினும் முகத்து மிகத்தோற்றும்; முகத்தின் மிகத் தோற்றும் கண்களில்; கண்ணின் மிகத்தோற்றும் கண்ணின் கடையகத்து. இவை எட்டென்பது வடநூலார் மதம். (சிலப். பக் 84. உ. வே. சா. அய்யர் பதிப்பு).

போலவும், கடலில் பிறக்கும் அலைகள் போலவும் ஸ்தாயி பாவங்களைப் புலப்படுத்தி நிற்கும். தொல்காப்பியர் கூறும் புதுமுகம் புரிதல்[8] முதலியனவும், கூழைவிரித்தல்[9] முதலியவும் அனுபாவம் என்ற வகையினுள் அடங்கும்.

ஒரு நாடகம் நடிக்கும்போது அவையிலுள்ளோர் தலைவன் தலைவியரின் செயல்கள் யாவற்றையும் கண்டு களித்து மெய்மறந்து ஆனந்தக் கண்ணீர் பெருக்குவர். அதற்குக் காரணம் அவையோர் அந்த நடிப்பில் உண்டான சுவையை உணர்ந்ததனால் ஆகும் என்பது அறியத்தக்கது. அவ்வாறே கவிஞன் ஒருவன் தன் காவியத்தில் தலைவன் தலைவியரை வருணிக்க, அவற்றை உணர்ந்து படிப்போர் சுவையை உட்கொண்டு மகிழ்வர். ஆகவே, சுவையை அநுபவிக்க விபாவம், அனுபாவம், முதலியன இன்றியமையாதவை என்பது பெறப்படுகிறது.

இவ்வாறு தோன்றி, தெளிவாகி, வளர்ந்து வருகின்ற காதல் முதலிய பாவங்கட்கு நல்லறிஞர் உள்ளத்தில் உண்டாகும் பிரதி பிம்பமே 'ரஸம்' அல்லது 'சுவை' என்று கொள்ளல் வேண்டும். தூய வெண்ணிறத்தனவாகிய ஞாயிற்றின் கதிர்கள் செந்நிறக் கண்ணாடியில் படும்போது அவற்றிற்குச் செந்நிறம் உண்டாதல்போன்று காரணம் முதலியவற்றிற்கும் காதல் முதலியவற்றிற்கும் பிரதிபலிக்கச் செய்யும் பொருளின் தன்மையை அனுசரித்துச் சில சிறப்பான வேறுபாடுகள் உண்டாகின்றன அதனால் காரணம் முதலியவை விபாவம் முதலான நிலையில் இன்ன மனிதர், இன்ன நேரம், இன்ன இடம் இவை போன்ற சிறப்பியல்புகளை விட்டுப் பொதுவாய வடிவில் அமைகின்றன. அவ்வாறே ஸ்தாயி பாவங்களுள் சோகம்

8. மெய்ப். நூற். 13.

9. ஷை நூற் 14.

இளிவரல் முதலிய மாறுபட்ட உளவேறுபாடுகளும் அனுகூல பாவங்களாக அமைகின்றன. அதனாலே, கருணம் (சோகத்தால் உண்டாவது) பீபத்ஸம் (இழிவரலால் உண்டாவது) முதலிய ரஸங்களிலும் நமக்குச் சுவையும் ஈடுபாடும் உண்டாகின்றன. மகாகவி நீலகண்ட தீட்சிதர் "நிர்வேதம் (விரக்தி), பயம், சோகம், ஜுகுப்ஸை (அருவருப்பு) முதலியவைகளும் இலக்கியங்களில் ரஸத் தன்மையன ஆகின்றன" என்று கூறியிருப்பது ஈண்டு அறியத்தக்கது.

நல்லறிவாளன் தன் தூய உள்ளத்தில் இந்த விபாவம் முதலியவைகளை மீட்டும் மீட்டும் நினைக்கும் செயலுக்குச் சுவைத்தல் (சர்வணம்) என்று பெயர். இவ்வாறு சுவைக்கும் நிலையில் கரும்பின் துண்டிலிருந்து இனிப்புச் சுவை உண்டாதல் போன்று விபாவம் முதலியவற்றிலிருந்து சிருங்காரம் முதலிய ரஸங்கள் தோன்றுகின்றன. காதல் முதலிய உளவேறுபாடுகள் நல்லறிவாளருள்ளத்தில் ஆதிகாலம் முதலே வாஸ்னா ரூபமாய் படிந்துள்ளன. அவற்றை விபாவம் முதலியன எழுப்பிவிடுகின்றன. என் போலவோ எனின், பொருள்களில் அமைந்து கிடக்கின்ற நிலையியல் மின்சாரத்தை (Statical electricity) தேய்த்தல் வெளிப்படுத்துவது போல என்று கூறலாம். இவ் விபாவம் முதலியவை ஒருங்கு சேர்ந்து உண்டான சிறப்பியல் செயலால் பூர்வ வாஸனைக்கு எழுச்சி வருவதனோடு உள்ளம் இராஜஸ, தாமஸ குணங்கள் அகலப்பெற்று, சுத்த சத்துவமாய்ச் சமைகின்றது. ஆன்மா அஞ்ஞானத் திரையினின்று நீங்கிச் சித்பிரகாச ஆனந்த ரூபமாய் விளங்குகின்றது. இத்தகைய சத்துவ நிலை அடைந்த உள்ளத்திற்கு இத்தகைய ஆத்தும காட்சியாய்ப் பொருளாகின்ற அநாதி வாஸனா ரூபமாகிய காதல் முதலிய பாவமே ரஸம் என்று அறுதியிடப் பெற்றுள்ளது.

ரஸப்பாகுபாடு : நம்முடைய பேச்சும் எழுத்தும் உணர்ச்சியுடன் நின்று விடுகின்றன. ஆகவே, ரஸத்தைப் பாகுபாடு செய்வது இயலாததாகின்றது. சுவை நிறைந்த மாம்பழத்தைத் தின்ற ஒருவன் அதன் சுவையைப்பற்றிப் பலவாறு வருணிக்கலாம். ஆனால் அதன் சுவையை அவன் பிறரால், உணரும்படி செய்தல் இயலாது. பிறரும் அம் மாம்பழத்தைத் தின்று சுவைத்தாலன்றி, அதன் சுவையை உணரமுடியாது. ரஸமும் அந்த வகையைச் சார்ந்ததாகவே கொள்ளவேண்டும். ரஸம் ஒருவருடைய அநுபவம். அதைப் பிறருக்கு எடுத்துக் கூற எவராலும் இயலாது. எனவே, சுவை இலக்கண நூலார் ரஸநிலையை வைத்துக்கொண்டு அதனை வகுத்துக்காட்ட முற்படாமல் ரஸத்திற்கு முன்னிலையாகின்ற உணர்ச்சிகளை வைத்து ரஸங்களையும் பாகுபாடு செய்தனர். நம் மனத்தில் தோன்றக்கூடிய எண்ணற்ற உணர்ச்சிகளை ஒன்பதாகப் பிரித்துள்ளனர்; அனைத்தும் இந்த ஒன்பது பிரிவுக் குள்ளேயே அடங்கும் என்பது அவர்கள் கருத்தாகும். இந்த ஒன்பதிற்குப் புறம்பான மனநிலையே இல்லை என்பது அவர்கள் துணிவு. உலகப்பொருள்கள் எந்தவித மான மனோபாவங்களை எழுப்பினாலும் அவற்றை இந்த ஒன்பதுக்குள் ஒன்றாகவே பாகுபாடு செய்துவிடலாம். இந்த ஒன்பது சுவைகட்கும் அவர்கள் தனித்தனியே பெயரிட்டுள்ளனர். அவை:

| | வடமொழி | தமிழ் |
|---|---|---|
| 1. | சிருங்காரம் | உவகை |
| 2. | கருணம் | அழுகை |
| 3. | வீரம் | பெருமிதம் |
| 4. | ரெளத்திரம் | வெகுளி |
| 5. | ஹாஸ்யம் | நகை |
| 6. | பயானகம் | அச்சம் |

| | | |
|---|---|---|
| 7. | பீபத்ஸம் | இழிவரல் |
| 8. | அற்புதம் | மருட்கை |
| 9. | சாந்தம் | (நடுவு நிலை) |

என்பனவாகும். இவற்றுள் சாந்த ரஸம் உலகியலின் நீங்கினார் பெற்றியாகலின் அதனை யொழித்து ஏனைய எட்டனையுமே பரதமுனிவர் தமது நூலில் கூறியுள்ளார். ஆசிரியர் தொல்காப்பியனாரும் எண் சுவைகளையே மொழிந்துள்ளார்.

ரஸம் சமையும் முறை : வடமொழியாளர் கருத்துப்படி ரஸம் சமையும் முறையை விளக்குவேன். மேற்கூறிய ஒன்பது ரஸங்களும் ஒன்பது ஸ்தாயி பாவத்தால் சமைகின்றன.

| | | | |
|---|---|---|---|
| 1. | சிருங்காரத்திற்கு | ஸ்தாயி பாவம் | ரதி (காதல்) |
| 2. | கருணத்திற்கு | ,, | சோகம் |
| 3. | வீரத்திற்கு | ,, | உற்சாகம் |
| 4. | ரௌத்திரத்திற்கு | ,, | குரோதம் |
| 5. | ஹாஸ்யத்திற்கு | ,, | ஹாஸ்யம் (நகை) |
| 6. | பயானகத்திற்கு | ,, | பயம் |
| 7. | பீபத்ஸத்திற்கு | ,, | ஜுகுப்ஸை (அருவருப்பு) |
| 8. | அற்புதத்திற்கு | ,, | விஸ்மயம் (வியப்பு) |
| 9. | சாந்தத்திற்கு | ,, | நிர்வேதம் (விரக்தி) |

இந் நிலைபெற்ற பாவமே ரஸமாகும். உணர்ச்சிப் பெருக்கால் உள்ளம் பூரித்து, மனம் அசைவற்று நிற்கும் போது அதில் ஆன்மா தெளிவாகப் பிரகாசிக்கின்றது. உடனே மட்டற்ற மகிழ்ச்சி ஏற்படுகின்றது. உள்ளம் உணர்ச்சி ததும்பிப் பூரித்து நிற்கும் நிலையில் இன்பம் பிறக்கும் என்பதற்கு வால்மீகி முனிவரின் வாழ்க்கையில்

நிகழ்ந்த நிகழ்ச்சி சிறந்ததோர் எடுத்துக் காட்டாகும். அப்பொழுதுதான் இராமாயணத்தின் மூல சுலோகமும் பிறந்ததாக வரலாறு. அந்த வரலாறு இதுதான்; மிதுனங் களான கிரவுஞ்சப்பறவைகளுள் பெண் பறவையின் பிரிவு தனக்கு உண்டாகுமோ என்று எப்பொழுதும் அஞ்சும் இயல்புடைய ஆண் பறவையை வேடன் அம்பினால் அடித்துக் கீழே தள்ளிவிட்டான். அது குருதியில் தோய்ந்து மண்ணில் பரிதவிக்கும் நிலை கல்நெஞ்சத்தையும் உருக்கும் தன்மையது. இந் நிலையைப் பெண்பறவை கண் ணுற்றது. அதன் சிறு உள்ளம் அத் துயரத்தை எவ்வாறு தாங்கும்? அது தன் துணைவனின் பிரிவினைத் தாங்க முடியாமல் கதறியது. துடித்துத் தவித்துப் புலம்பும் காட்சியை முனிவர் கண்டார். துக்கத்தால் மனம் நிரம்பி அசைவற்று நின்றது, சோகம் அவரை ஆட்கொண்டு விட்டது. இந்நிலையில் அவரது ஆன்மா பளிச்சென்று தெரிந்தது. உடனே துன்ப வேகமெல்லாம் இன்பப் பெருக்காய் மாறிவிட்டது. அது கருண ரஸமாய்ப் பரிண மித்தது. இந்நிலையில் முனிவர் தம்மை மறந்து நின்றார். பிறகு விழித்துக்கொண்டபொழுது, மனத்துண்டான சோகம் ஒரு சுலோகமாக, அளவற்ற இன்பத்தின் மணம் கமழ, வெளிக்கிளம்பி வந்தது. அதுவே கவிதா தேவியின் அருணோதயம். சுலோகத்தின் பொருள் இது: “வேடனே, மிதுனங்களான கிரவுஞ்சப் பறவைகளுள் காம மோகங் கொண்ட ஆணினைக் கொன்றமையால் பல நாள் இவ் வுலகில் நீ நிலைத்திராய்” என்பது. இங்கு அடித்துக் கொல்லப்பெற்ற ஆண் பறவை ஆலம்பன விபாவம்; பெண் பறவையின் கதறுகை உத்தீபன விபாவம்; சோகம் ஸ்தாயி பாவம்; உணரப்படும் சுவை கருணம் ஆகும். முனிவர் துக்ககரமான நிகழ்ச்சியை ஏற்றிருப்பாராயின், அவரது வாயினின்று கவிதை வெளிவராது என்பது திண்ணம்.

கவிதை ஆனந்தக் களிப்படைந்த உள்ளத்திலே உரு வெடுக்கும் என்பதை நாம் நன்கு அறிவோம்.

ரஸங்களின் பரிணாமம் : இதுபற்றி அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு நிலவுகின்றது. மேற்கூறிய ஒன்பது சுவைகளுள் கருணம் ஒன்றுதான் பல்வேறு ரஸங்களாகப் பரிணமிக்கின்றது என்பர் ஒரு சாரார். அவர்கள் கூறுவது: கருணம் ஒன்றுதான் உலகின் அடிப்படை உண்மை நிலையில் அடங்கிக் கிடக்கின்றது. ஆன்மாவும் உலகும் பின்னிக் கிடக்கின்றன. ஆன்மாவின் கூறு இன்பமாகவும், உலகின் கூறு துன்பமாகவும் உள்ளன. மனத்தின் உருக்கம் மட்டிலும் இல்லாவிடில், அங்கு ரஸத்திற்கே இடம் இல்லை. உருக்கம் கருணத்தில்தான் தலையெடுக்கும்; ஆதலின் கருணமே சிறந்த ரஸம். ஆகவே, ஏதாவது ரஸம் நமது அநுபவத்தில் தோற்ற மளிக்க வேண்டுமானால், நம் மனம் உருகவேண்டும். மனத்தை உருக வைக்கும் சாதனத்தையே கருணத்தின் உறுப்பாக நாம் ஏற்கின்றோம். ஆகவே, கருணம் ஒன்றுதான் ரஸம் என்றும், அது பற்பல காரணங்களின் சேர்க்கையால் பல்வேறு ரஸங்களாகக் காட்சி அளிக்கலாம் என்றும் பவபூதி என்ற வடமொழிக் கவிஞர் தம் உத்தர ராம சரிதம் என்னும் நாடகத்தில் குறிப்பிடுவர். மற்றொரு சாரார் சிருங்காரம் ஒன்றே சிறந்தது என்றும், அதிலிருந்தே ஏனையவை தோன்றின என்றும் கூறுவர்.

உவமை யென்னும் தவலரும் கூத்தி
பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து
காப்பிய அரங்கில் கவினுறத் தோன்றி
யாப்பறி புலவர் இதயம்
நீப்பறு மகிழ்ச்சி பூப்ப நடிக்குமே[10]

---

10. செந்தமிழ் - தொகுதி. 7 : பக். 144

என்ற வடமொழி அப்பைய தீட்சிதரின் சித்திர மீமாம் சைக் கூற்றும் இதற்கு அரணாக அமைகின்றது. இலக்கி யத்திலும் இதுவே முதல் ரஸமாகக் குறிப்பிடப் பெற் றுள்ளது. இலக்கியங்களையும் இதுவே அதிகமாக ஆட் கொண்டுள்ளது. இதன் காரணமாகவே இது 'ரஸங்களின் மன்னன்' என்றும் வழங்கப்பெறுகின்றது என்று வாதிடுவர். இன்னும் சிலர் மிக நுணுக்கமாய் ஆய்ந்தே சிருங்காரம் ஒன்றுதான் ரஸம் என்றும், மற்றவை அதன் வேற்றுருவங்களே என்றும், ஊன்றிக்கவனித்தால் அதுவே எல்லா ரஸத்திலும் அடிப்படையாய்க் கிடப்பதை எவரும் எளிதாக உணரலாம் என்றும் கூறுவர். சிருங்கார ஸர்வ ஸ்வம் என்ற நூலின் ஆசிரியர் இப்படியே ஆய்ந்து வெளி யிட்டுள்ளார். பிறிதொரு சாரார் அற்புத ரஸத்திற்கு முதலிடம் தந்து அதிலிருந்துதான் ஏனையவை தோன்று கின்றன என்று பகர்வர். இங்ஙனம் அறிஞர்கள் 'ரஸம் ஒன்றுதான், பல அன்று' என்று நம்ப வைக்க அரும்பாடு பட்டுள்ளதை அறிகின்றோம். இதில் உண்மை இல்லாமல் இல்லை. பலவகையான நீர்களில் தோன்றும் பகலவனின் பிம்பம்போல் பலவிதமான நிலைகளில் தோன்றும் ஆன்ம ஒளியாகிய ரஸத்திற்கும் வேற்றுமை இல்லை. உணர்ச்சிப் பெருக்கால் மனம் பூரித்திருக்கும்பொழுது அதில் தோன்றும் ஒளிக்கு வேற்றுமை இல்லை. அநுபவ நிலையை வைத்துப் பார்த்தால் ரஸத்திற்கும் வேற்றுமை இல்லாமை புலனாகும்.

ஒற்றுமையில் வேற்றுமை : சுவைகளுக்குக் காரணமாக இருக்கும் உணர்ச்சிகள் ஒன்பதாக வகுக்கப்பெற்றுள்ளதை மேலே கூறினோம் அல்லவா? ஓர் உணர்ச்சியில் பிற உணர்ச்சிகள் கலக்காமல் இருப்பது அரிது; பிற உணர்ச்சி களின் கூறுகள் அதில் இருக்கத்தான் செய்கின்றன. பூமியை எடுத்துக்கொண்டால் அதில் நீர், காற்று, நெருப்பு,

ஆகாயம் என்ற நான்கும் கலந்துதான் இருக்கும்; மற்றவை இருந்த போதிலும் பூமியின் கூறு அதில் அதிகமாக இருப்பதால் அதனைப் பூமி என வழங்குகின்றோம். அவ்விதமே, நாம் சுவைகளின் வேறுபாட்டை உணர வேண்டும். பல இடையூறுகள் இருந்த போதிலும் அவற்றைப் பொருட்படுத்தாமல் ஒரே நோக்கமாக துஷ்யந்தனையே நாடிய சகுந்தலையின் மன உறுதியை வீரத்தின் கூறாகக் கொள்ளலாம். ஆனால், கவிஞன் அதைக் காதலின் கூறாகக் கொண்டுள்ளான். அவ்வாறே சிறையிருந்த செல்வியின் மன உறுதியை வீரமாகக் கொள்ளலாமேனும், காதலாகக் கொள்வதே மரபு. இவ்வாறே, இசைக் கலையிலுள்ள ஏழு சுரங்கள் ஒவ்வொன்றிலும் மற்ற ஆறு சுரங்கங்கள் கலந்திருப்பது நமக்குத் தெரியாவிட்டாலும் இசையறிஞர்கள் அறிந்து நமக்கும் எடுத்துக் காட்டுவர். கதிரவன் ஒளியிலுள்ள வெண்மை நிறத்தில், ஏழு நிறங்கள் கலந்திருப்பதை இயற்பியல் அறிஞர்கள் (Physicists) எடுத்துக் காட்டியுள்ளனர். எனவே, எதனையும் ஆராய்ந்து பார்ப்பவர்கட்கு ஒற்றுமையும் தோன்றும்; வேற்றுமையும் புலனாகும். சுவைகட்கு அடிப்படையாகவுள்ள உணர்ச்சிகளைக் கொண்டு ஆராயும்போது ஒற்றுமையும் காணப்பெறும்; வேற்றுமையுங் காட்சி அளிக்கும். வேற்றுமையைக் கொண்டுதான் உணர்ச்சிகள் ஒன்பதாகப் பிரிக்கப்பெற்றன என்பதை நாம் அறிதல் வேண்டும்.

மேற் கூறப்பெற்ற ஒன்பது பாவங்களும் எல்லா உயிர்களிடத்தும் பற்றியிருக்கும். ஆனால், சிலருடைய மனோவிருத்திகள் பல பிறப்புகளிலுள்ள வாஸனை மிகுதியால் சில பாவங்களில் மிக்குச் செல்லும்; சிலவற்றில் குறைந்து காணப் பெறும். அதனால் இவை அறவே இல்லாதிருக்கும் என்று எண்ணுதல் கூடாது. வீரத்திற்குக் காரணமாகவுள்ள உற்சாகம், பயானகத்திற்குக் காரணமாகிய

அச்சம், ரௌத்திரத்திற்குக் காரணமாகிய குரோதம் ஆகியவை எல்லா உயிர்களிடத்தும் மிகுதியாகக் காணப் பெறாமைக்குக் காரணம் வழிவழி வரும் வாஸனைகளின் குறைவே என்று கருதவேண்டும். சிருங்காரத்திற்குக் காரணமாகிய காதல் எல்லா உயிர்களிடத்தும் மிக்குக் காணப்படுவதற்குக் காரணம், வழிவழி வரும் வாஸனையின் மிகுதியே என்று கொள்ளவேண்டும். ஆதலின், இவ்வெல்லாச் சுவைகளையும் எல்லா உயிர்களும் ஒரே பிறப்பில் அநுபவித்தல் அரிதாகவே உள்ளது.

இன்னும் ஒரு சிலர் பக்தி, வாத்சல்யம் முதலியவற்றையும் சுவைகளாகக் கருதுகின்றனர். ஜகந்நாத பண்டிதர் என்ற அறிஞர் பக்தியை மிகவும் பெருமைப் படுத்திப் பேசுகின்றார் : 'கிருஷ்ணர்'[11] என்ற இரண்டு எழுத்துகளின் இனிமையைக் கண்டதுண்டா?" என்று வினவுகின்றார். பக்தி என்பது சிறந்த ரஸம் அல்லது மனோநிலை. அதற்கு உறுப்பாகவே மற்ற ரஸங்கள் நிற்கின்றன என்று ஜயதேவர், லீலா சுகர் முதலிய மாமுனிவர்களாகிய கவிஞர்கள் காவியம் எழுதி மெய்ப்பித்துள்ளனர். இவர்களிடம் ஈடுபட்டோர் சிறிது மனமிரங்கி 'பத்தாவது உணர்ச்சியாகப் பக்தியை ஏன் கொள்ளக் கூடாது?' என்று பிடிவாதமும் செய்வர். இலக்கண ஆசிரியர்கள் நன்கு ஆய்ந்து பக்தி, வாத்சல்யம் போன்றவற்றை பாவமே என்று அறுதியிட்டுள்ளனர். 'பக்தி ரஸம்' என வழங்குவது உபசாரமே யன்றிக் காப்பியச் சுவை பற்றிச் சிறந்த நூல்களில் வழங்குதல் இல்லை. "பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவ!"[12] என்று சேக்கிழார்

11. வடமொழியில் 'க்ரு' ஓர் எழுத்தாகவும், 'ஷ்ணா' மற்றோர் எழுத்தாகவும் அமையும்.

12. சேக்கிழார் பிள்ளைத்தமிழ்—தாலப்பருவம் - 8

பெருமானைப் புலவர்கள் குறிப்பிடுவதையும் உபசார வழக்காகவே கொள்ளுதல் வேண்டும். பக்தி என்ற பாவம் சிருங்காரத்தில் அடங்கும். பகவானிடத்தில் செலுத்தும் அன்பு, பக்தி; குழந்தைகளிடம் செலுத்தும் அன்பு, வாத்சல்யம்; மனைவியிடத்தில் செலுத்தும் அன்பு, காதல் இவ்வாறு அன்பு இட வேறுபாட்டிற் கேற்பப் புதுப்பெயர்களைப் பெறுகின்றது என்பதை நாம் அறிதல் வேண்டும். இப் பாவங்கள் யாவும் சிருங்காரச் சுவையுள் அடங்கும்.

உலக நிகழ்ச்சிகள் சுவையன்று : இவ்விடத்தில் ஒரு முக்கிய உண்மையை மனத்திலிருத்துதல் வேண்டும். உலகியலில் நிகழும் செயல்களால் உண்டாகும் இன்பத்தை ரஸம் என்று கொள்ளுதல் பொருந்தாது. காரணம், ஒரு சுவைக்குக் கூறும் இலக்கணம் எல்லாவற்றிற்கும் பொருந்துவதில்லை. உலகியற் செயல்களுள் நகை, காதல் போன்றவற்றில் இன்பம் உண்டாதல்போல், அழுகை, இழிவரல், அச்சம், வெகுளி முதலியவற்றில் இன்பம் உளதாதல் இல்லை என்பது அனைவரும் அறிந்த உண்மையாகும். இதனால்தான் சுவை இலக்கண நூலார் உலகியலின்பத்தைச் சுவை என்று கொள்ளாமல் நாடகத்திலாவது காவியத்திலாவது அச்செயல் நிகழும் பொழுது அவற்றைக் காண்டலும் கேட்டலும் செய்யும் நல்லறிவாளருள்ளத்தில் விபாவம் முதலியவற்றால் உண்டாகும் சுவையையே ரஸம் என்று அறுதியிட்டனர். உலகில் ஒரு தாய் தன் இளமகன் இறந்ததைக் குறித்து அழுதலைக் கேட்குங்கால் நமக்குத் துயரம் உண்டாகின்றது. ஆனால் மேகநாதன் இறந்து பட்டபோது இராவணன், மண்டோதரி புலம்புவதாகவுள்ள பாக்களைப் படிக்கக் கேட்கு மிடத்து அளவிலா மகிழ்ச்சி யுண்டாகின்றது. அவலத்திலும் இன்பத்தைக் காண்பதால்தான் அப் பாக்களைப் பன்முறை கேட்டும் படித்தும் இன்புறுகின்றோம்.

ஆகவே, இலக்கியத்தில் காணப்பெறும் எல்லாவித உணர்ச்சிகளும் படிப்போருக்கு இன்பம் அளிப்பதால் அவை யாவும் சுவைகள் என்று வழங்கப்பெற்றன என்றும், உலகியல் நிகழ்ச்சிகளின் உணர்ச்சிகள் அங்ஙனம் இன்பம் அளிப்பதில்லையாதலால், அவை 'சுவைகள்—ரஸங்கள்' அல்ல என்றும் ஈண்டு நாம் அறிதல் வேண்டும். சுவை பற்றி நாம் பெற்ற இந்த அறிவின் அடிப்படையில் பாரதியார் குறிப்பிடும் ரஸங்களைப்பற்றி அறிய முற்பட வேண்டும்.

# கண்ணன் பிறப்பு

ஒரு சமயம் பெரியாழ்வார் சீவில்லிப்புத்தூரி லிருந்து தம் தோழர் செல்வ நம்பியைப் பார்க்க திருக் கோட்டியூர் வருகின்றார். அங்கே கோயில்கொண்டிருக்கும் சௌமிய நாராயணப் பெருமானைத் தரிசிக்கின்றார். அந்தச் சமயம் திருக்கோயிலில் ஸ்ரீ ஜயந்தி விழா நடை பெற்றுக்கொண்டிருக்கின்றது. சௌமிய நாராயணனின் திருமேனி கிருஷ்ணாவதாரத்தை நினைவுறுத்துகின்றது. உடனே ஆழ்வாரின் மனம்—சிந்தை—பாவனை யுலகில் திளைக்கத் தொடங்குகின்றது. குழந்தை மனமும், பருவ மங்கையரின் மனமும் மட்டிலுந்தான் பாவனை யுலகில் திளைக்கும் என்பதில்லை. பக்தர்களின் மனமும் இந்தப் பாவனை யுலகில் புகுவதுண்டு. இந்தப் பாவனை யுலகில் நடைபெறும் செயல்களைப் புரிந்து கொள்வது சிரமம்; மிகமிகச் சிரமம்.

பெரியாழ்வாரின் மனக்கண்ணுக்கு அந்தத் திருக் கோயில் நந்தகோபனின் அரண்மனையாகவும், திருக் கோட்டியூர் ஆய்ப்பாடியாகவும் மாறிவிடுகின்றன. சௌமிய நாராயணன் ஆயர்கட்கும் ஆய்ச்சியர்கட்கு மிடையே குழந்தைக் கண்ணனாகக் காட்சி தருகின்றான். பெரியாழ்வார் கண்ணன் பிறப்புக் காட்சிகளைக் கண்டு அழகிய பாசுரங்களாக வழங்குகின்றார். இப்படி வழங்கும்

போது தம்மை யசோதைப் பிராட்டியாகவும் மாற்றிக் கொள்ளுகின்றார். ஆனந்தம் அதிகரித்து விடுகின்றது ஆய்ப்பாடி மக்களுக்கு. ஆய்ப்பாடி ஏதோ'ஒரு சிறப்பான அன்புச் சுழலில் அகப்பட்டது போலக் கிறுகிறுத்துப் போய்விடுகின்றது.

வண்ண மாடங்கள் சூழ்திருக் கோட்டியூர்
கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்
எண்ணெய் சுண்ணம் எதிரெதிர் தூவிடக்
கண்ணன் முற்றம் கலந்தளறு ஆயிற்றே.[1]

என்று பாசுரங்கள் அற்புதமாகப் பிறக்கின்றன. இந்தப் பாசுரங்களைப் பாரதியார் படித்து அநுபவித்திருக்க வேண்டும். திருக்கோயில்களிலும் திருமாளிகைகளிலும் கண்ணன் பிறப்பு விழா நிகழ்ச்சிகளைக் கண்ணாரக் கண்டு அநுபவித்திருக்க வேண்டும். இன்று வைணவர் இல்லங்களிலும் மட்டுமல்ல, ஸ்மார்த்தர் இல்லங்களிலும் கண்ணன் பிறப்பு விழா கோலங் கொள்வதைப் போல் பாரதியார் இல்லத்திலும், அக்கம்பக்கத்து இல்லங்களிலும் இவ் விழா கோலங் கொண்டதை அவர் நேரில் கண்டு களித்திருக்க வேண்டும். பெரியாழ்வாரின் உணர்ச்சி பாரதியைப் பற்றுகின்றது. கவிஞர் பாடுகின்றார் :

கண்ணன் பிறந்தான்—எங்கள்
கண்ணன் பிறந்தான்—இந்தக்
காற்றதை யெட்டுத் திசையிலும்
கூறிடும்.

திண்ண முடையான்—மணி
வண்ண முடையான்—உயர்
தேவர் தலைவன் புவிமிசைத்
தோன்றினன்.[2]

1. பெரியா. திரு 1. 1: 1
2. தோத்திரப்பாடல்கள் - 49. கண்ணன் பிறப்பு-1

தம் உணர்ச்சிக்குப் போக்குவீடாகப் பாடல்கள் அமைகின்றன.

ஆய்ப்பாடி மக்கள் கண்ணன் பிறப்பால் தாமாகவே குதூகலித்தாடுகின்றனர்; தமது குலத்தில் தம் காலத்தில் கண்ணன் பிறந்தது அவர்களிடையே மகிழ்ச்சி பொங்கி எழச்செய்கின்றது. பெரியாழ்வார் யசோதையாக மாறி இக் காட்சிகளைத் திருக்கோட்டியூரில் நடைபெறுப்வையாகக் காட்டுகின்றார். பாரதியாரோ கண்ணன் பிறப்பால் தாம் பெற்ற மகிழ்ச்சியை, எக்களிப்பை, தம்மைச் சுற்றியுள்ளாரிடம் காட்டுகின்றார்.

பண்ணை யிசைப்பீர்—நெஞ்சில்
புண்ணை யொழிப்பீர்—இந்தப்
பாரினி லேதுயர் நீங்கிடும்
என்றிதை

எண்ணிடைக் கொள்வீர்—நன்கு
கண்ணை விழிப்பீர்—இனி
ஏதுங் குறைவில்லை வேதம்;
துணையுண்டு.

என்ற பாடலால் அவர்களிடம் ஊக்கமும் நம்பிக்கையும் பிறக்கச் செய்கின்றார்.

கண்ணனின் திருமேனி அழகை திருவடி தொடங்கித் திருமுடி அளவாக அநுபவிக்கின்றார் யசோதைப் பிராட்டியின் கண்களாலேயே! மற்றப் பெண்களுக்கு அந்தக் குழந்தையைக் காட்ட விரும்பிய யசோதைபோல், ஆழ்வாரும் தாம் கண்ட 'அழியா அழகென்னும்' தத்துவத்தை அநுபவிக்கத் தகுதியினரான பிறருக்கும் 'காணீரே! வந்து காணீரே' என்று காட்ட விரும்புகின்றார்.

சீதக் கடலுள் அமுதன்ன தேவகி
கோதைக் குழலாள் அசோதைக்குப் போத்தந்த
பேதைக் குழவி பிடித்துச் சுவைத்துண்ணும்
பாதக் கமலங்கள் காணீரே,
பவளவாயீர்! வந்து காணீரே[3]

[சீதம் - குளிர்ந்த; கோதை - பூமாலை]

இந்தப் பாசுரத்தில் கண்ணன் தனது திருவடிகளி லொன்றை எடுத்து வாயில் வைத்துச் சுவை பார்த்துக் கொண்டிருக்கும் காட்சியைத் தன் அருகிலுள்ள பெண் களுக்குக் காட்டுகின்றாள். இப்படியே திருப் பாத விரல்கள் கணைக்கால், முழந்தாள், தொடை, முத்தம் (ஆண்குறி), திருவரை, திருநாபி, திருவயிறு, திருமார்பு, திருத் தோள்கள், கைத்தலங்கள், கண்டம், செந்தொண்டை, 'வாக்கும் நயனமும் வாயும் முறுவலும் மூக்கும்', திருக் கண்கள், திருப்புருவம், மகரக்குழை, நெற்றி ஆகியவற் றைக் காட்டி, மகிழ்கின்றார். இறுதிப் பாசுரத்தில் திருக் குழல்களின் அழகு,

அழகிய பைம்பொன்னின் கோல்அங்கைக் கொண்டு
கழல்கள் சதங்கை கலந்தெங்கும் ஆர்ப்ப
மழகன் றினங்கள் மறித்துத் திரிவான்
குழல்கள் இருந்தவா காணீரே,
குவிமுலையீர்! வந்து காணீரே![4]

[மழகன்று - இளங்கன்று; மறித்து - மடக்கி]

என்ற பாடலில் காட்டப் பெறுகின்றது.

இங்ஙனம் 'பாதாதி கேசமாகக்' காட்டிய கண்ண னைப் பாரதியார் கண்ணம்மாவின் எழில் நலன்களை

3. பெரியா. திரு 1. 2 : 1.
4. மேலது 1. 2: 20

இசைப்பாடலொன்றில் எடுத்துக் காட்டி, அநுபவிக்கின்றார்.

எங்கள் கண்ணம்மா நகைபுது ரோஜாப்பூ;
எங்கள் கண்ணம்மா விழிஇந்த்ர நீலப்பூ!
எங்கள் கண்ணம்மா முகஞ்செந் தாமரைப்பூ!
எங்கள் கண்ணம்மா நுதல்பால சூர்யன்![5]

இங்ஙனம் 'பல்லவி'யில் கண்ணனின் முக அழகையும் முகத்துறுப்புகளின் எழிலையும் காட்டிய பாரதியார் 'சரணங்களில்' ஏனைய உடலுறுப்புகளையெல்லாம் சுட்டிக் காட்டுகின்றார்.

எங்கள் கண்ணம்மா எழில்மின் னலைநேர்க்கும்;
எங்கள் கண்ணம்மா புருவங்கள் மதனவிற்கள்!
திங்களை மூடிய பாம்பினைப் போலே
செறிகுழல்; இவள் நாசி எட்பூ!

(நாசி - மூக்கு; எட்பூ - எள்பூ)

இந்த முதல் 'சரணத்தில்' திருமுகத்தின் எழிலைக் காண்கின்றோம். அவன் மங்கள வாக்கு நித்தியானந்த ஊற்று; மதுரவாயும் இதழும் அமிர்தம்; சங்கீதமென் குரல்; கலைமகள் வீணையின் கீதம்; சாயல் அரம்பை; சதுரி அயிராணி.

அடுத்து, திருச்செவிகளை இங்கித நாத நிலையமாகவும், சங்கு நிகர்த்த கண்டத்தை அமிர்த சங்கமாகவும், மங்களக் கைத்தலங்களை மகாசக்தியின் இருப்பிடமாகவும், திருவயிற்றை ஆலிலையாகவும், திருவரையை அமிர்த வீடாகவும் காட்டுகின்றார் கவிஞர், திருப்பாத எழிலும் திருமேனியழகும் இறுதி 'சரணத்தில்' முத்தாய்ப்பாக அமைந்து விடுகின்றன.

---

5. தோ. பா. - 55. கண்ணம்மாவின் எழில்.

சங்கரனைத் தாங்கு நந்திபத சதுரம்;
தாமரை யிருந்தாள் லட்சுமி பீடம்!
பொங்கித் ததும்பித் திசையெங்கும் பாயும்
புத்தன்பும் ஞானமும் மெய்த்திருக் கோலம்.[6]

என்ற இசைப்பாடற் பகுதியில் இதனை அநுபவித்து மகிழலாம்.

சாதாரணமாகச் செல்வந்தர் அல்லது பதவியாலும் செல்வாக்காலும் சிறப்புடைய 'பிரமுகர்' வீட்டில் ஒரு குழந்தை பிறந்து அதற்குப் பெயரிடும் விழா நிகழ்ந்தால் 'பெரிய பெரிய மனிதர்கள்' அன்பளிப்புப் பொருள்களுடன் வந்துவந்துப் போவதைக் காண்கின்றோம். ஆயர் குலக்கொழுந்தாகப் பரமபத நாதனே வந்து அவதரித்தால் விழாக்கோலம் எப்படியிருக்கும் என்று சொல்ல வேண்டுமா என்ன? ஆழ்வார் கூறுகின்றார்:

பத்துநாளும் கடந்த இரண்டாம்நாள்
எத்திசையும் சயமரம் கோடித்து
மத்தமா மலைதாங்கிய மைந்தனை
உத்தானம்செய்து உகந்தனர் ஆயமே[7]

[மத்தம் மா - மதம் பிடித்த யானைகள்; மலை - கோவர்த்தனம்; உத்தானம் செய்து - கைத்தலத்தில் வைத்துக்கொண்டு]

பெயரிடும் பன்னிரண்டாம் நாளன்று ஆயர்கள் கண்ணனாகிய குழந்தையைத் தூக்கிக் கொஞ்சி மகிழ்கின்றனர். அந்த நாளில் குழந்தையைத் தொட்டிலில் போடும் விழாவும் நடைபெறுகின்றது. இந்தத் தொட்டில் எப்படிப் பட்டது?

6. மேலது - 4.
7. பெரியா. திரு. 1. 1: 8

மாணிக்கம் கட்டி வயிரம் இடைகட்டி
ஆணிப்பொன் னால்செய்த வண்ணச்சிறுதொட்டில்[8]

[ஆணிப்பொன் - மாற்று உயர்ந்த பொன்]

பொன்னால் செய்யப்பெற்ற தொட்டில்; மாணிக்கமும் வயிரமும் பதிக்கப்பெற்ற தொட்டில் இதனை நான்முகன் அன்பளிப்பாகத் தருகின்றான். சிவன் மாதுளம்பூ கோவை என்கின்ற அரை வடத்தையும், இந்திரன் எழில் உடைக் கிண்கிணியையும், தேவர்கள் யாவரும் சேர்ந்து வலம்புரிச் சங்கு, சதங்கை, வளையல்கள் ஆகியவற்றையும், குபேரன் ஐம்படைத்தாலியையும், வருணன் முத்து பவளத்தலாகிய மாலையையும் சங்கு வளையல்களையும், பெரிய பிராட்டி யார் திருத்துழாய் மாலையையும், பூமிப்பிராட்டியார் பொற்பூவாலான ஆபரணங்களையும், துர்க்காதேவி பல்வேறு மணப்பொடிகளையும் கொணர்ந்துள்ளனர். இவற்றையெல்லாம் அடைவே சொல்லிச் சொல்லி,

சோதிச் சுடர்முடியாய்! தாலேலோ!
சுந்தரத் தோளனே! தாலேலோ!

ஐயா, அழேல்! அழேல்! தாலேலோ![9]

என்று தாலாட்டுகின்றார்; அந்த அழகிய தொட்டிலின் அருகே யசோதைப் பிராட்டியாக நின்று ஆழ்வார் தாலாட்டுகின்றார்.

பாரதியாரும் கண்ணன் பிறப்பை விசாரிப்பதற்கு யார் யார் வந்தனர் என்பதைப் பட்டியலிட்டுக் காட்டுகின் றார். இவர் அனைவரும் வந்தனர் என்று கூறுகின்றனரே யன்றி, அன்பளிப்புப் பொருள்களுடன் வந்தனர் என்று குறிப்பிடவில்லை.

8. மேலது, 1.3-1
9. மேலது. 1.3:6, 9.

அக்கினி வந்தான்—அவன்
திக்கை வளைத்தான்—புரவி
யாரிருட் பொய்ம்மைக் கலியை
மடித்தனன்.

துக்கம் கெடுத்தான்—சுரர்
ஒக்கலும் வந்தார்—சுடர்ச்
சூரியன் இந்திரன் வாயு
மருத்துக்கள்;

மிக்கத் திரளாய்—சுரர்
இக்கணந் தண்ணில்—இங்கு
மேவி நிரைந்தனர் பாவி
யசுரர்கள்

பொக்கென வீழ்ந்தார்—உயிர்
கக்கி முடிந்தார்;—கடல்
போல ஒலிக்குது வேதம்
புவிமிசை.

இந்தப் பாடல்களில் வந்தவர்களின் பட்டியலைப் பார்க்கலாம். அடுத்துவரும் பாடற்பகுதிகளில் சங்கரன் மங்கலம் கூறுவதையும், சந்திரன் வந்து அமிழ்தம் பொழிவதையும், கங்கை, கலைமகள், காளிபராசக்தி, பெரிய பிராட்டியார் ஆகியோர் வந்து குழந்தைக் கண்ணனுக்கு ஆசிகள் வழங்கியதையும் கவிஞர் குறிப்பிடத் தவறவில்லை. எனவே, பெரியாழ்வாரின் பாசுரங்களின் தாக்கம் பாரதியாரின் கண்ணனைப்பற்றிய பாடல்களில் காணப்படுகின்றது என்பதை உறுதியாக அறுதியிட்டு உரைக்கலாம். இனி, வருகின்ற இயல்களில் முற்குறிப்பிட்ட சம்பந்த ஞானக் கருத்து இடம்பெற்றிருப்பதை ஆராய்வோம்.

# கண்ணன்—என் தோழன்

நாம் வாழ்வில், பழகிப் பெற்றுள்ள எத்தனையோ நண்பர்களில் சில நெருங்கிய நண்பர்கள் உள்ளனர். அவர்களுள்ளும் யாரோ ஒருவர் நமக்கு ஆப்த நண்பராக இருப்பார். நம்முடைய கவலைகள், களிப்புகள், ஏமாற்றங்கள், இன்னல்கள் இவற்றையெல்லாம் அவரிடம் சொல்லி அநுபவிக்கின்றோம்; அவரும் நமக்கு அவ்வப்போது வேண்டிய உதவிகளைச் செய்கின்றார். நம்முடைய தொல்லைகளையும் துன்பங்களையும் பகிர்ந்து கொள்ளுகின்றார். ஆயின் நாம் வாழ்வில் ஓர் உத்தம நண்பனைப் பெறுதல் என்பது அரிய மனைவியை அடைதற் போன்றது. இதில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமான அநுபவம் இருக்கும். பாரதியாருக்குக் கண்ணன் தோழனாக இருப்பதைக் காண்போம்.

இதிகாசக் கண்ணனை மாதிரியாக வைத்துக்கொண்டு புதியதொரு கண்ணனை தோழனாகப் படைத்துக் காட்டுகின்றார் பாரதியார். முதலில் இதிகாசக் கண்ணனைக் காட்டுகிறார். அந்தக் கண்ணன் சுபத்திரையை அருச்சுனன் மனைவியாக அடைவதற்கு வழியமைத்துத்; தந்தான்; கன்னனைக் கொன்றிட உபாயம் காட்டினான். பன்னிரண்டு ஆண்டுகள் கானகத்தில் வாழ்ந்தபோதும்,

ஓராண்டு கரந்து வாழ்ந்தபோதும் பாண்டவர்க்கு யாதொரு துன்பமும் நேரிடாதவாறு காத்தான்; பாரதப் போரில் பார்த்தனுக்குச் சாரதியாக இருந்து, பல்வேறு உதவிகளைச் செய்தான். இங்ஙனம் கண்ணன் புரிந்த 'ஆனைத் தொழில்களை'யெல்லாம் பன்னி உரைத்தல் இயலாது. பாரதியார் படைத்துக் காட்டும் கண்ணனாகிய தோழனும் பழைய அச்சில் வார்க்கப்பெற்ற புதிய கண்ணனாகத் திகழ்கின்றான். இவனைச் 'சமய சஞ்சீவி' யாகக் காட்டுகின்றார் கவிஞர்.

ஊனை வருத்திடும் நோய்வரும் போதினில்
உற்ற மருந்து சொல்வான்;—நெஞ்சம்
ஈனக் கவலைக ளெய்திடும் போதில்
இதஞ்சொல்லி மாற்றிடுவான்.

எப்படி இதஞ்சொல்வான் என்பதைப் பிறிதோர் இடத்தில் காட்டுவார்.

சென்றதினி மீளாது மூட ரேநீர்
எப்போதும் சென்றதையே சிந்தை செய்து
கொன்றழிக்கும் கவலையெனும் குழியில் வீழ்ந்து
குமையாதீர் சென்றதனைக் குறித்தல் வேண்டா;
இன்றுபுதி தாய்ப் பிறந்தோம் என்று நெஞ்சில்
எண்ணமதைத் திண்ணமுற இசைத்துக் கொண்டு
தின்றுவிளை யாடியின்புற் றிருந்து வாழ்வீர்
தீமையெலாம் அழிந்துபோம் திரும்பி வாரா.[1]

என்று கூறுவார். இதைக் கண்ணனாகிய தோழனின் உபதேசமாகக்கொள்வதில் தவறில்லை.

---

1. பாரதி அறுபத்தாறு-32; இதிலுள்ள இறுதியடியின் பாதிசேர்ந்து வேதாந்தப் பாடல்களின் தொகுதியிலும் (20) காணலாம்.

கண்ணன் பிழைக்கும் வழியை ஒரே பேச்சில் சொல்லி விடுவான். அந்த வழியில் உழைக்கும் வழி, வினையாளும் வழி முதலியவற்றையும் விவரித்துக் காட்டுவான். அழைக்கும் பொழுதினில் சாக்குபோக்குச் சொல்லாமல் அரை நொடிக்குள் வந்து சேர்வான். மழைக்குக் குடைபோலவும், பசிக்கு உணவு போலவும் வாழ்வுக்குக் கண்ணன் வந்து உதவுவான். உற்றுழி உதவுவான்; உறுபொருள் கொடுப்பான். பிறர் குறிப்பினை அவர் சொல்லுமுன் உணர்ந்து கொள்வான். ஆட்டங்கள் காட்டியும் பாட்டுகள் பாடியும் ஆறுதல் செய்திடுவான். நாம் கேலி செய்தாலும் அதனைப் பொறுத்துக்கொள்வான்.

வள்ளுவர் நட்பின் பயனை,

> நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
> மேற்சென்று இடித்தற் பொருட்டு[2]

என்று காட்டுவார். உள்ளம் கலக்காமல் முகம் நக நட்பதையும், நகுதற் பொருட்டு நட்டலையும் கடிகின்றார் வள்ளுவர். பொழுது போக்கிற்குத் துணையாக இருந்து கெடுக்காமல் வாழ்க்கைக்குத் துணையாக இருந்து திருத்த வல்லவர்களையே நண்பர்கள் என்று கூறுவர் அப்பெருமகனார். பாரதியின் தோழன் கண்ணன் எப்படிப் பட்டவன்?

> உள்ளத்தி லேகரு வங்கொண்ட போதினில்
> ஓங்கி யடித்திடு வான்;—நெஞ்சில்
> கள்ளத்தைக் கொண்டொரு வார்த்தை சொன்னாலங்கு
> காறியுமிழ்ந்திடு வான்;—சிறு

---

2. குறள் - 784.

பள்ளத்தி லேநெடு நாளழு குங்கெட்ட
    பாசியை யெற்றி விடும்—பெரு
வெள்ளத்தைப் போலருள் வார்த்தைகள் சொல்லி
    மெலிவு தவிர்த்திடு வான்.

சின்னக் குழந்தைகள் போல்விளை யாடிச்
    சிரித்துக் களித்திடு வான்.

இப்படிப்பட்ட கண்ணன் தன் சொற்படி நடவாதவர் கட்குத் தொல்லை இழைத்திடுவான். இத்தகைய கண்ணனை இழந்துவிடில் உலக வாழ்வு இல்லை என்கின் றார் கவிஞர்.

கண்ணனாகிய தோழன் பேச்சில் சதுரன். நாம் சினங்கொள்ளும் பொது ஒரே சொல்லில் நம்மைக் குலுங்கிச் சிரிக்கச் செய்துவிடுவான். மனம் வேறுபட்ட போது 'ஏதோ ஒன்று செய்து' மகிழ்ச்சி தளிர்த்திடச் செய்வான். ஆபத்து நேரிடும்போது அருகில் வந்து நின்று அது நேராதவாறு விலக்கி விடுவான். விளக்கில் விழும் விட்டில் பூச்சிகள்போல் நமக்குத் தீமைகள் நேர்ந்தால் அவற்றை அழித்துவிடுவான்.

நெறிதவறி நடப்பவர்களை உதைத்து நசுக்குவான். மலைமலையாகப் பொய்கள் உரைப்பான். ஆனால், அவை யாவும் பொறைதீர்ந்த நன்மை பயப்பனவாகவேஇருக்கும். சில சமயம் விசித்திரப் பண்புடையவனாகக் (Quixotic) காணப்படுவான்.

பெண்மைக் குணமுடை யான்;—சிலநேரத்தில்
    பித்தர் குணமுடை யான்;—மிகத்
தண்மை குணமுடை யான்;—சிலநேரம்
    தழலின் குணமுடை யான்

என்பது அவன் குண ஓவியம். சில சமயம் அவனிடம் வீரம் பொலிந்து நிற்கும்; சில சமயம் சூதுவாது அறியாத

குழந்தைகள் போல் பேசுவான். நல்லவர்கட்குத் தீங்கு நண்ணாமல் நயமுறக் காத்து நிற்பான். அல்லவருக்கு நஞ்சைவிடவும் அழலைவிடவும் கொடியவனாக இருப்பான். சுருக்கமாகக்கூறின்,

காதல் விளைய மயக்கிடும் பாட்டினில்
கண்மகிழ் சித்திரத் தில்—பகை
மோதும் படைத்தொழில் யாவினு மேதிறம்
முற்றிய பண்டிதன் காண்;—உயர்
வேத முணர்ந்த முனிவ ருணர்வினில்
மேவு பரம்பொருள் காண்;—நல்ல
கீதை யுரைத்தெனை இன்புறச் செய்தவன்

என்பது அவனைப்பற்றிய சொல்லோவியம்.

தோழக் கண்ணனைப் பாரதியார் காட்டும் போது நமது மனம் தன்னிச்சையாக நமது நண்பர்களைச் சோதிக்கத் தொடங்குகின்றது. ஆனால்,

தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்
தீரா இடும்பை தரும்.[3]

என்ற வள்ளுவம் நம்மை எச்சரிக்கின்றது. ஆயினும் பாரதி காட்டும் தோழனான கண்ணனையே நாம் விரும்புகின்றோம்; நேசிக்கின்றோம். நாம் வாழ்க்கையில் உண்மைத் தோழராகக் கருதுபவரிடம் இந்தக் குணங்கள் காணப்பெறாவிட்டாலும், நாம் உணர்ச்சியின்மூலம் காண முயல்கின்றோம்; இதனால்தான் பாரதியின் 'கண்ணன்—என் தோழன்' கவைக்குதவாத கவிதைக் கலையாக நின்றுவிடாமல், நமது வாழ்வின் குறிக்கோளை எடுத்துக் காட்டும் சொல்லோவியமாகத் திகழ்கின்றது. நாமும் கண்ணனை நம்மில் ஒருவனாகவே கருதிவிடு

3. குறள். - 510.

கின்றோம். இந்தப் பாட்டிற்கு இராகம், தாளம், குறிப்பு காட்டியுள்ளார் கவிஞர். பாட்டைப் படிப்பதால்— இல்லை பாடுவதால் — 'வத்சலரசம்' — வாத்சல்ய பாவம் — தட்டுப்படுவதையும் குறிப்பிட்டுள்ளார். பாட்டைப் பாடி இந்தச் சுவையை அநுபவிக்கலாம்.

இவ்விடத்தில் இன்னொரு குறிப்பையும் நினைவில் கொள்ளுதல் வேண்டும். இலக்கணப்படி 'வாத்சல்யம்' என்பது 'ரஸம்' அன்று. 'வத்சலா' என்பது கன்றினைக் குறிக்கும். கன்றினிடத்தில் பசு இருக்கும் நிலையைக் காட்டுவது வாத்சல்யம். உண்மை யென்னவென்றால் சிருங்காரச் சுவையே இப்படிப் பேசப் பெறுகின்றது. சிருங்காரத்தைத் தமிழர்கள் உவகையென்று குறிப்பிடு வார்கள். கணவன் மனைவிமீதும், மனைவி கணவன் மீதும் காட்டுவதுதான் சிருங்காரம். தாய் குழந்தை மீது கொண்டுள்ள உணர்வு அன்பு எனப்படும். இதுவே வாத்சல்யம். அடியார்கள் ஆண்டவன்மீது கொண் டிருப்பது 'பக்தி' எனப்படும். வாத்சல்யம், பக்தி என்பவை யெல்லாம் சிருங்காரத்தின் பரிணாமமே. வாத்சல்யம் பக்தி என்ற இவற்றை ரஸத்தில் அடக்கிப் பேசுவது ஒருவித உபசாரமேயாகும்.

இங்குக் கண்ணனாகிய தோழன்மீது காட்டும் அன்பைத்தான் கவிஞர் 'வத்ஸல ரசம்' என்று குறிப்பிடு கின்றார். பாட்டில் மனம் நன்கு ஈடுபட்டுப் படிக்கும் போது இந்த ரஸத்தைக் கண்டு மகிழலாம். கவிதையைச் சுவைக்கும் பழக்கம் இல்லாதவர்கள் இதனை அறிய முடியாது.

# கண்ணன்—என் தாய்

இறைவனைத் தாய் நிலையிலும், தந்தை நிலையிலும் வைத்து எண்ணுவர் சமயச் சான்றோர். அன்புகாட்டி, வேண்டியவற்றை ஈவதால் தாயும், கல்வி முதலியவற்றை நடத்துவதில் தந்தையும் பொறுப்பாக இருப்பதால் அவர்கள் உவமையாகக் கொள்ளப் பெற்றனர்.

...நல்வீடு செய்யும்
மாதாவினைப் பிதுவை
திருமாலை வணங்குவனே.[1]

என்றும்,

மேலாத் தாய்தந்தையும்
அவரே இனி ஆவாரே.[2]

என்றும், நம்மாழ்வார் கூறியிருத்தலைக் கண்டு மகிழலாம். இந்தத் தந்தை—மகன் உறவு நவவித சம்பந்தங்களில் ஒன்றாகும். நவவித சம்பந்தத்தைக் கூறும் திருமந்திரம் தாய்—மகன் உறவினைக் குறிப்பிடவில்லை. ஆனால், இந்தச் சிந்தனை சாதாரண மக்களிடமும் உள்ளது. ஆழ்வார் பெருமக்களிடமும், கம்பன் போன்ற

1. திருவிருத் : 95
2. திருவாய் 5, 1:8

மாபெரும் கவிஞர்களிடமும் இந்தச் சிந்தனையைக் காணலாம்.

> தெளிவிலாக் கலங்கல் நீர் சூழ்
> திருவரங் கத்துள் ஓங்கும்
> ஒளியுணர் தாமே யன்றே
> தந்தையும் தாயும் ஆவார்.[3]

[ஓங்கும் - விஞ்சியிருக்கும்; ஒளி - தேசு]

என்று தொண்டரடிப்பொடிகளின் திருவாக்கில் தாய், தந்தை உறவினைக் காணலாம். திருமங்கையாழ்வாரின் திருவாக்கில் தாய்—மகன் உறவு தெளிவாகக் காணப் பெறுகின்றது.

> தாய்நினைந்த கன்றே ஒக்க என்னையும்
> தன்னையே நினைக்கச் செய்து தான்எனக்கு
> ஆய்நினைந்து அருள்செய்யும் அப்பனை.[4]

என்ற பாசுரப் பகுதியில் தாய்—கன்று உறவினை உவமையாகக் காட்டித் தந்தை—மகன் உறவினைக் காட்டினாலும் 'அப்பன்' என்ற சொற்றொடர் தாயையே நினைக்கச் செய்கின்றது. கம்பநாடனும் கோசலையைக் குறிப்பிடுங்கால்,

> கன்றுபிரி காராவின் துயருடை கொடி.[5]

என்று கூறுவான். கன்று—காரா உறவு, தாய்—மகன் உறவினை நினைவு கூறச் செய்கின்றதன்றோ? கவிஞர் கண்ணனைத் தாயாகக் கருதிப் பாடும்போது பராசக்தியே அவருடைய தாயாகிவிடுகின்றாள்.

---

3. திருமாலை - 37
4. பெரி. திரு. 7.3:2.
5. கம்பரா. அயோத். கங்கை காண் - 67.

எனையாளும் மாதேவி வீரர் தேவி
இமையவரும் தொழுந்தேவி, எல்லைத் தேவி
மனைவாழ்வு பொருளெல்லாம் வகுக்கும் தேவி
மலரடியே துணையென்று வாழ்த்தாய் நெஞ்சே.[6]

என்று கூறும் கவிஞர்தான் கண்ணனைத் தாயாகப் பாவித்து வழிபடுகின்றார்.

முதலில் உடலுக்கு உரம் ஊட்டுவதைப்பற்றிப் பேசுகின்றார் கவிஞர்;

உண்ண உண்ணத் தெவிட்டாதே—அம்மை
உயிரெனும் முலையினில் உணர்வெனும்பால்;
வண்ணமுற வைத்தெனக் கே—என்றன்
வாயினிற்கொண் டூட்டுமோர் வண்மை
யுடையாள்

என்ற பகுதியில் அன்னை பாலூட்டிச் சீராட்டு வதைக் காட்டுகின்றார். மணிவாசகப் பெருமானும் "பால் நினைந்து ஊட்டும் தாய்"[7] என்று அன்னையின் பெருமையை—அருமையை—எடுத்துக்காட்டுவர். தாய்ப் பால் உண்ண உண்ணத் தெவிட்டாதது; இந்தப் பால் உயிரெனும் முலையில் உணர்வாக ஊறுவது. குழந்தை பிறந்தவுடன் அதற்கு வேண்டும் பால் எங்கிருந்து கிடைக் கும் என்பதை அது அறியாது. தாய்தான் தன் முலைக் காம்பை வண்ணமுற அதன் வாயில் வைத்து ஊட்டு கின்றாள். சக்தி தேவிதான் கண்ணம்மா வடிவில் தனக்கு இவ்வாறு ஊட்டுவதாகக் கருதுகின்றார் கவிஞர்.

அடுத்து, கண்ணம்மா தனக்குக் கதைகள் கூறுவதைக் காட்டுகின்றார். இங்கு அன்னையைக் கவிஞர் அகில உருவமாகக் (Cosmic form) காண்கின்றார். வானமே

---

6. வேதாந்த பாடல்கள்—நெஞ்சோடு சொல்வது - 2
7. திருவாச— பிடித்தபத்து - 9.

இவளது கைகள்; பூமியே இவளது மடி. கவிஞரைக் கைகளால் அணைத்துத் தன் மடியில் கிடத்திக்கொண்டு கதைகள் சொல்லுகின்றாள். கவிஞர் இந்நிலையை,

கண்ணனெனும் பெயருடை யாள்,—என்னைக்
காட்டிநிறை வான்எனுந்தன் கையிலணைத்து
மண்ணெனுந்தன் மடியில் வைத்தே—பல
மாயமுறுங் கதைசொல்லி மனங்களிப்பாள்.

என்று காட்டுவார். இந்தக் கண்ணனைச் சக்தியின் வடிவாகப் பிறிதோரிடத்தில்,

எண்ணிலாப் பொருளும் எல்லையில்வெளியும்
யாவுமாய் நின்றனை.[8]

என்றும் காட்டுவார்.

கதைகள் குழந்தைகட்கு இன்பந் தரக்கூடியவை; வளர்ந்தவர்களும் முதியோர்களும் கூட கதைகளில் மனத்தைப் பறிகொடுப்பர். பண்டிருந்தே கதைகள் மானிட வாழ்க்கையில் ஒரு சிறந்த இடத்தைப் பெற்றுள்ளன. நமது நாட்டில் கதை சொல்வது ஒருகலையாகவே மதிக்கப்பெற்று வந்துள்ளது, சிறு குழந்தையாக இருந்தபொழுது சிவாஜி அன்னையின் மடியிலிருந்து கொண்டே பல கதைகளைக் கேட்டதாக வரலாற்று மூலம் அறிகின்றோம். திருவிழாக் காலங்களிலும், பிற சமயங்களிலும், திருக்கோயில்களிலும், திருமடங்களிலும் புராணச் சொற்பொழிவுகள் செய்யப்பெற்று வருவதை இன்றும் காணலாம். 'கதா காலட்சேபங்கள்' செய்வது இன்றும் ஒரு சிறந்த கலையாகப் போற்றப்படுகின்றது. பாமர மக்களுக்கு உயர்ந்த சமய உண்மைகளையும் வாழ்க்கைத் தத்துவங்களையும் கற்பிப்பதற்கு இக்

8. தோ. பா.—மகாசக்தி பஞ்சகம் - 2

கதைகள் பெரிதும் உதவுகின்றன. எத்தனையோ பேர் இக் கதைகளைக் கேட்டு உள்ளத் தெளிவு அடைந்துள்ளனர்; அடைந்தும் வருகின்றனர். இங்ஙனம் கவிஞர் கண்ணம்மாவின் மடியிலிருந்து கொண்டே கதைகளைக் கேட்கின்றார்.

கவிஞரின் கண்ணம்மா உளவியல் நுட்பங்களை நன்கு அறிந்தவள். வயதிற்கேற்றவாறு குழந்தைகளின் மனப் பான்மையும் உளப்போக்கும் விடுப்பார்வமும் மாறிக் கொண்டு வரும் என்பதை நன்கு அறிந்தவள். அதற் கேற்றவாறு கதைகள் கூறுவாள்.

இன்பமெனச் சிலகதைகள்—எனக்
கேற்றமென்றும் வெற்றியென்றும்
சில கதைகள்
துன்பமெனச் சிலகதைகள்—கெட்ட
தோல்வியென்றும் வீழ்ச்சியென்றும்
சில கதைகள்
என் பருவம் என்றன் விருப்பம்—எனும்
இவற்றினுக் கிணங்கவென் னுளமறிந்தே
அன்பொடவள் சொல்லி வருவாள்—அதில்
அற்புதமுண் டாய்ப்பர வசமடைவேன்.

என்ற பகுதியில் கண்ணம்மாவின் கதை சொல்லும் போக்கைக் காணலாம்.

கண்ணம்மா கவிஞருக்கு இந்த அகிலத்தின் தோற்றத் தினையே அழகாக எடுத்துக்காட்டிப் படைப்பின் விந்தை யில் பாலனின் மனத்தைப் பறிகொடுக்கச் செய்துவிடு கின்றாள். கதைப்போக்கிலேயே வான இயலையும், புவியியலையும் பிற இயல்களையும் அற்புதமாகத் தெரிவிக்கின்றாள். அண்டகோள இயல் அற்புதமாக எடுத்துரைக்கப் பெறுகின்றது.

வானவெளியில் எண்ணற்ற அண்டங்கள் தொங்கிய வண்ணம் தம்மைத் தாமாகவும் பகலவனை வலம் வந்த நிலையிலும் வெவ்வேறு வேகத்தில் சுழல்கின்றன என்று அறிவியலறிஞர்கள் கூறுவர். மணிவாசகப் பெருமானும்

அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன

என்று கூறுவர். இதனையே குற்றாலக் குறவஞ்சி ஆசிரியர் திரிகூடராசப்ப கவிராயர்,

சாட்டிநிற்கும் அண்டமெலாம்
சாட்டையிலாப் பம்பரம்போல்
ஆட்டி நிற்கும் குற்றாலத்து
அண்ணலார்.[10]

என்று'கூறுவர். 'அலகிலா விளையாட்டுடை' ஆண்டவன் சாட்டைத் துணையின்றியே இத்தனை அண்டங்களையும் ஆட்டிவைக்கின்றான் என்றும், அஃது ஒரு பம்பர விளையாட்டு போல் உள்ளது என்றும் குறிப்பால் உணர்த்துவர் அக் கவிஞர்.

பாரதியாரும் இந்த அகிலத்தின் காட்சியை,

நக்கபிரான் அருளால்—இங்கு
நடைபெறும் உலகங்கள் கணக்கிலவாம்!
தொக்கன அண்டங்கள்—வளர்
தொகைபல கோடிபல் கோடிகளாம்!
இக்கணக் கெவரறிவார்?—புவி
எத்தனை யுளதென்ப தியாரறிவார்!

---

9. திருவாச. திருவண்டப் பகுதி. அடி (1-4)
10. குற். குறவஞ்சி—செய். 107,

நக்கபிரான் அறிவான்—மற்று
நானறி யேன்பிற நரரறியார்;
தொக்கபேர் அண்டங்கள்—கொண்ட
தொகைக்கெல்லை இல்லையென்று
சொல்லுகின்ற

தக்கபல் சாத்திரங்கள்—ஒளி
தருகின்ற வானமோர் கடல்போலாம்;
அக்கட லதனுக்கே—எங்கும்
அக்கரை இக்கரை யொன்றில்லையாம்

இக்கட லதனகத்தே—ஆங்கங்
கிடையிடைத் தோன்றும்புன் குமிழிகள் போல்
தொக்கன உலகங்கள்;—திசைத்
தூவெளி யதனிடை விரைந்தோடும்;
மிக்கதோர் வியப்புடைத்தாம்—இந்த
வியன்பெரு வையத்தின் காட்சி, கண்டீர்.[11]

என்று காட்டுவர். இக்கருத்தினையே பிறிதோர் இடத்தில் மகாசக்தியை வாழ்த்தும் முறையில்,

விண்டு ரைக்க அறிய அரியதாய்
விரிந்த வான வெளியென நின்றனை;
அண்ட கோடிகள் வானில் அமைத்தனை;
அவற்றில் எண்ணற்ற வேகஞ் சமைத்தனை;
மண்ட லத்தை அணுவணு வாக்கினால்
வருவ தெத்தனை யத்தனை யோசனை
கொண்ட தூரம் அவற்றிடை வைத்தனை[12]

என்று காட்டுவதையும் காணலாம். 'எல்லாம் சக்தி மயம்' என்ற கொள்கையுடையவரல்லவா? இதனால்தான்,

---

11. தோ. பா.—கோமதி மகிமை - 5,6,7.
12. மேலது—மகாசக்தி வாழ்த்து.

ஆதிப் பரம்பொருளின் ஊக்கம்—அதை
அன்னை யெனப்பணிதல் ஆக்கம்.[13]

என்று சொல்லி வைத்தார் எனக் கருதுதல் வேண்டும்.

தாய்—கண்ணம்மா—நிலையிலுள்ள கண்ணன்,

சின்ன சின்ன பொம்மை
சிங்கார பொம்மை

எனக் குழந்தைக்குப் பொம்மைகளை அறிமுகம் செய்வது போல் காட்டுவான். இந்த வியன்பெரு அகிலத்தின் காட்சியை,

விந்தைவிந்தை யாக எனக்கே—பல
விதவிதத் தோற்றங்கள் காட்டுவிப் பாள்

என்று காட்டுவர் கவிஞர். அடுத்து, விண்வெளியிலுள்ள பொருள்களை—காட்சிகளை—ஒவ்வொன்றாகக் காட்டுகின்றார்.

சந்திர னென்றொரு பொம்மை—அதில்
தண்ணமுதம் போலஒளி பரந்தொழுகும்
மந்தை மந்தையா மேகம்—பல
வண்ணமுறும் பொம்மையது மழைபொழியும்
முந்தஒரு சூரிய னுண்டு—அதன்
முகத்தொளி கூறுதற்கோர் மொழியிலையே

அம்புலி, முகில், பகலவன் இவற்றைக் காட்டிய கவிஞர் இந்தக் கோள்கட்கு மிகத் தொலைவிலுள்ள விண்மீன் களையும் காட்டுகின்றார்.

வானத்து மீன்க ளுண்டு—சிறு
மணிகளைப் போல்மின்னி நிறைந்திருக்கும்
நானத்தைக் கணக்கிடவே—மனம்
நாடிமிக முயல்கினும் கூடுவதில்லை;

---

13. ஷ்டி—சக்தி விளக்கம்

[நானதிதை - நான் + அத்தை - நான் அதை; இது பிராமணர் வழக்கு]

வானத்தில் கணக்கிலடங்கா உடுக்களைக் காட்டிய கவிஞர் பூமிக்கு வருகின்றார். முதலில் மலைகளைக் காட்டுகின்றார்.

கானத்து மலைக ளுண்டு—எந்தக்
காலமுமொ ரிடம்விட்டு நகர்வதில்லை,
மோனத்தி லேயிருக்கும்—ஒரு
மொழியுரை யாதுவிளை யாடவருங்காண்,
நல்லநல்ல நதிக ளுண்டு—அவை
நாடெங்கும் ஓடிவிளை யாடிவருங்காண்;
மெல்ல மெல்லப் போயவைதாம்—விழும்
விரிகடற் பொம்மையது மிகப்பெரிதாம்;
எல்லையதிற் காணுவ தில்லை;—அவை
எற்றிநுரை கக்கியொரு பாட்டிசைக்கும்
ஒல்லெனுமப் பாட்டினிலே—அம்மை
ஓமெனும் பெயரென்றும் ஒலித்திடுங்காண்.

நதிகள் பாய்ந்து வருவதை நாடு முழுவதும் விளையாடி வருவதாகக் கூறுவது அற்புதம், அற்புதம்! அங்ஙனம் விளையாடி வரும் ஆறுகள் இறுதியில் 'விரிகடல் பொம்மையதில்' போய் விழுகின்றனவாம். 'அந்தக்' கடல் நுரை கக்கிப் பாட்டிசைக்கும்; அப்பாட்டினில் 'ஓம்' என்ற பெயர் ஒலித்திடும் என்கின்றார். இதில் சமயஞானம் தட்டுப்படுகின்றது.

கண்ணம்மா என்ற தாய் பின்னரீத் தமக்குக் கொடுத்த வற்றையெல்லாம் பட்டியலிட்டுக் காட்டுகின்றார். சோலை களையும் காவினங்களையும் நல்கி அவற்றின் மூலமும் பலநிற மணி மலர்களையும், தருக்களில் தூங்கிவிடும் கனிவகைகளையும் ஞாலமுழுதும் நிறைந்திருக்குமாறு நயத்தகும் பொம்மைகளாகக் குவித்து வைத்திருப்பதாகக்

கூறுகின்றார். இவற்றின் கோலமும் சுவையும் சொல்லுந் தரமன்று.

இன்னும் என்னென்ன தந்துள்ளாள்? தின்பதற்குப் பண்டங்கள், செவி தெவிட்டா நற்பாட்டுகள், நன்றாகப் பழகுவதற்கு மெய்த்தோழர்கள் இவற்றையெல்லாம் தந்துள்ளாள். மேலும்,

கொன்றிடும் எனஇனிதாய்—இன்பக்
 கொடுநெருப் பாய்அனற் சுவையமுதாய்
நன்றியல் காதலுக் கே—இந்த
 நாரியர் தமையெனைச் சூழவைத் தாள்.

என்று காமச் சூட்டை எழுப்பும் நங்கையரைத் தந்ததையும் காட்டுகின்றார். அங்காடித் தெருவில் குழந்தைகட்கு பல்வேறு அழகுடை பொம்மைகள் அடுக்கி வைத்திருப்பதைக் காண்கின்றோம். அங்ஙனமே, கண்ணம்மாவாகிய தாய் தனக்கு விளையாடுவதற்கு வைத்திருக்கும் விலங்குக் காட்சிச் சாலைகளையும், நீர்ப்பொருட்காட்சிச் சாலைகளையும் காட்டுவார்.

இறகுடைப் பறவைக ளும்—நிலந்
 திரிந்திடும் விலங்குகள் ஊர்வனகள்
அறைகடல் நிறைந்திட வே—எண்ணில்
 அமைந்திடற் கரியபல் வகைப்படவே
சுறவுகள் மீன்வகை கள்—எனத்
 தோழர்கள் பலருமிங் கெனக்களித் தாள்;
நிறைவுற இன்பம்வைத் தாள்;—அதை
 நினைக்கவும் முழுதிலும் கூடுவதில்லை.

கவிஞரும் குழந்தை நிலையிலிருந்து கொண்டு அனைத்தையும் கண்டு களிக்கின்றார்.

சற்றுப் பக்குவம் அடைந்த குழந்தைக்குத் தருவது போல் பாடத்திட்டத்தை மாற்றி அமைக்கின்றாள்

கண்ணம்மா. சரியான குழந்தைகள் பள்ளியின் 'ஆசிரியை' யாகத் திகழ்கின்றாள். அவள் தரும் பாடத்திட்டம் இது :

சாத்திரம் கோடி வைத்தாள்;—அவை
தம்மினும் உயர்ந்ததோர் ஞானம்வைத்தாள்
மீத்திடும் போதினி லே—நான்
வேடிக்கை யுறக்கண்டு நகைப்பதற் கே
கோத்தபொய் வேதங்க ளும்—மதக்
கொலைகளும் அரசர்தம் கூத்துகளும்
மூத்தவர் பொய்ந்நடை யும்—இள
மூடர்தம் கவலையும் அவள்புனைந் தாள்;

வகுப்பில் சில சமயம் வேடிக்கை காட்டுவதுபோல் பொய் வேதங்கள், மதக் கொலைகள் (எ-டு. சமணர்களைக் கழுவேற்றல், சிலுவைப் போர்கள் போன்றவை), அரசர்தம் கூத்துகள் (எ-டு. துரியோதனன் செயல்கள், இராவணன் தீங்குகள், இரணியனின் அடாத செயல்கள் போன்றவை), மூத்தவர்களின் நெறிதவறிய நடக்கை, நெஞ்சிற் கவலை நிதம்பயிராக்கும் மூடத்தனம் இவையும் குழந்தையின் பாடத்திட்டமாகின்றன. ஆசிரியர் வகுப்பில் பாடம் நடத்தும்போது ஒரே 'அறுவையையும்' சோர்வடைச் செய்யும் முறையையும் தவிர்க்க வேண்டுமல்லவா?

தாய் குழந்தைக்கு வேண்டுவனவற்றையெல்லாம் தருவதைப்போல் கண்ணன் என்ற தாய்,

வேண்டிய கொடுத்திடு வாள்;—அவை
விரும்புமுன் கொடுத்திட விரைந்திடுவாள்;
ஆண்டருள் புரிந்திடுவாள்;—அண்ணன்
அருச்சுனன் போலெனை ஆக்கிடுவாள்;
* * *
நீண்டதோர் புகழ்வாழ் வும்-பிற
நிகரறு பெருமையும் அவள்கொடுப்பாள்.

என்று அனைத்தையும் தருவான் என்று சொல்லிக் கவிதையையும் நிறைவு செய்கின்றார்; தலைக்கட்டு கின்றார்.

இப்பாடல் பூமிதேவியைப் போற்றும் ஒரு பாடலாகக் கருதலாம். அறிஞர்கட்கு இந்தப் பூவுலகம் முழுவதும் ஒரு திருவிழாக் கோலத்துடன் காட்சியளிக்கும் என்று எமர்சன் என்ற அமெரிக்கக் கவிஞர் கூறுவதை நாம் கேட்டதுண்டு. இதையொட்டி பாரதியார் இந்த அகிலத்தையே ஒரு 'விசுவரூப தரிசனமாகக்' காண்கின்றார்; இயற்கை அன்னைமீது பாரதியார் கொண்ட பேரவாவைப் பாடல் காட்டுகின்றது. இம்முறையில் இவர் ஆங்கிலக் கவிஞராகிய வொர்ட்ஸ் வொர்த்திற்கு ஒப்பாகின்றார். இங்ஙனம் இயற்கை அன்னையை இயலும் போதெல்லாம் பாராட்டுவது—போற்றுவது—இவர்தம் அழுத்தமான சக்திவழிபாட்டுக் கொள்கையைச் சார்ந்ததாகும் என்று கருதுவது மிகவும் பொருத்தமாகும். மேலும், தத்துவ ஞானக் கவிஞர் தாயுமான அடிகள்,

> பாராதி விண்அனைத்து நீயாச், சிந்தை
> பரியமட லாளமுதிப் பார்த்துப் பார்த்து[14]

என்று அகில முழுவதையும் 'விசுவரூப தரிசனமாகக் கண்டுகளிப்பதைப் போலவே, பாரதியாரும் பிரகிருதி மண்டலத்தையே தம் காட்சிக்குள் அடக்கி மகிழ்கின்றார் என்று கொள்வதிலும் தவறில்லை. 'நொண்டிச் சிந்து' மெட்டில் யாக்கப்பெற்ற இக் கவிதையை பாடிப் பாடித் துய்த்தால் கவிதையநுபவத்தின் கொடுமுடியை எட்டிப் பிடிக்கலாம்.

---

14. ஆகார புவனம் - 24.

# கண்ணன்—என் தந்தை

சமயச் சான்றோர்கள் எம்பெருமானைத் தந்தை நிலையில் வைத்தெண்ணக்கூடிய இடங்கள் எண்ணற்றவை. எடுத்துக்காட்டாக, நம்மாழ்வார் திருவேங்கடமுடையானை,

... திருவேங் கடத்து
என்ஆனை என்அப்பன்[1]

என்றும், திருக்குறுங்குடி எம்பெருமானை,

குறுங்குடி மெய்ம்மையே
உளனாய எந்தையை[2]

என்றும் குறிப்பிடுவதைக் காணலாம். இந்த ஆழ்வாரே திருவிண்ணகர் சேர்ந்த பிரானை,

என்சரண் என்கண்ணன் என்னை
ஆளுடை என்அப்பனே[3]

என்றும்,

1. திருவாய். 3. 9; 1
2. மேலது 3. 9;2
3. மேலது 6.3; 8

என்அப்பன் எனக்காய் இருளாய்
என்னைப் பெற்றவளாய்
பொன்அப்பன் மணியப்பன் முத்தப்பன்
என்னப்ப னுமாய்
... ... ... ... ...
தன்னொப்பார் இல்அப்பன்[4]

என்றும் கூறுவதைக் காணலாம்.

இதிகாசக் கண்ணன் அச்சில்தான் இக் கண்ணனும் வார்க்கப் பெறுகின்றான். இயற்கைக் கோள்களை நோக்கி செயற்கைக் கோள்கள் ஏவப்பெற்று அண்டகோள ஆராய்ச்சி நடைபெறுவது இக்காலம். அண்மையில் அம்புலியை நோக்கி ஆளுள்ள அமெரிக்க விண்கலங்கள் ஏவப்பெற்று ஆய்வுகள் நடைபெற்றன. செவ்வாய், வியாழன், வெள்ளிக் கோள்களின் ஆய்வுகள் நடைபெறு கின்றன. இத்தகைய ஆய்வுகள் எல்லாம் பிற்காலத்தில் நடைபெறலாம் என்ற சாத்தியக்கூறுகளை யெல்லாம் பாரதியார் கனவுகண்டார் என்று நினைக்கத் தோன்று கின்றது.

பூமிக் கெனைய னுப்பி னான்;—அந்தப்
புதமண்ட லத்திலென் தம்பிக ளுண்டு;
நேமித்த நெறிப்படி யே—இந்த
நெடுவெளி யெங்கணும் நித்தம் உருண்டே
போமித் தரைகளி லெல்லாம்—மனம்
போலவிருந் தாளுபவர் எங்க ளினத்தார்
சாமி இவற்றினுக் கெல்லாம்—எங்கள்
தந்தையவன் சரிதங்கள் சிறிதுரைப்பேன்.

இந்த விண்வெளியில் நேமித்த நெறிப்படியே பல்லாயிரக் கணக்கான அண்டங்கள் நாடோறும் உருண்டோடு

---

4. மேலது 6.3; 9

கின்றன. இத்தரைகளிலெல்லாம் உயிரினங்கள் வாழ்கின்றன என்பது கவிஞரின் கணிப்பு. இவற்றையெல்லாம் ஆளுவது மனித இனம் —"எங்கள் இனத்தார்." ஆதலால் தான் புதன் மண்டலத்திலும் தம் தம்பியர் இருப்பதாகச் செப்புகின்றார் கவிஞர். இந்த மனித இனத்தின் தந்தை தான் கண்ணன். இவன் வரலாறுதான் இங்குக் கூறப் பெறுகின்றது, முதலில் திருநாமத்தைப்பற்றிக் கூறுகின்றார்:

நாவு துணிகுவ தில்லை—உண்மை
  நாமத்தை வெளிப்பட உரைப்பதற்கே;
யாவரும் தெரிந்திட வே—எங்கள்
  ஈசனென்றும் கண்ணனென்றும் சொல்லுவ துண்டு;
மூவகைப் பெயர்புனைந் தே—அவன்
  முகமறி யாதவர்கள் சண்டைகள் செய்வார்;
தேவர்கு லத்தவன்என் றே—அவன்
  செய்திதெரி யாதவர் சிலருரைப் பார்.

பின்னர் கண்ணனின் பிறப்பைப்பற்றிக் கூறுபவர்,

பிறந்தது மறக்குலத் தில்;—அவன்
  பேதமற வளர்ந்ததும் இடைக்கு லத்தில்;
சிறந்தது பார்ப்பன ருள்ளே;—சில
  செட்டிமக்க ளோடுமிகப் பழக்க முண்டு;

என்கின்றார். பிறப்பினால் க்ஷத்திரியன்; வளர்ப்பினால் யாதவகுலத் திலகன். ஆயினும் அவனை அந்தணர்கள் தாம் அதிகமாகப் போற்றுகின்றனர். அவன் அருளிய பகவத்கீதை பார்ப்பனர்களிடம்தான் அதிகச் செல்வாக்கு பெற்றுள்ளது. அதிகம் பேர் அதைப் படிக்காவிடினும் அதைப்பற்றிப் பேசுவதில் குறைவில்லை!

செல்வநிலைக்குக் குறைவில்லை; சேமித்துவைத்த பொன்னுக்கும் அளவில்லை. கல்வியில் மிகச் சிறந்தவன்.

அன்னமாகி அவனிக்குத் திருமறைகளை அருளிய அப்பன். சாந்தீபினி முனிவரிடம் கல்விபயின்றான் என்பது உலகோர் நடையை யொட்டிதான். இவன் அருளிய கீதையின் பெருமையும் இனிமையும் சொல்லிமுடியா. எல்லாம் வல்ல இக் கண்ணனிடம் கொஞ்சம் பயித்தியம் தோன்றுவதுண்டு. என்ன பயித்தியம்?

நல்வழி செல்லு பவரை—மனம்
நையும்வரை சோதனைசெய் நடத்தை யுண்டு

என்பதுவே. இது துரியோதனாதியரிடம் அக்கிரமங்கள் தலையெடுக்கச் செய்ததும், பாண்டவர்களைப் பல்வேறு வகையில் துன்பங்களால் வாடச் செய்ததும் இவன் புரிந்த லீலா விநோதங்கள்! இன்றும் நல்லவர் வாடுவதும் அல்லவர் அவனியில் மேலோங்குவதும் இவன் திருவிளையாடல்களால்தான். படிப்பவர்கட்கு இனிமை யாக இருக்கவும், துன்புறுவோர் அமைதி பெறவும் 'தத்துவமும்' படைத்துள்ளான்! தத்துவத்தைப் பேசச் செய்கின்றவனும் இவன்தானே!

''தருமத்தின் வாழ்வதனைச் சூது கவ்வும்;
தருமம் மறுபடி வெல்லும்'' எனுமியற்கை
மருமத்தை நம்மாலே உலகங் கற்கும்
வழிதேடி விதிஇந்த செய்கை செய்தான்;.
கருமத்தை மேன்மேலும் காண்போம், இன்று
கட்டுண்டோம் பொறுத்திருப்போம்; காலம் மாறும்
தருமத்தை அப்போது வெல்லக் காண்போம்.

என்று அருச்சுனன்வாயிலாக அறம் பேசச்செய்து மனக் குமுறலை அடங்கச் செய்பவனும் இவனே. இதுதான் பின்னர் போராக மாறி அப் போரும் அறத்தின்கீழ் அடங்கிவிடுகின்றது.

அடுத்து, கண்ணனின் பண்புநலன்கள் பேசப்பெறு கின்றன.

நிறந்தனிற் கருமை கொண்டான்;—அவன்
　　நேயமுறக் களிப்பது பொன்னிறப் பெண்கள்;
துறந்த நடைக ளுடையான்;—உங்கள்
　　சூனியப்பொய்ச் சாத்திரங்கள் கண்டு நகைப்பான்.

இன்றைய இக்கருமைநிறக் காளையர் பொன்னிறமேனி மங்கையரை விரும்புவதுபோல், கண்ணனும் அத்தகைய மனப்பான்மையக் கொண்டிருந்தான் போலும்! இக் காலத்தில் 'உண்மையான' பகுத்தறிவு வாதிகள் பொய்யும் புனைசுருட்டும் மிக்க போலி சாத்திரங்களைக் கண்டிப்பது போல் கண்ணனும் அத்தகைய சாத்திரங்களை எள்ளி நகைத்துத் தள்ளினான் போலும்!

எம்பெருமானை ஏழைபங்காளன்—தீனதயாளன்— என்றெல்லாம் கொள்வது மரபு. இம் மரபிற்கேற்பக் கண்ணன் ஏழை மக்களைத் தோழமை கொள்வான்; செல்வம் ஏறியார்தமைக் கண்டு சீறி விழுவான். 'இடுக்கண் வருங்கால் நகுக'[5] என்ற வள்ளுவப் பெருமானின் அறவுரைப் படி, துன்பத்திலும் இன்பம் காணும் முறையில் நெஞ்சம் தளர்ச்சி கொள்ளாதவர்கட்குச் செல்வச் சிறப்பு கள் செய்வான். மனத்தைக் 'குரங்கு மனம்' என்று சொல்வதுண்டு, அதன் கணந்தோறும் மாறிமாறிச் செயற்படுந் தன்மையை நோக்கி. கண்ணனின் புத்தியும் நாழிகைக் கொருமுறை மாறியவண்ணம் இருக்கும்; ஒரு நாள் இருந்த புத்தி மறுநாள் இராது. ஆள் நடமாட்ட மில்லாத பாழிடங்கள், பாழடைந்த மண்டபங்கள், ஊருக்கு ஒதுக்குப்புறமாக இருக்கும் மக்களால் கைவிடப் பெற்ற இடிபாடுடைய இடங்கள் இங்கெல்லாம்

---

5. குறள் - 621

கண்ணனைக் காணலாம். இங்கெல்லாம் பாட்டினிலும் கதையினிலும் நெஞ்சைப் பறி கொடுத்தவனாகக் காணப்பெறுவான்.

ஊழ்வினையின் ஊற்றத்தை எடுத்துக்காட்ட வந்த வள்ளுவப் பெருந்தகை,

நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லற் படுவது எவன்?[6]

என்று விளக்கிப்போவர். இதனை மனத்திற்கொண்ட பாரதியின் கண்ணனும்,

இன்பத்தை இனிதெனவும்—துன்பம்
இனிதில்லை என்றுமவன் எண்ணுவதில்லை.

இஃது 'இருவினை யொப்பு' என்ற சைவ சித்தாந்தக் கொள்கையைத் தழுவியுள்ளது. பாரதியாரின் கண்ணன் உயிர்க்குலத்தின்மேல் பேரன்பு மிக்கவன். 'காக்கை குருவி எங்கள் ஜாதி' என்று கூறுபவன். உயிர்க்குலம் அறிவினில் மேன்மையுறுவதற்காக 'வன்புகள்' பல புரிபவன். இவனுக்கு 'விதி' என்ற அமைச்சன் உண்டு. விதிப்படி ஒழுக வேண்டும் என்பதில் கண்டிப்பு உடையவன். வேதங்கள் மக்கள் ஒழுகு முறையைக் கூறுவன என்ற கொள்கை யுடையவன். ஆனால்,

வேதங்கள் கோத்து வைத்தான்—அந்த
வேதங்கள் மனிதர் மொழியி லில்லை.
வேதங்கள் என்று புவியோர்—சொல்லும்
வெறுங்கதைத் திரளிலவ் வேதமில்லை;
வேதங்க ளென்றவற் றுள்ளே—அவன்
வேதத்திற் சிலசில கலந்ததுண்டு;
வேதங்க ளன்றி யொன்றில்லை—இந்த
மேதினி மாந்தர்சொலும் வார்த்தைக ளெல்லாம்.

---

6. குறள் - 379

என்று உண்மை நிலையை ஒளிக்காமல் எடுத்துரைப்பவன். உலக நன்மைக்காக 'வருணாசிரம தர்மம்' ஏற்படுத்தினர் பண்டையோர். அதன் உண்மைப் பொருளை உணராமல் பின் வந்தோர் அதனைக் கெடுத்து 'குட்டிச்சுவராக்கினர்' இன்று 'உண்மை வேதம்' இன்னதென்பதை உணராதவர் கள் 'வேதம், வேதம்' என்று தவளைகள்போல் பொருளற்ற கூச்சல்களை எழுப்புகின்றனர். வருணாசிரம தர்மத்தைப்பற்றிப் பாரதியின் கண்ணன் கூறுவது :

நாலு குலங்கள் அமைத்தான்;—அதை
  நாசமுறப் புரிந்தனர் மூடமனிதர்,
சீலம் அறிவு கருமம்—இவை
  சிறந்தவர் குலத்தினில் சிறந்தவராம்.
மேலவர் கீழவர் என்றே—வெறும்,
  வேடத்திற் பிறப்பினில் விதிப்பனவாம்;
போலிச் சுவடியை எல்லாம்—இன்று
  பொசுக்கிவிட்டா லெவர்க்கும் நன்மையுண்
    டென்பான்.

இப் பகுதியைப் படிக்கும்போது 'தந்தை பெரியரே' கண்ணனாக நின்று பேசுவதுபோல் தோன்றுகின்றது.

முருகப் பெருமானை என்றும் இளமையாக இருப்பவன் என்று கொள்வதுண்டு. அங்ஙனமே பாரதி யாரின் கண்ணனாகிய தந்தையும்,

வயது முதிர்ந்து விடினும்—எந்தை
  வாலிபக் களையென்றும் மாறுவதில்லை;
துயரில்லை; மூப்பு மில்லை,—என்றும்
  சோர்வில்லை நோயொன்றும் தொடுவதில்லை;
பயமில்லை, பரிவொன்றில்லை—எவர்
  பக்கமும்நின் றெதிர்ப்பக்கம் வாட்டுவதில்லை
நயமிகத் தெரிந்தவன் காண்;—தனி
  நடுநின்று விதிச்செயல் கண்டு மகிழ்வான்,

துன்பத்தில் நொந்து வருவோரிடம் இரக்கம் காட்டுவான்; அன்பு கனிவான். அன்புகாட்டுமாறு பரிந்துரைப்பான். அன்பினால் துன்பம் அனைத்தையும் துடைத்து விடலாம் என்பான். 'பொறுத்தவர் பூமி யாள்வார்' என்ற கொள்கைக்கு ஆதரவு தருபவன்.

என்புடை பட்ட பொழுதும்—நெஞ்சில்
ஏக்கமுறப் பொறுப்பவர் தம்மை உகப்பான்.
இன்பத்தை எண்ணு பவர்க்கே—என்றும்
இன்பமிகத் தருவதில் இன்பமுடையான்.

இப்பாடலின் மூலம் சில தத்துவக் கருத்துகள் புலனாகின்றன. பாடலின் தொடக்கத்தில் இறைவனைத் தந்தை என்று குறிப்பிடுவதால் உலக மக்கள் யாவரும் சகோதரர்கள் என்ற கருத்தை வற்புறுத்துகின்றார் கவிஞர். துன்பத்தினால் மனிதன் 'சுடச்சுடரும் பொன்போல் ஒளி விடுகின்றான்''[7] என்ற தத்துவம் ஈண்டு காட்டப் பெறுகின்றது. துன்பத்தில் உழலும்போதுதான் ஞானம் உதயமாகின்றது. பாரதப் பெரும்போர் முடிவடைந்த பிறகு கண்ணனும் பாண்டவர்களும் குந்தியைப் பார்க்கச் சென்றபோது அவள் கூறுகின்றாள்: "கண்ணா, துன்பங்களும் தொல்லைகளும் தொடர்ந்து எனக்கு வருமாறு அருள் செய்க. அப்பொழுதுதான் இதயத்தில் உன்னை நிரந்தரமாக இருத்த முடியும்" என்பதாக. அத்தை மருமகனிடம் பேசும் பேச்சு இது. துன்பங்களினால்தான் மனிதன் தூய்மையடையமுடியும் என்பதனால்தான் இறைவன் அடியார்களைத் துன்பத்தில் உழலச்செய்து உய்விக்கின்றான். எம்பெருமானை எந்தத் திருநாமத்தால் குறிப்பது?

7. குறள் - 297

ஒருநாமம் ஓருருவம்
ஒன்றுமில்லாற்கு ஆயிரம்
திருநாமம் பாடிநாம்
தெள்ளேணம் கொட்டாமோ?[8]

என்ற மணிவாசகப் பெருமானின் கருத்தைச் சிந்திக்கின்றோம். கவிஞரே பிறிதோரிடத்தில்,

யாமறிந்த மதங்கள்பல உளவாம் அன்றே;
யாவினுக்கும் உட்புதைந்த கருத்திங்கொன்றே

என்று கூறுவதும் நம் மனத்தில் எழுகின்றது. மெய்ப்பொருளின் இயல்பைப்பற்றித் தாயுமான அடிகள் கூறுவது :

பந்தமறும் மெய்ஞ்ஞான மான மோனப்
பண்பொன்றை அருளிஅந்தப் பண்புக் கேதான்
சிந்தை இல்லை; நானென்றும் பான்மை இல்லை;
தேகமில்லை காலமிம்லை திக்கு மில்லை;
தொந்தம்இல்லை; நீக்கம்இல்லை பிறிதும் இல்லை;
சொல்லுமில்லை இராப்பகலாம் தோற்றம் இல்லை;
அந்தமில்லை ஆதிஇல்லை; நடுவும் இல்லை,
அகமுமில்லை; புறமுமில்லை அனைத்தும் இல்லை.[9]

இதனையும் சிந்திக்கின்றோம். இங்ஙனம் பாரதியாரின் இப்பாடல் பல்வேறு தத்துவக் கருத்துகளை நம் உள்ளத்தில் குமிழியிடச் செய்கிறது.

இந்தக் கவிதையின் தலைப்பில் கவிஞர் 'பிரதான ரஸம்—அற்புதம்' என்ற குறிப்பைத் தந்துள்ளார். இதனையும் விளக்குவது இன்றியமையாததாகின்றது. மக்கள் பல பொருள்களைக் கண்ணுறுங்கால் அவற்றோடு தம் மனநிலையைச் சேர்த்துச் சிறப்பாக அநுபவிக்கும்

8. திருவா. திருத்தெள். 1.
9. ஆகார புவனம் - 20.

பழக்கம் ஏற்பட்டுள்ளது. ஒரு பொருளைக் கண்ணால் கண்டவுடன் அதைப்பற்றிய எண்ணங்கள் மனத்தில் உதிக்கின்றன. எதிரில் காணப்பெறும் பொருளின் பண்புகள், அதன் சிறப்பியல்புகள் இவைபற்றி ஆராய்கின்றனர். பிறகு தம் மன நிலைக்கு ஏற்றவாறு அப்பொருளை உட்கொள்ளுகின்றனர். இது வழக்கமாக நடைபெறுவது. இதற்கு மாறுபாடாக எதையாவது கண்ணுற்றால் உடனே வியப்புணர்ச்சி எழுகின்றது. வியப்பிற்கும் நகைப்பிற்கும் பொருளின் இயற்கைக் குணங்கள் மாறியிருப்பது பொது வான காரணம். ஆனால், நகைப்புக்குரிய பொருள் இயற்கையில் நின்று மாறுபடுவதுடன் பிறரால் வேண்டாத வண்ணமும் அமைந்திருக்கும்; வியப்பு அங்ஙனமன்று. அதன் பரிணாமம் யாவராலும் விரும்பத்தக்க வண்ணம் இருக்கும். சில இடங்களில் விரும்பத்தகாத முறையிலும் மாறுதல் உண்டாகிப் பார்ப்போரை வியக்கச் செய்வதும் உண்டு. இதை மறுப்பதற்கில்லை. ஆயினும், நாம் எதிர் பாராத முறையில் ஒன்று நிகழ்ந்துவிடின் அதனை வியப்பு என்றும், இயற்கைக்கு மாறாகப் பரிணாமம் ஏற்பட்டால் நகைப்பு உண்டாகும் என்றும் இரண்டிற்குமுள்ள வேற்றுமையை அறிதல் வேண்டும். வியப்பும் நகைப்பும் வேறு வேறு உணர்ச்சிகள் என்பதில் ஐயமில்லை. அதற்குக் காரணத்தை மட்டிலும் தனியாய் விளக்க முடியாவிடினும் நம் மனமே இரண்டு விதமாக ஏற்பதை உணர்கின்றோ மன்றோ? அந்தந்த இடங்களில் அவ்வவற்றிற் கேற்ற காரணங்கள் இருப்பதாலேயே சில இடங்களில் விந்தையும் சில இடங்களில் நகைப்பும் ஏற்படுவதாய் ஒப்பவேண்டும்.

இரண்டு எடுத்துக்காட்டுகளால் இதனை விளக்கலாம். யசோதைக்குப் பரந்தாமனே குழந்தையாக இருக்கின்றான் என்பது எப்படித் தெரியும்? சாதாரணக் குழந்தையாகவே கண்ணனை எண்ணியிருந்தாள். ஒரு நாள் கண்ணன்

மண்ணைத் தின்பதைப் பார்த்துவிட்டாள். மண்ணைத் தின்பது தவறு என்று கண்டித்தாள். கண்ணன் தான் மண்ணைப் புசிக்கவில்லை என்று மறுத்தான். உடனே அவனை அதட்டி வாயைத்திறந்து காண்பிக்கச் செய்தாள். அவன் வாயைத் திறந்ததும், அதில் பதினான்கு உலகங் களையும் கண்டாள்; அசைவற்று நின்று விட்டாள் ஒருகண நேரம். குழந்தையின் காலில் விழுந்து கும்பிடவும் கருதிவிட்டாள். பிறகு நிதானித்தாள். குழந்தை வாயை மறுபடியும் நோக்கினாள். வெறும் வாய்தான் இருந்தது. கண்ணன் கோவர்த்தனத்தைத் தூக்கி நிறுத்தி ஆயர்களை யும் ஆநிரைகளையும் காத்த நிகழ்ச்சி ஆயர்களையும் நம் மையும் வியப்புறச் செய்வதோடு கல்மாரியை ஏவிய இந்திரனையும் வியப்புறச் செய்தது.

இவை நிற்க. இவ்வுலகம் எப்படித் தோன்றியது? இதற்குக் காரணம் என்ன?—இதுவும் வியப்பைத் தருவது தான். பாரதியாரின் இந்தப் பாடலில்,

பூமிக் கெனைய னுப்பினான்;—அந்த
 புதமண்ட லத்திலென் தம்பிக ளுண்டு;
நேமித்த நெறிப்படியே—இந்த
 நெடுவெளியெங்கணும் நித்தம் உருண்டே
போமித் தரைகள்

என்ற பகுதி வியப்புணர்ச்சியை எழுப்புகின்றதன்றோ?

# கண்ணன் - என் சேவகன்

*மகா பாரதத்தால் தூதுபோனவன்*
*ஏற்றம் சொல்லுகிறது.*[1]

என்பது ஸ்ரீவசன பூஷணம். இங்குத் தூதுபோனவன் கண்ணன்; சர்வேசுவரன். இங்கு 'சர்வேசுவரன்' என்று சொல்லாமல் 'தூதுபோனவன்' என்று சொன்னதற்குக் காரணம் என்ன? தேவ தேவனான தன்னுடைய பெருமையும், தான் மேற்கொள்ளும் தொழிலின் தாழ்வையும் பாராமல் கழுத்திலே ஒலை கட்டித் தூது போனதும், தேரோட்டியதும் போன்ற செயல்கள் எல்லாம் எம் பெருமான் அடியார்கட்குப் பரதந்திரனாய் இருக்கும் தன்மையில் உள்ள 'ருசி'[2]க்கு வசப்பட்டிருந்தமையால் தான் என்று கூறுவர் வைணவ ஆசாரியப் பெருமக்கள்.

மேலும் அவர்கள், "தூது போனது கர்மத்திற்குக் கட்டுப்பட்ட காரணத்தால் வந்ததன்று. இச்சை காரணமாகத் தன்னடியார்கள் திறத்தில் செய்யும் தாழ்ச்சியெல்லாம் ஏற்றத்திற்கு உடலாகும். 'அந்தப் பரமாத்மாவே இந்த உலகில் பிறந்ததனால்தான் மிக்க ஒளி

---

1. ஸ்ரீவசன புஷணம்-6 (புருடோத்தம நாயுடு பதிப்பு)
2. ருசி-பாவச் செயலையோ புண்ணியச் செயலையோ அறிந்தே செய்வதற்குக் காரணமாயுள்ள சுவை.

பெற்றான்'' என்று கூறும், 'அஷ்டகம்' என்னும் நூல்; வேதமும் இதனைத்தான் செப்புகின்றது. ஆகவே, பிறர் பொருட்டுத் தன் இச்சையால் செய்யும் செயல்களெல்லாம் இவனுக்கு ஒளியைத் தருவனவாகும். இவன் தூதுபோன செயலைத் தாழ்விற்குக் காரணமாக நினைப்பவர் அறிவு கேடர்களில் தலையானவர்கள் ஆவர். அறிவில் தலை நின்றவர்,

> 'எத்திறம் உரலினோடு இணைந்திருந்து
> ஏங்கிய எளிவே'[3]

என்று உரலினோடு இணைந்திருந்த கண்ணன் நிலையை நினைந்துபார்த்த நம்மாழ்வார் 'மூவாறுமாசம் மோகித்துக் கிடந்ததுபோல' தூது சென்ற செயலை எண்ணினால் நம்மையும் அந்த நினைப்பு அவ்வாறு செய்து விடும். இந்த நீர்மையின் ஏற்றத்தை வெளியிடுவதற்காகவே 'தூதுபோனவன்' என்று அருளிச் செய்தார் பிள்ளை உலக ஆசிரியர்'' என்று விளக்குவார்கள்.

பாரதியாரின் 'கண்ணன்—என் சேவகன்' என்ற பாடல் கண்ணனின் இந்த எளிமைக் குணத்தை எடுத்துக் காட்டுவதாக அமைந்துள்ளது என்று கருதலாம். இந்த அடிப்படையில் இப் பாடலைச் சிந்திக்க வேண்டும். அன்றியும், இப் பாடலில் சேவகர்களின் சேவையையும் எள்ளி நகையாடுகின்றார். இன்று அரசுப்பணி, வங்கிப் பணி, அரசுப் பொறுப்பிலுள்ள பிறதுறைப் பணி(தனியார் நிறுவனங்களில் பணியாற்றுவோரைத் தவிர) இவற்றில் பணியாற்றும் ஊழியரின் 'சேவை'யைக் கிண்டல் செய்யும் பாவனையிலும் இப்பாடல் அமைந்துள்ளது என்று கருதலாம். 'அரசுப்பணியாளர்கள்' (Government servants) என்பதுபோன்ற சொற்கள் பரிகாசத்திற்கு இடந்தருபவை

---

3. திருவாய். 1.3 : 1

களாகிவிட்டன. சுதந்திரத்திற்குப் பிறகு இவர்களின் தொகை 'பட்டாளம் போல்' பெருகி விட்டது. திட்ட ஆணையம் (Planning Commission) என்ற நிறுவனம் பெருகி வளர்ந்த வரலாற்றை தொடக்சம்முதல் இன்று வரை கருதினால் இவ்வுண்மை தெளிவாகப் புலனாகும். எண்ணிக்கை பெருகப்பெருகத் திறமை தலைகீழ் விகிதத்தில் (Inverse proportion) போவதையும்காணலாம். இன்று முற்பகல் வேலைதொடங்கும் நேரம் முதல் பிற்பகல் வேலை விடும் நேரம்வரையில் அரசு, கல்லூரி, பல்கலைக் கழகம் முதலிய நிறுவனங்களில் நுழைந்து பார்த்தால் கணிசமான அளவில் இருக்கைகள் காலியாகவே இருக்கும். எழுத்து மூலம் விடுப்பு எடுத்தோர் போக விடுப்பில்லாமல் இருக்கையில் காணப்பெறாதவர். தொகை கணிசமாக இருக்கும். அவசர காலநிலை (Emergency) தோன்றும் காலத்தில் மட்டிலும் இப்பணியாளர்களை இருக்கைகளில் காணலாம். செயலாற்றும் திறமையும் மிகுதியாக இருப்பதையும் பார்க்கலாம். பணியாளர்கள் சினம் கொள்ளாமல் தம் நெஞ்சில் கைவைத்து மனச்சான்றைச் சோதித்தால் இவ்வுண்மை தெளிவாகத் தட்டுப்படும்.

பொதுவாகச் சேவகர்கள்— பணியாளர்கள்—பற்றி பாரதி கூறுகின்றார் :

கூலிமிகக் கேட்பார்
கொடுத்ததெல்லாம் தாம்மறப்பார்;
வேலைமிக வைத்திருந்தால்
வீட்டிலே தங்கிடுவார்;

இது பொதுவாக அரசு ஊழியர்கள் உட்பட வேலையாட்களின் இயல்பு என்பதை எல்லோரும் அறிவர். ஊதியம் பெறும் அனைவருமே மனோதத்துவப் போக்கில் ஒரே வகையில் அடங்குவர். கற்றோர்கள்கூட இதற்கு விதி விலக்கு இல்லை. இவர்கள்கூட சங்கம் அமைத்துக்கொண்டு

'கலாட்டா' செய்யவில்லையா? கல்லாத பணியாளர் களைப் பற்றி பாரதியார் கூறுவது:

> 'ஏனடா, நீநேற்றைக்கு
> இங்குவர வில்லை' என்றால்
> பானையிலே தேளிருந்து
> பல்லால் கடித்ததென்பார்;
> வீட்டிலே பெண்டாட்டி
> மேற்பூதம் வந்ததென்பார்;
> பாட்டியார் செத்துவிட்ட
> பன்னிரண்டாம் நாள்என்பார்;

ஈண்டு வாராமைக்கு மூன்று 'சாக்குபோக்குகள்' கூறப்பெறுகின்றன. மூன்றாவதாகக் கூறும் காரணத் தைப்பற்றி என் ஆசிரியப் பெருந்தகை லீ பாதிரியார் அவர் கள் திறனாய்ந்து சொன்னது (1934-35) ஈண்டு நினைவிற்கு வருகின்றது. திருச்சி புனித சூசையப்பர் கல்லூரியில் நான் படித்த காலத்தில் மாணாக்கரின் ஒழுங்குபற்றிக் கண்டிப்பு இருந்தது : கல்லூரிக்கு வாரா விட்டால் எழுத்து மூலம் விடுப்பு வாங்கவேண்டும்; விடுமுறைக்குப் பிறகு கல்லூரிதிறக்கும்போது எல்லோரும் வருதல்வேண்டும். அப்படி வாரா நிலை ஏற்பட்டால் பெற்றோர் கடிதத்துடன் வருதல் வேண்டும். இம்முறை யில் தவறினால் ரூ. 5-00 தண்டம் (Fine) கட்டுதல் வேண்டும். கல்லூரியில் முதல்வகுப்பில் (First University Class) சேர்ந்துப் படிப்போருக்கு முதல் மூன்று மாதம் வரை விதிமுறைகளைச் சற்றுத் தளர்த்துவார்கள். அக் காலத்தில் லீ சாமியார் வகுப்பில் நகைச் சுவை கிளப்பு வார். விடுப்புக் கடிதங்களுக்குக் காரணம் எழுதச்சொல்லித் தருவார்; பாட்டியார் இறத்தல், பாட்டியாருக்கு 12-ஆம் நாள் சடங்கு, பாட்டியாருக்கு முதலாண்டு திவசம் என்று எழுதுமாறு கூறுவார். இவையெல்லாம் தீர்ந்த பிறகு

பாட்டியார் மீண்டும் பிறத்தல், முதல் ஆண்டு நிறைவு... இப்படி எழுதுமாறு சொல்லி அவரே சிரிப்பார்! காரணம், பெரும்பாலும் நாட்டுப்புறத்திலிருந்து வரும் மாணாக்கர் கட்கு அவர் பேசும் ஆங்கிலம் புரியாததால், அவர் நகைச் சுவையைக்கேட்டு சிரிக்காமலிருப்பர்; அவர் சிரிப்பதால் இவர்களும்சேர்ந்து சிரிப்பர். வகுப்பு கலைந்த பிறகு புரியா மல் சேர்ந்து சிரித்ததற்கு ஒருவரையொருவர் காரணம் வினவுவர்; இதிலிருந்து அவர்கள் புரியாத நிலையைத் தெரிந்துகொள்ளலாம். இந் நிகழ்ச்சிகளையெல்லாம் நினைந்து பார்க்கும்போது சிரிப்பு வருகின்றது. ‘நொண்டிச் சாக்கு’ கொண்டு விடுப்பு விண்ணப்பம் எழுதுவோர் இதனைச் சிந்திப்பாராக.

சில பணியாளர்கள் பொய்யே அவதாரம் எடுத்தது போல் காணப்பெறுவர். சிலர் சொல் வேறு, செயல் வேறு என்றிருப்பர். சிலர் ‘புறணி’ பேசுவதையும் உள்வீட்டுச் செய்திகளை ஊரம்பலப்படுத்துவதையும் வழக்கமாகக் கொண்டிருப்பர்.

ஓயாமல் பொய்யுரைப்பர்;
    ஒன்றுரைக்க வேறுசெய்வார்;
தாயாதி யோடு
    தனியிடத்தே பேசிடுவார்;
உள்வீட்டுச் செய்தியெல்லாம்
    ஊரம்பலத் துரைப்பார்;
என்வீட்டில் இல்லையென்றால்
    எங்கும் முரசறைவார்;
சேவகரால் பட்ட
    சிரமம்மிக உண்டுகண்டீர்

இவையெல்லாம் வீட்டுச் சிறு சேவகர்கள், வேலைக்காரி கள் இவர்களிடத்தில் இன்றும் காணலாம். அரசு ஊழியர் களும் இதற்கு விதிவிலக்கு இல்லை. மனித இயல்பு

எப்பொழுதும் ஒன்றுதானே. சில குடும்பங்களில் வேலைக் காரர்களோ, வேலைக்காரிகளோ இல்லாமல் காலம் தள்ளுவது முடியாது.

சேவகர்இல் லாவிடிலோ
செய்கை நடப்பதில்லை.

வாழ்க்கையைக் கூர்ந்து நோக்குபவர்கள் கவிஞர்கள். அதனால் சிறுசிறு செய்திகளையும் கூர்ந்து கவனிக்கின்றனர்; அவற்றை நுட்பமாகத் தம் கவிதைகளில் அமைத்தும் விடுகின்றனர்.

சில நல்ல சேவகர்களும் இல்லாமல் இல்லை. சரியான கையாட்களாகச் சிலர் செயற்படுவதையும் காணத்தான் செய்கின்றோம். இப்படி ஆள் அமைவது 'பூர்வ புண்யம்' என்று சொல்லுவார்கள். இவர்களையும் கவிஞர் ஒருவன் மூலம் காட்டுகின்றார். இப்படிப்பட்ட ஒருவன் எங்கிருந்தோ வருகின்றான். தான் இடைச்சாதியைச் சேர்ந்தவன் என்றும் உரைக்கின்றான். இவன் தன்னைப் பற்றிச் சொல்லிக்கொள்வது :

மாடுகன்று மேய்த்திடுவேன்
மக்களைநான் காத்திடுவேன்
வீடு பெருக்கி
விளக்கேற்றி வைத்திடுவேன்;
சொன்னபடி கேட்பேன்
துணிமணிகள் காத்திடுவேன்;
சின்னக் குழந்தைக்குச்
சிங்காரப் பாட்டிசைத்தே
ஆட்டங்கள் காட்டி
அழாதபடி பார்த்திடுவேன்;
காட்டுவழி யானாலும்
கள்ளர்பய மானாலும்,

இரவிற் பகலிலே
    எந்நேர மானாலும்
சிரமத்தைப் பார்ப்பதில்லை,
    தேவரீர் தம்முடனே
சுற்றுவேன் தங்களுக்கோர்
    துன்பமுறாமற் காப்பேன்.[4]

புதிய வேலைக்காரனை அமர்த்தும்போது, அவன் தன்னைப்பற்றி இவ்வாறெல்லாம் சொல்லிக் கொள்வதை இன்றும் காணலாம். சில தனிப்பட்ட பண்பு நலன்களை யும் எடுத்துரைப்பதையும் காண்கின்றோம்.

கற்றவித்தை யேதுமில்லை;
    காட்டு மனிதன், ஐயே!
ஆனபொழுதும் கோலடி
    குத்துப்போர் மற்போர்
நானறிவேன்; சற்றும்
    நயவஞ் சனைபுரியேன்.

இப்படியெல்லாம் பேசும் வேலைக்காரர்களைக் காண்கின்றோம். இங்ஙனம் சொல்லுகிறபடி நடப்பவர்கள் சிலரே; சிலர் வேறுவிதமாகச் செயற்படுவதுமுண்டு. இல்லக் கிழத்தி அமைவதும், நல்ல வீட்டு வேலையாள் அமைவதும் ஒருவர்தம் நற்பேறு என்றுதான் சொல்ல வேண்டும்.

பாரதியார் காட்டும் 'கண்ணன் என்ற சேவகன்' நல்ல உடற் கட்டுள்ளவன். கண்ணிலே களங்க மற்ற பார்வை, வாயில் இனிமையான பேச்சு. யார் கண்டாலும் 'நல்ல வேலைக்காரன்' என்ற கருத்து ஏற்பட்டுவிடும்.

---

4. 'படிக்காத மேதை'—என்ற தமிழ்த் திரைப்படத் தில் 'கண்ணன்-என் சேவகன்' அற்புதமாகக் கையாளப்பெற் றுள்ளது. 'நடிகர் திலகம்'—நம்மை நன்கு கவர்கின்றார்.

இந்தக்கண்ணன் தனக்கு வேண்டிய 'கூலி'பற்றிப் பேசுகின்றான் :

தாலிகட்டும் பெண்டாட்டி
    சந்ததிகள் ஏதுமில்லை;
நானோர் தனியாள்;
    நரைதிரைதோன் றாவிடினும்
ஆன வயதிற்கு
    அளவில்லை; தேவரீர்
ஆதரித்தால் போதும்
    அடியேனை; நெஞ்சிலுள்ள
காதல் பெரிதெனக்குக்
    காசுபெரி தில்லை.

கண்ணன் பேச்சினைப் பார்த்தால் இவன் பண்டைக் காலத்துப் பைத்தியத்தில் ஒன்றாகக் காணப்படுகின்றான். வாஷிங்க்டன் இர்விங் படைத்த 'ரிப்வான் விங்கிள்' என்ற கதை மாந்தனை ஒத்தவனாகத் தெரிகின்றான். சௌலப்பிய குணத்திற்குப் பெயர்போன இதிகாசக் கண்ணனையும் நினைவு படுத்துகின்றான். இந்தக் கண்ணனை வேலையாளாக அமர்த்திக்கொள்ளுகின்றார் கவிஞர். (இல்லை, கவிஞர் கண்ணனுக்கு அடிமையாகி விடுகின்றார்; பக்தனாகிவிடுகின்றார்).

கண்டு மிகவும்
    களிப்புடனே நானவனை
ஆளாகக் கொண்டுவிட்டேன்
    அன்றுமுதற் கொண்டு
நாளாக நாளாக
    நம்மிடத்தே கண்ணனுக்குப்
பற்று மிகுந்துவரல்
    பார்க்கின்றேன்; கண்ணனால்
பெற்றுவரும் நன்மையெல்லாம்
    பேசி முடியாது.

எப்படிப் பேசமுடியும்? எம்பெருமானின் கருணை வெள்ளம் கோத்து வந்தால் அதனை எடுத்துச் சொல்ல மொழிகளிலே உள்ள சொற்களுக்கும் பஞ்சம்தானே! அவதாரங்களில் கிருஷ்ணாவதாரத்தில்தான் கிருஷ்ணன் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் தான் இறைவன்—எல்லா வல்லமையும் தனக்குண்டு—என்ற எண்ணத்துடன் செயலாற்றுகின்றான். இவன் திருவருள்—தோழமை—கிடைத்து விட்டால் சொல்ல வேண்டுமா? ஆகவே, அவன் கவிஞருக்குச் செய்யும் தொண்டுகளை அவரே கூறுகின்றார்.

கண்ணை இமையிரண்டும்
காப்பதுபோல், என்குடும்பம்
வண்ணமுறக் காக்கின்றான்
வாய்முணுத்தல் கண்டறியேன்;
வீதி பெருக்குகின்றான்;
வீடுசுத்த மாக்குகின்றன்;
தாதியர்செய் குற்றமெல்லாம்
தட்டி யடக்குகின்றான்;
மக்களுக்கு வாத்தி,
வளர்ப்புத்தாய், வைத்தியனாய்
ஒக்கநயங் காட்டுகின்றான்;
ஒன்றுங் குறைவின்றிப்
பண்டமெலாம் சேர்த்துவைத்துப்
பால்வாங்கி மோர்வாங்கிப்
பெண்டுகளைத் தாய்போற்
பிரியமுற ஆதரித்து
நண்பனாய் மந்திரியாய்
நல்லா சிரியனுமாய்,
பண்பிலே தெய்வமாய்ப்
பார்வையிலே சேவகனாய்
எங்கிருந்தோ வந்தான்
இடைச்சாதி என்று சொன்னான்.

இந்தக் கூறுகளில் சிலவற்றை சில குடும்பங்களில் வீட்டுவேலைக்காக அமர்த்தப்பெறும் சில பணியாட்களிடம் காணமுடிகின்றது. நாட்டுப் புறங்களிலிருந்து வரும் சில பணியாட்கள் முதல் சில ஆண்டுகள் இங்ஙனம் நல்ல முறையில் பணியாற்றுகின்றனர். நாளாக நாளாக 'நகரச் சாயம்' இவர்கள்மீது படியப் படியவே, பண்புகள் மாறுகின்றன; நகரக் கவர்ச்சிகள் இவர்களை ஆட்கொள்ளுகின்றன. மரத்துககு மரம் தாவித் தாவிச் செல்லும் குரங்குகளைப்போல் பல இடங்களுக்குத் தாவிச் செல்லுகின்றனர். இறுதியில் எங்கும் நிலைப்பதில்லை. சில குடும்பத்தலைவர்கள்/தலைவியர் இவர்களைச் சரியாகப் போற்றி ஆதரிக்காமையும் இவர்கள் இடம் மாறுவதற்குக் காரணமாகலாம். இங்ஙனம் இடம் மாறுவோர்களிலும் சிலர் தங்கள் திறமையால் பெரியபணிக்கும் போவதுண்டு. 'என்கடன் பணிசெய்து கிடப்பதே' (Work is Worship) என்ற குறிக்கோளைக் கொண்டவர்கள் இவர்கள். இறைவனே இவர்களை முன்னின்று காக்கின்றான் என்று கொள்ளல் வேண்டும்.

பாரதியார் உழைப்பில் நம்பிக்கை கொண்டவர், அவர் கூறுவார். "பொழுது வீணேகழிய இடங்கொடேன். இலௌகிக காரியங்களை ஊக்கத்துடனும் மகிழ்ச்சியுடனும், அவை தோன்றும் பொழுதே பிழையறச் செய்து முடிப்பேன்." பிறிதோர் இடத்தில்,

நமக்குத் தொழில் கவிதை
நாட்டிற் குழைத்தல்
இமைப்பொழுதும் சோரா
திருத்தல்

5. தோ. பா. விநாயகர் நான்மணி மாலை - 25

என்று கூறுவார். "இடையறாத தொழில் புரிந்து இவ்வுலகப் பெருமைகள் பெற முயல்வேன். இல்லாவிடில் விதிவசமென்று மகிழ்ச்சியோடிருப்பேன்" என்று வேறோர் இடத்தில் உரைப்பார். இன்னும் அவர்,

'செய்யுங் கவிதை பராசக்தி
யாலே செயப்படுங்காண்[6]

என்று தன்னிடம் கவிதை தோன்றுவதைப் பற்றிக் கூறுவார். தன் எழுத்தில் மிகவும் நம்பிக்கை கொண்ட கவிஞர் பெருமான்,

எழுதுகோல் தெய்வம்; இந்த
எழுத்தும் தெய்வம்.[7]

என்று போற்றியுரைப்பார். அதனால்தான் உழைப்பவர் களை—நல்ல உழைப்பாளிகளை—சே வ க ர் க ளை ப் பாராட்டுகின்றார். நல்ல சேவகர்களைக் கண்ணனாகவே போற்றுகின்றார்.

அ டி யா ர் மா ட் டு பேரன்பு கொண்டவன் எம்பெருமான். அவனது சௌலப்பிய குணம் அங்ஙனம் செயற்படுகின்றது. இரண்டு வைணவர்கள் சந்திக்கும் போது ஒருவர் 'அடியேன் தாசன்' என்று மற்றவர் காலில் விழ, அவர் 'அடியேன் இராமாநுசதாசன்' என்று இவர் காலில் விழுவதைப் பார்க்கின்றோம். 'தாசத்துவம்' இங்குப் போட்டி போடுகின்றது! இங்ஙனமே எம்பெருமான் அடியார்க்கு எளியவனாக—ஏன் அடியவனாக—அமை கின்றான். இதனைக் கவிஞர் நன்கு உணர்கின்றார். அதனால்,

6. மேலது—26
7. பாரதி அறுபத்தாறு-18

இங்கிவனை யான்பெறவே
　　என்னதவம் செய்துவிட்டேன்!
கண்ணன் எனதகத்தே
　　கால்வைத்த நாள்முதலாய்
எண்ணம் விசாரம்
　　எதுவும் அவன்பொறுப்பாய்ச்
செல்வம், இளமாண்பு,
　　சீர், சிறப்பு, நற்கீர்த்தி
கல்வி, அறிவு,
　　கவிதை சிவயோகம்
தெளிவே வடிவாம்
　　சிவஞானம், என்றும்
ஒளிசேர் நலமனைத்தும்
　　ஓங்கிவரு கின்றனகாண்!
கண்ணனைநான் ஆட்சிகொண்டேன்!
　　கண்கொண்டேன் கண்கொண்டேன்
கண்ணனை யாட்கொள்ளக்
　　காரணமும் உள்ளனவே!

என்று முழு மனநிறைவுடன்—எக்களிப்புடன்—பேசுகின்றார் கவிஞர்.

இவ்விடத்தில,

கண்ணனைநான் ஆட்சிகொண்டேன்
..............................................
கண்ணனை யாட்கொள்ளக்
　　காரணமும் உள்ளனவே.

என்ற அடிகள் நம்மைச் சிந்திக்க வைக்கின்றன. முமுட்சுப்படியிலுள்ள,

போக தசையில் ஈச்வரன் அழி
க்கும்போது நோக்கவேணும்
என்று அழியாதொழிகை[8]

---

8. முமுட்சுப்படி - 92

என்ற வாக்கியத்தை நினைவுகூர்கின்றோம். ஈசுவரன் சீவனாகிய தன்னோடு கலந்து பரிமாறும் போது, அவன், தன்மாட்டுக் கொண்டுள்ள பிரேமப் பித்தினால் தாழ நின்று பரிமாறி, தன்னுடைய சேஷத்துவத்தை (அடிமைத் தன்மையை) அழிக்குங்கால், 'நம் சேஷத்துவத்தை நாம் நோக்கிக் கொள்ள வேண்டும்' என நினைத்து சீவனாகிய தான் பின்வாங்கி, அவன் போகத்தைக் கெடுக்காமலிருக்க வேண்டும் என்பது இவ்வாக்கியத்தின் பொருளாகும்.

ஈசுவரன் சேதநனை வினியோகம் கொள்ளல் இரண்டு வகைப்படும். இவற்றுள் அவன் தலைவனாகவே இருந்து இவனை அடிமையாக வைத்துப் பரிமாறுதல் ஒருவகை. சில சமயம் அவன் இவனோடு கலந்து போகந் துய்க்கக் கருதுவான். அவ்வமயம் ஈசுவரன் சேதநனை அடிமை கொள்பவன் போன்று, இவனிடம் நெருங்கி, இவன்மாட்டுத் தனக்குள்ள வேட்கைமிகுதியால் இந்தச் சீவான்மாவைத் தலைவனாக வைத்துத் தான் அடிமையாக இருந்து, இழிதொழில் செய்து அவ்விதத்தில் சேதநனை வினியோகம் கொள்ளுதல் மற்றொருவகை. இதற்குக் குசேலர் வரலாற்றைச் சான்றாகக் கொள்ளலாம்.

பரமபக்தராகிய குசேலர் தன் துணைவியின் தூண்டுதலால் கண்ணனிடம் செல்லுகின்றார். இவன் வருகையைக் காவலரால் அறிந்த துவரைநாதன், தானே அரியணையினின்றும் இறங்கி வந்து, "திலகமண்தோய கண்ணன் திருவடி தொழுதிட்டானே"[9] என்றவாறு கண்ணனை வணங்குகின்றான். பின்பு தன்னுடன் அவரை அழைத்துச் சென்று, அவருடைய திருவடிகளைத்

9. குசேலோபாக்கியானம்—குசேலர் நகர்ப் புறத்தை அடைந்தது—செய். 404

தன் மடிமீதுவைத்து, "இத்திருவடிகள் பல கல் தொலைவு நடந்து நொந்தனவே" எனப் பகர்ந்து கொண்டே அவற்றை மெல்லெனப் பிடிக்கின்றான். குசேலர் துவரைநாதன் செய்யும்உபசாரங்களுக்குத் தம் பாரதந்திரியத்திற்கேற்ப[10] இசைந்திருக்கின்றார். இதனை.

'வழிநடந் திளைத்த வேஇம்
மலரடி இரண்டும்?' என்று
கழிமகிழ் சிறப்ப மெல்ல
வருடினான் கமலக் கண்ணன்;
பழியில்பல் உபசா ரங்கள்
பண்ணவும், தெரியா னாகி
ஒழிவரு தவக்கு சேலன்
ஒன்றும்பே சாதி ருந்தான்"

என்று விளக்குவர் வல்லூர் தேவராசப்பிள்ளை. இங்ஙனம் கண்ணன் தன்னிடம் சேவகனாக வந்துள்ளதைக் கற்பனையில் நினைந்து அவன் கைங்கரியத்தை ஏற்றுக் கொள்ளுகின்றார் கவிஞர்; 'கண்ணனை நான் ஆட்சிகொண்டேன்' என்கிறார். 'கண்ணனை ஆட்கொள்ளக் காரணமும் உள்ளனவே' என்றதனால் கண்ணன் புரியும் 'சேவகங்களுக்கு' இசைந்து கொடுக்கின்றார் என்று கொள்ளல் பொருத்தமாகும். பாரதியாரும் மானச நிலையில் குசேலரை ஒக்கின்றார். 'கண்ணன்—என் சேவகன்' என்ற பாடல் இப்படியெல்லாம் நாம் சிந்திக்க இடந்தருகின்றது.

எம்பெருமான் அடியார்க்கு அடியன்; எளியன் பிரகலாதனுக்கும் கஜேந்திர ஆழ்வானுக்கும் அவன்

---

10. பாரதந்திரியம் - பரனுக்கு (எம்பெருமானுக்கு) வசப்பட்டிருக்கும் தன்மை.

11. குசேலோபாக்கியானம் - குசேலர் நகர்ப் புறத்தை அடைந்தது - செய். 410

செய்த உதவி சொல்லுந்தரமன்று. பாண்டவர்கட்கு அவர்தம் வாழ்நாள் முழுவதும் செய்த உதவி அளவிட்டுக் கூற வொண்ணாது. பலன் கருதாது எம்பெருமானுக்குச் செய்யும் கைங்கரியம் அவனையடையத் துணைசெய்கின்றது. எம்பெருமானுக்கு வயது என்பது இல்லை: என்றும் இளையனாகவே இருப்பான். கிழத்தன்மை—வயது முதிர்வு—அவனை அடைவதில்லை. அவன் பலன் கருதாத அடிமைத்தொழிலையும், நினைவு கொள்ளாமல் அன்பாலும் காதலாலும் செய்யப்பெறும் கடமைகளையும் கணக்கிற்கு எடுத்துக் கொள்வான். பாரதியாருக்குக் கண்ணன் 'நண்பனாகவும், மெய்விளக்க அறிஞனாகவும் வழிகாட்டியாகவும்' இருக்கின்றான். நம்முடைய புராணங்களும் இதிகாசங்களும் எம்பெருமானின் சௌலப்பியத்தைப்பற்றி (Easy accsesibility) பரக்கப் பேசுகின்றன; அவன் அடியார்க்கு அடியனாக இருப்பதைப் புகழ்ந்து பேசுகின்றன. இந்தக் கவிதையில் பாரதியார் அன்பையும் தொண்டையும்பற்றிப் பேசி நம்முடைய கவனத்தை அவற்றில் ஈர்க்கின்றார் என்று கருதலாம்.

பரிபாடலில் திருமாலைப்பற்றி வரும் பாடலொன்றில்

அவரவர் ஏவ லாளனும் நீயே
அவரவர் செய்பொருட்கு அரணமும் நீயே.[12]
[அரணம் - காப்பு]

என்று வருதலையும் சிந்திக்கலாம். அவரவர் நினைத்தவற்றை முடித்துத் தருதலால், இறைவன் அவரவர்க்கு ஏவலாளன் ஆகின்றான். அவரவர் செய்யும் அறம் முதலிய நாற்பொருட்கும் காப்பாகவும் அமைகின்றான் என்ற கருத்தும் இப்பாடலின் கருத்தை ஒரு புடையொத் திருத்தலைக் கண்டு மகிழலாம்.

---

12. பரிபா. 4; அடி (72-73)

# கண்ணன்—என் அரசன்

எம்பெருமானை அரசன் நிலையில் வைத்து எண்ணப்படும் மரபு தமிழ் இலக்கியங்களில் காணப்படுகின்றது. "மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்"[1] என்ற புறநானூற்றுத் தொடர் இதனை எடுத்துக்காட்டும். ஒரு சமயம் மோசிகீரனார் வேந்துடை அவையத்து இருந்த பொழுது அவையிலிருந்த சான்றோரிடையே அரசர்க்கும் அவர் குடைநிழலில் வாழும் குடிகட்குமுள்ள தொடர்பு பற்றி ஆய்வு நிகழ்ந்தது. ஒரு சாரார் வேந்தனே நாட்டிற்கு உயிர் என்றனர்; மற்றொரு சாரார் பொருளே (நெல்லும் நீரும்) உயிர் என்றனர். ஆங்கிருந்த மோசிகீரனார், "நாடாளும் வேந்தன் 'இவ்வுலகிற்கு யானே உயிர்; ஏனை நெல்லுமன்று; நீருமன்று' என்பதை அறிந்தொழுகும் அரசுமுறை உயிர் நிலையாம்" என்ற கருத்துப்பட எடுத்துரைத்ததாக வரலாறு. இந்த மரபினைச் சமயச் சான்றோர் வாக்கிலும் காணலாம். திருமங்கை யாழ்வார்,

> எம்பிரான் எந்தை என்னுடைச் சுற்றம்
> எனக்கு அரசு என்னுடை வாழ்நாள்[2]

1. புறம் - 186.
2. பெரி. திரு. 1. 1: 6

என்று கூறுவர். பல்வேறு உறவு முறைகளைக் கூறும் ஆழ்வார் "எனக்கு அரசு - என்னை ஆண்டவன்" என்று மொழிவதைக் காணலாம். இன்னும் இந்த ஆழ்வார் எம் பெருமானை 'எங்கள் எம் இறை'[3] என்றும், 'எவ்வம் நோய் தீர்ப்பான் எமக்கிறை'[4] என்றும் குறிப்பிட்டுள்ளமை சிந்திக்கத் தக்கது.

'கண்ணன்—என் அரசன்' என்ற பாடலில் பாரதியார் இதிகாசக் கண்ணனைக் காட்டி அவன் தனக்குச் செய்த நற்செயல்களை எண்ணிக் களிக்கின்றார். ஆயினும் அவன் நல்லவர்களை "திராவகச் சோதனைக்கு" (Acid test) உட்படுத்துவதையும், 'தெய்வம் இல்லையோ?' என்று மனம் வருந்தி நைந்து போகும் நிலைக்கு அவர்கள் தள்ளப் படுவதையும் சுட்டிக் காட்டவே செய்கின்றார் எடுத்த எடுப்பில்,

பகைமை முற்றி முதிர்ந்திடு மட்டிலும்
பார்த்திருப்ப தல்லா லொன்றுஞ் செய்திடான்
நகைபு ரிந்து பொறுத்துப் பொறுத்தையோ
நாட்கள் மாதங்கள் ஆண்டுகள் போக்குவான்.

என்று இக்கருத்தினைச் சுட்டும் பாங்கிலேயே கவிதை தொடங்குகின்றது. அடியார்கள், நல்லவர்கள் இவர்கள் மனம் நைந்து போவதை,

கண்ணன் வென்று பகைமை யழிந்துநாம்
கண்ணிற் காண்ப தரிதெனத் தோன்றுமே;
எண்ணமிட் டெண்ண மிட்டுச் சலித்துநாம்
இழந்த நாட்கள் யுகமெனப் போகுமே.

என்ற பகுதியால் அறியலாம், கண்ணன் பாண்டவர்களின் பக்கத் துணையாகத்தான் இருந்தான். இருப்பினும்,

3. மேலது. 9. 10: 1
4. மேலது 9. 10; 2

கேட்டாலே மனம் துணுக்கமடையும் அடாத செயல்கள் துரியோதனன் அரசவையில் நடப்பதும், கற்றறிந்த சான்றோர் அவற்றைத் தடுக்கமுடியாது வாளா இருப்பதும், அறமே தலை சாய்ந்ததுபோல் யுதிட்டிரன் அனைத்தையும்இழந்து தலைகுனிந்து திகைப்பதும், நூற்றுவர் தங்கள் சூழ்ச்சி பலித்ததென்று கொக்கரித்துக் கொண்டிருப்பதும், பாஞ்சாலி அரசவைக்குள் வலிந்து இழுத்து வரப்பெற்று உலகம் கேட்டிராத முறையில் அவமானப் படுத்தப் பெறுவதும், புயவலியையே தெய்வமாகக் கொண்ட வீமன் குமுறி எழும் சினத்தை அடக்கமுடியாது தன் அண்ணன் தருமனைப் பழித்துக் கூறுவதும், வீரமே உருவடுத்த பார்த்தன் இந்தக் கொடுமைக்கிடையில் சமநிலையைக் காத்து,

'தருமத்தின் வாழ்வதனைச் சூதுகவ்வும்;
தருமம் மறுபடி வெல்லும்,

என்ற தத்துவம் பேசி, வீமன் சினத்தைத் தணிப்பதும் போன்ற நிகழ்ச்சிகள், பாண்டவர்களின் காடுறை வாழ்க்கையில் சொல்லொணா அவலங்களை அநுபவிப்பதுமான செயல்கள் ஆகியவற்றை நினைந்துதான் பாரதி இங்ஙனம் பாடியிருக்க வேண்டும்.

கண்ணனின் செயல்களும், செயற்படும் போக்கும் ஒருவகைப் புதிராகத்தான் உள்ளன. ஆயர்பாடியில் வளரும் காலத்தில் அவன் நிகழ்த்திய அருஞ்செயல்கள் யாவும் புதிர்களே.

கொல்லப் பூதம் அனுப்பிடு மாமனே
கோலு யர்த்துல காண்டு களித்திட
முல்லை மென்னகை மாதர்க்கும் பாட்டிற்கும்
மோக முற்றுப் பொழுதுகள் போக்குவான்

..................................
தானம் கீர்த்தனை தாளங்கள் கூத்துகள்
தனிமை வேய்ங்குழல் என்றிவை போற்றுவான்.

இவை மட்டுமா? துன்பப் படுங்கால்,

காலினைக் கையினால் பற்றிக் கொண்டுநாம்
கதியெமக் கொன்று காட்டுவை யென்றிட்டால்
நாலிலொன்று பலித்திடுங் காணென்பன்;
நாமச் சொல்லின் பொருளெங் குணர்வதே?

ஆண்டவன் என்று நினைத்து அவனை அணுகும்போது அவனே 'தத்துவம்' பேசினால் அதற்குமேல் 'மேல் வழக்கு' ஏது?

தெய்வநியதிகள் என்று சில உண்டு. அவற்றின்படி செயல்கள் நடைபெறும். அவை விளங்காப் புதிர்களாகவே இருக்கும். நம்மால் அவற்றை விளங்கிக் கொள்ளவே முடியாது. மெய்விளக்க அறிஞர்களும் சமயச் சான்றோர்களும் கூறுபவை ஒன்றுபோல் இராது. வள்ளுவப் பெருந்தகை இதனை ஊழ் என்று குறிப்பர். இதனால்தான், 'நாலிலொன்று பலித்திடுங்காண்?' என்று கண்ணனே உரைப்பதாகக் கவிஞர் கூறுகின்றார். எப்படியிருப்பினும் 'நாம் அவன் வலியினை நம்பிதான்' இருக்கின்றோம்.

நம்பினோர் கெடுவ தில்லை;
நான்கு மறைத் தீர்ப்பு;
அம்பி கையைச் சரண்புகுந்தால்
அதிகவரம் பெறலாம்.[5]

என்று கவிஞரே சொல்லியுள்ளதை நினைவுகூர்கின்றோம்.

அடுத்து, கண்ணனாகிய அரசனின் பண்புகளைக் காட்டுவார். கண்ணன் தீமைகளை விலக்குவான். சிறுமையை ஒளிந்தோடச் செய்து விடுவான் என்று கூறும் கவிஞர் மேலும் கூறுவார்;

5. தோ. பா.—41தேசமுத்துமாரி - 7

தந்திர ங்கள் பயிலவும் செய்குவான்;
சவுரி யங்கள் பழகவும் செய்குவான்;
மந்தி ரத்திற னும்பல காட்டுவான்;
வலிமை யின்றிச் சிறுமையில் வாழ்குவான்

காலம் வந்துகை கூடுமப் போதிலோர்
கணத்தி லேபுதி தாக விளங்குவான்;
ஆல கால விடத்தினைப் போலவே
அகில முற்றும் அசைந்திடச் சீறுவான்.

பகைமையைப் போக்குவதில் அவனுக்கு நிகர் அவனே. பெரியாழ்வார் குறிப்பிடும் ஒரு வரலாறு (எந்தப் புராணத்திலும் இதிகாசத்திலும் இல்லாதது இது), இதனைத் தெளிவாக்கும்.

சீமா லிகன் அவனோடு
தோழமை கொள்ளவும் வல்லாய்
சாமாறு அவனைநீ எண்ணிச்
சக்கரத் தால்தலை கொண்டாய்.6

என்ற ஆழ்வாரின் பாசுரப்பகுதியில் உள்ள வரலாறு இது; மாலிகன் என்ற பெயர் கொண்ட ஒருவன் கண்ணனுக்கு உயிர்த்தோழன். இவன் கண்ணனிடம் பலவகை ஆயுதங் களையும் பிரயோகிக்கும் முறைகளைப் பயின்றான். இவன் சாது மக்களைத் தன் ஆணவத்தால் தொல்லை கொடுத்துக் கொண்டிருந்தான். கண்ணன் 'இவனை எப்படி ஒழித்துக்கட்டுவது? நண்பனாயிற்றே!' என்று சிந்தித்தான். ஒருநாள் அவனிடம் 'நீ இப்படி அநியாயச் செயல்கள் புரிவது தகாது' என்று அறவுரை—அறிவுரை—கூற, அவன் 'எல்லா ஆயுதங்களைப் பிரயோகிக்கும் முறைகளைக் கற்பித்த நீ, சக்கரப்படையை ஏவும் முறையை கற்பித்தாய் இல்லை' என்று கண்ணனைக்

6. பெரியாழ். திரு. 2.7 : 8

குறை கூறினான். கண்ணனும், 'நண்பனே, அம்முறை மிக நுணுக்கமுடையது. உன்னால் அதனைக் கற்றுக் கொள்ள முடியாது' என்று உரைத்தான். இதனைக் கேட்ட மாலிகன் 'என்னால் முடியததுகூட ஒன்று உண்டோ? நீ அவசியம் அம் முறையை எனக்குக் கற்றுத்தருதல் வேண்டும் என வற்புறுத்தினான். கண்ணனும் 'இதுதான் தக்க சமயம்' என்று திருவுளங்கொண்டு திருவாழியை எடுத்துத் தன் ஒற்றை விரலால் சுழற்றி மேலெறிந்து கையிலேற்றிக் காட்டினான். உடனே மாலிகனும் 'இது எனக்கு அரிதோ?' என்று கூறி அப்படையை வாங்கிச் சுழற்றி எறிந்து பிடிப்பதாக நினைத்துத் தன் கைவிரலைக் கழுத்துக்கு அடுத்து வைத்து நிற்க, அச்சக்கரப்படை சுழன்று வருவதற்கு இடம் போதாமையால் அதன் வீச்சு இவன் கையில் பிடிபடாமல் இவன் தலையை அரிந்துவிட்டது. ஒழிந்தான் சீமாலிகன். இப்படி எத்தனையோ நிகழ்ச்சிகள். சிறுவயது முதற்கொண்டே அவன் புரிந்த 'விக்கிரமங்கள்' எல்லாம் எண்ணற்றவை. இவற்றையெல்லாம் நினைந்த வண்ணம் கவிஞர் கூறுவார் :

வேரும் வேரடி மண்ணும் இலாமலே
வெந்து போகப் பகைமை பொசுக்குவான்;
பாரும் வானமும் ஆயிரம் ஆண்டுகள்
பட்ட துன்பங்கள் கணத்திடை மாற்றுவான்.

மாபாரதம் தீர்த்து வைத்த வரலாறே ஒரு பெரிய சான்றாக நிற்கின்றது. 'போரில் படைஎடேன்' என்று வாக்களித்தவன், சொன்னதைத் திருப்பி வேறு விதமாகப் பேசும் வழக்கறிஞர்போல் சாமர்த்தியமாகப் படையை ஏவிப் பகலவனை மறைத்துப் பார்த்தனால் சயத்திரதனை முடித்த வரலாறு அற்புதம், அற்புதம். இதை நினைந்த கவிஞர் பெருமான்,

சக்க ரத்தை எடுப்ப தொருகணம்;
தருமம் பாரில் தழைத்தல் மறுகணம்;
இக்க ணத்தில் இடைக்கண மொன்றுண்டோ?
இதனுள் ளேபகை மாய்த்திட வல்லன்காண்!

என்று கூறுவார். இத்தகைய கண்ணனாகிய அரசனின் புகழினைக் கவிதையால் எல்லாக் காலமும் போற்றுவதாக உரைத்திடுவார்.

கண்ண னெம்பெரு மானருள் வாழ்கவே!
கலிய ழிந்து புவித்தலம் வாழ்கவே!
அண்ண லின்னருள் நாடிய நாடுதான்
அவலம் நீங்கிப் புகழில் உயர்கவே!

என்ற வாழ்த்துடன் இப்பாடலைத் தலைக்கட்டுகின்றார்

இந்தப் பாடலின் மூலம் 'அரசன் அன்று கொல்வான், தெய்வம் நின்று கொல்லும்' என்ற பழமொழியை நினைவுறுத்துவதுபோல் மெதுவாகச் செய்தாலும் உறுதி யாகச் செயல்களை நிறைவேற்றுகின்றான் என்பதை அறிகின்றோம். காற்றாடி விடும் பையன் கயிற்றினை தாராளமாக விட்டுப் பட்டம் உயரப் பறப்பதைக் கண்டு மகிழ்வதுபோல், தீச்செயல் புரிபவர் தகாத முறைகளைக் கையாண்டு வாழ்க்கை நடத்துவோருக்குச் சொற்பகாலத் திற்கு அற்ப மகிழ்ச்சியை நல்கி இறுதியில் அவர்களை அழியும்படி செய்கின்றான் இறைவன் என்ற உண்மையை இலைமறைகாய்போல் இக் கவிதையில் பெறவைக்கின்றார் கவிஞர். எல்லா நாட்டு, எல்லாக் காலத்துச் சித்தர்களைப் போலவே (Mytsics) பாரதியும் தன்னை ஒரு சித்தராகவே கருதுகின்றார் :

எனக்கு முன்னே சித்தர்பலர் இருந்தாரப்பா!
யானும் வந்தேன் ஒரு சித்தன் இந்தநாட்டில்.[7]

---

7. பாரதி அறுபத்தாறு - 1.

என்று அவர் வாக்கினாலேயே இதனைத் தெளியலாம். சித்தர்களைப் போலவே இவரும்,

மொய்க்கும் கவலைப் பகைபோக்கி
 முன்னோன் அருளைத் துணையாக்கி,
எய்க்கும் நெஞ்சை வலியுறுத்தி
 உடலை இரும்புக் கிணையாக்கி
பொய்க்கும் கலியை நான்கொன்று
 பூலோ கத்தார் கண்முன்னே
மொய்க்குங் கிருத யுகத்தினையே
 கொணர்வேன் தெய்வ விதியிஃதே.[8]

என்று சொல்லுவார். நம்மாழ்வார் போன்ற ஞானச் செல்வர்கள்,

என்சொலால் யான்சொன்ன
 இன்கவி என்பித்து,
தன்சொலால் தான்தன்னைக்
 கீர்த்தித்த மாயன்.[9]

என்று எம்பெருமானே தன்னுள்ளிருந்து பாடுகின்றான் என்று சொல்வதுபோலவே பாரதியாரும்,

செய்யும் கவிதை பராசக்தி
 யாலே செயப்படுங்காண்.[10]

என்று கூறுவார். 'நமக்குத் தொழில் கவிதை' என்று கூறியவர் அது பராசக்தியாலே செயப்படுகின்றது என்று கூறும்போது பராசக்தியின்மீது அவர் கொண்டிருந்த ஊற்றம் தெளிவாகின்றது.

---

8. தோ. பா.—விநாயகர் நான்மணி மாலை - 39
9. திருவாய் 7.9 : 2
10. தோ. பா.—விநாயகர் நான்மணி மாலை - 26.

இயல்—10

# கண்ணன்—என் குருவும் சீடனும்

கண்ணனைச் சற்குருவாகவும் சீடனாகவும் கொண்ட பாரதியாரின் கருத்தை ஆய்வதற்கு முன்னர் வைணவர்களிடையே நிலவி வரும் ஓர் இதிகாசத்தை நினைவுகூர்வது பொருத்தமாகும். வைணவ சமயத்தின் மூல மந்திரமாக இருப்பது திருமந்திரம். இது தன்னை செபிக்கின்றவர்கட்கு இரட்சகமாயிருத்தலின் மந்திரம் என்ற திருநாமத்தைப் பெற்றது. முன் ஒரு காலத்தில் சமுசாரிகள் பகவானுக்கு அடிமைப்பட்டிருத்தலாகிய தங்கள் நிலையையும், தங்களை ஒரு காரணமுமின்றி ஆட்கொள்பவனாகிய பகவானுடைய தன்மையையும் மறந்தனவர். இதனால் அடிமைத் தொழிலாகிய தங்கள் சிறந்த பலனையும் இழந்தனர். இந்த இழப்பைப் பற்றிச் சிறிதும் சிந்தனையின்றிச் சமுசாரமாகிய பெருங்கடலில் விழுந்து பல்வேறு துன்பங்களால் உழன்றனர் இந் நிலையை காணப் பொறுக்கமுடியாத 'தாயும் தந்தையுமான' எம்பெருமான், தங்களையும் (ஆன்ம சொரூபம்) அறிந்து தன்னையும் (பரமான்ம சொரூபம்) அறிந்து, தானாகிய மரக்கலத்தைக் கொண்டு தங்கள் பிறவிப் பெருங்கடலைக் கடந்து வீடுபேறாகிய கரையை அடைவதற்கேற்ற அறிவைப் பெறும் வழியைச் சிந்தித்தான். இந்தச் சிந்தனையின் விளைவாக எம்பெருமான் தானே சீடனும்

ஆசாரியனுமாக நின்று அநாதியானதும் அர்த்த பஞ்சக ஞானத்தைச் சுருக்கமாகத் தெரிவிப்பதுமான திருமந்திரத்தை வெளியிட்டருளினான். சீடனுடைய இலக்கணங்களை உலகினர் நன்கு அறிந்து கொள்ளாமையின் இவற்றைத் தன் செயல்களினால் (learning by doing) அறிவித்தற் பொருட்டே தான் சீடனாய் நின்றான்.

இதுதான் வரலாறு : சத்திய யுகத்தில் பதரிகாசிரமத்தில் தர்மதேவனுக்கும் தட்சப் பிரஜாபதியின் மகளாகிய மூர்த்திதேவிக்கும் இருவர் நரன், நாராயணன் என்ற பெயர்களுடன் விஷ்ணுவின் அவதாரங்களாகப் பிறந்தனர். இவர்தம் குழந்தைப் பருவம் நைமிசாரண்யத்தில் கழிந்தது; கந்தமாதன பருவதத்தில் இவர்தம் தவ வாழ்க்கை தொடங்கியது. பின்னர் தேவர்கள் முனிவர்கள் மக்கள் இவர்கட்குக் குரு—சிஷ்ய முறையை நன்கு விளக்கும் பொருட்டுப் பதரிகாசிரமத்திற்கு வந்தனர். நாராயணன் நரனுக்குத் திருமந்திரத்தை உபதேசித்தருளினன். இந்த வரலாற்றை பிள்ளை உலக ஆசிரியர் அருளியுள்ள முமுட்சுப்படி என்ற நூலும் குறிப்பிடுகின்றது.[1]

குருவை நாடுதல் : வாழ்க்கை உண்மைகளை நாடும் கவிஞர் சாத்திரங்கள் பலவற்றைத் தேடுகின்றார். அங்கு ஐயம் இல்லாதனவும் ஐயத்தை எழுப்புவதைக் காண்கின்றார். இவற்றை அவர் கோத்திரங்கள் சொல்லும் மூடர் கூற்றாகக் கருதுவதால் அவற்றில் உண்மைகள் எப்படிக் கிடைக்கும்? எந்தவகையிலேனும் 'சகமாயை' யைக்கண்டறிதல் வேண்டும் என்று துடிக்கின்றார். நாடு முழுதும் சுற்றி அலைகின்றவர் இறுதியில் யமுனைக் கரையில் கிழவர் ஒருவரைக் காண்கின்றார். அவரிடம்

1. முமுட்சுப் படி—5, 6.

பல 'சங்கதி' பேசி வருகையில், கவிஞரின் உள்ளத்திலுள்ள ஆசையை அறிந்து அவர் கூறுவது :

—"தம்பி,
நின்னுளத் திற்குத் தகுந்தவன்,—சுடர்
நித்திய மோனத் திருப்பவன்,—உயர்
மன்னர் குலத்தில் பிறந்தவன்,—வட
மாமது ரைப்பதி யாள்கின்றான்,—கண்ணன்
தன்னைச் சரணென்று போவையேல்—அவன்
சத்தியங் கூறுவன்"

என்று.

கிழவனார் ஆற்றுப்படுத்திய வண்ணம் கவிஞர் மதுரைப் பதி ஏகுகின்றார்; அங்கிருந்த கண்ணனிடம் தம்மை அறிமுகப்படுத்திக் கொள்ளுகின்றார். அவனோ உலகாயதத்தில் மூழ்கிக் கிடக்கின்றான். கவிஞருக்கு,

—சிறு
நாடு புரந்திடும் மன்னவன்—கண்ணன் – தவப்
நாளுங் கவலையில் மூழ்கினோன்;
பாடுபட் டோர்க்கும் விளங்கிடா—உண்மை
பார்த்திபன் எங்ஙனம் கூறுவான்?

என்ற ஐயம் எழுகின்றது. ஆனால், கண்ணன் கவிஞரைத் தனியிடத்திற்கு இட்டுச் சென்று பரஞானத்தை உபதேசிக்கின்றான் குருவாக நின்று.

அந்த உபதேசம்: "யாதொரு கவலையுமின்றி சிந்தையை நிலை நிறுத்துக, அப்பொழுதுதான் விண்ணையும் அளக்கும் அறிவு தோன்றும். சந்திரன் சோதி வடிவுடையது. அஃது என்றும் அழியாத பொருள். அதனைச் சிந்திக்கும்போதுதான் அது நின்னைச் சேர்ந்து அருள்பாலிக்கும். அதன் மந்திரத்தால் இவ்வுலகெல்லாம் தோன்றிய மாயக்களிப் பென்னும் கூத்தினைக் காணலாம். "இதைச் சந்ததம் பொய்யென்று உரைத்திடும் மடச் சாத்திரம் பொய்' என்று தள்ளுக."

மேலும் கூறுவார் : "ஆதித் தனிப் பொருள் கடல் போன்றது. அதில் தோன்றும் குமிழிகளே உயிர்களாகும். அறிவென்னும் ஞாயிறு தோன்றுகின்றது. அதனைச் சூழ்ந்த கதிர்கள் எல்லாம் உயிர்களாகும். இவற்றைத் தவிர ஏனைய பொருள்கள் யாவும் அதன் மேனியில் தோன்றும் வண்ணங்களாகும். இந்த உண்மையை அறிந்தே—எய்தியே—மக்கள் நேர்மையான தொழிலில் இயங்குகின்றனர். இந்த மக்கள் சித்தத்தில் சிவத்தைக் காண்கின்றனர்.[2] களிப்புடன் உலகத்தை ஆளுகின்றனர். களிறு போன்று பீடுநடை போட்டுக் களிப்புடன் எங்கும் திரிகின்றனர். 'இங்கு நித்தம் நிகழ்வன அனைத்துமே எந்தை நீண்ட திருவருளால் வரும் இன்பம்; சுத்த சுகம்; தனி ஆனந்தம்' எனச் சூழ்ந்து கவலைகளை ஒதுக்கித் தள்ளிவிடுகின்றனர்."

இன்னும் கூறுவார் : "அறிவில் ஒளி துலங்குகின்றது; மதியில் சூழ்ச்சித் திறம் பிறக்கின்றது. நீதி வழுவாமல் எந்த நேரமும் பூமியில் தொழில் செய்கின்றனர்; கலைத் திறம் கண்டு பொருளியல் காண்கின்றனர். பெண்மை மோகத்தில், செல்வத்தில், கீர்த்தியில் இன்பத்தால் எற்றுண்டு மகிழ்வெய்துகின்றனர். இவர்கள் ஆடுதல், பாடுதல், ஓவியம், கவிதை ஆகிய கலைகளில் ஈடுபட்டுத் திளைக்கின்றனர். தாம் நாடும் பொருள்கள் அனைத்தையும் சில நாள்களில் எய்தப்பெறுகின்றனர். இவர்கள் காட்டில் வாழ்ந்தாலும், புதர்களில் குடியிருந்தாலும் தாம் வாழும் இடத்தைத் 'தெய்வக் காவனம்' என்றே கருதுகின்றனர்."

இங்ஙனம் உபதேசம் செய்த கண்ணன்,

---

2. பாரதியாருக்கு சிவன், நாராயணன், சக்தி எல்லாம் ஒன்றுதான்.

"ஞானியர் தம்மியல் கூறினேன்—அந்த
ஞானம் விரைவினில் எய்துவாய்"

என்று தேனினும் இனிய குரலில் கூறவும் கவிஞருக்கு ஞான உதயம் ஏற்படுகின்றது; கழிபெரும் களிப்'பெய்துகின்றார்; அந்த எக்களிப்பில்,

"...உண்மைநிலை கண்டேன்—பண்டை
ஈன மனிதக் கனவெல்லாம்—எங்ஙன்
ஏகி மறைந்தது கண்டிலேன்;—அறி
வான தனிச்சுடர் நான் கண்டேன்!—அதன்
ஆட லுலகென நான் கண்டேன்"

என்று பேசுகின்றார். இதனால் கண்ணனை "எனது சற்குரு" என்று போற்றுகின்றார். இதனால்தான் பாரதியார் குவளைக் கண்ணன் புகழைப் பேசும் இடத்தில்,

பாங்கான குருக்களைநாம் போற்றிக் கொண்டோம்;
பாரினிலே பயந்தெளிந்தோம்; பாசமற்றோம்;
நீங்காத சிவசக்தி யருளைப் பெற்றோம்;
நிலத்தின்மிசை அமரநிலை யுற்றோம்; அப்பா!
தாங்காமல் வையகத்தை அழிக்கும் வேந்தர்,
தாரணியுள் பலருள்ளார், தருக்கி வீழ்வார்;
ஏங்காமல் அஞ்சாமல் இடர்செய் யாமல்
என்றுமருள் ஞானியரே எமக்கு வேந்தர்.[3]

என்று கூறினர்போலும் என்று சிந்திக்கத் தோன்றுகின்றது.

'கண்ணன்—என்சற்குரு' என்ற பாடலின் தலைப்பில் 'ரசங்கள் : அற்புதம், பக்தி' என்ற குறிப்பைக் கவிஞரே தந்துள்ளார். இதனை விளக்குவது அவசியமாகின்றது.

---

3. பாரதி அறுபத்தாறு - 44

இயல்—7 இல்[4] அற்புதரசம்பற்றிய விளக்கம் தரப் பெற்றுள்ளது. இயல்—5 இல்[5] 'பக்தி' என்பது இலக்கணப் படி ஒரு ரசம் அன்று என்றும், 'பக்திச் சுவை' என்று சொல்லுவது ஒரு வித உபசாரமே என்றும், அது சிருங்காரத்தில் அடங்கும் என்றும் விளக்கப்பெற்றுள்ளது. இவற்றை ஆண்டுக் கண்டு தெளிக.

சீடனைக் காணுதல் : கண்ணனே கவிஞரிடம் சீடனாக வருகின்றான்.

யானே யாகி என்னலாற் பிறவாய்
யானும் அவையுமாய் இரண்டினும் வேறாய்
யாதோ பொருளாம் மாயக் கண்ணன்

என்று முதலிலேயே தத்துவ ரூபமாகக் கண்ணனைக் காட்டுகின்றார். கவிஞர், எல்லாம் வல்ல இறைவன் ஆன்மாவிலும் உள்ளான்; ஆன்மாவிற்குப் புறத்திலும் உள்ளான்; சித்திலும் அசித்திலும் கலந்தும் உள்ளான்; அவற்றில் கலக்காமல் தனியாகவும் உள்ளான். இது தத்துவக் கருத்து.

அனைத்தும் நீ அனைத்துப்
பொருளும் நீ[6]

என்ற பரிபாடற் கருத்தையும்,

அவை அவைதொறும்...
கரந்தெங்கும் பரந்துளன்[7]

என்ற திருவாய்மொழிக் கருத்தையும் ஒட்டி அமைந்தது போல் தோன்றுகின்றது.

---

4. இந்நூல் பக்கம் 68 - 69
5. இந்நூல் பக்கம் - 47.
6. பரிபாடல் - 3 அடி - 68.
7. திருவாய். 1.1 : 7

தத்துவரூபமாய் இருக்கும் மாயக் கண்ணன்—மாயன்—கவிஞரிடம் வருகின்றான். எதற்காக வருகின்றான்? எப்படி வருகின்றான்? என்பதை,

என்னிலும் அறிவிற் குறைந்தவன் போலவும்
என்னைத் துணைக்கொண்டு, என்னுடை முயற்சியால்
என்னடை பழகலால் என்மொழி கேட்டலால்
மேம்பா டெய்த வேண்டினோன் போலவும்,
யான்சொலும் கவிதை என்மதி யளவை
இவற்றினைப் பெருமை இலங்கின என்று
கருதுவான் போலவும், கண்ணக் கள்வன்
சீடனாய் வந்தெனைச் சேர்ந்தனன்

என்று காட்டுகின்றார். இஃது ஒருவகை சௌலப்பியம் போலும்; "வெளியார் முன், வான்சுதை வண்ணம் கொளல்"[8] என்ற வள்ளுவத்தைப் பின்பற்றுகின்றார் போலும்! அந்தக் கண்ணனிடம் மாட்டிக் கொண்ட வரலாற்றைப் பன்னியுரைக்கில் பாரதமாம் என்கின்றார் கவிஞர்.

"தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கின்"[9] சிறந்தது என்பதை அறியாமல் தான் தவறு இழைப்பதை நினைந்துப் பார்த்துப் பேசுகின்றார் கவிஞர். "என் உள்ளத்தை நான் வெல்ல வில்லை. உலகத்தை வெல்ல நினைக்கின்றேன். என் அகந்தையை அடக்கவில்லை. எனக்குத் தெளிவு பிறக்கவில்லை; மகிழ்ச்சியும் ஏற்பட வில்லை. ஆனால், இந்த உலகத்திலுள்ள மாந்தர்க்கு உற்ற துயரை எல்லாம் மாற்ற நினைக்கின்றேன்; அவர் களை இன்பத்தில் இருத்த நினைக்கின்றேன்"—இந்தக்

8. குறள் - 714
9. மேலது - 436

குற்றத்திற்காகத் தண்டனை தர நினைத்து கண்ணனாகிய சீடன் வலிந்து கவிஞரைச் சார்கின்றான்.

மாயக் கண்ணன் அல்லவா? வந்தவன் புகழ்ச்சிகள் (முகஸ்துதி) கூறுகின்றான்; கவிஞரின் புலமையை வியப்பான் போலப் பாசாங்கு பண்ணுகின்றான். பலவகை யால் அகப்பற்றுறச் செய்கின்றான். வெறும் வாயை மெல்லும் கிழவிக்கு அவல் கிடைத்தால் சொல்ல வேண்டுமா? கவிஞருக்குத் தன் முனைப்பும் தற்பெருமை யும் சுரம்போல் ஏறுகின்றன. கண்ணனுக்கு அறிவு கொளுத்தத் தொடங்குகின்றார்.

''இன்னது செய்திடேல் இவரோடு பழகேல்
இவ்வகை மொழிந்திடேல், இனையன விரும்பேல்
இன்னது கற்றிடேல், இன்னநூல் கற்பாய்,
இன்னவ ருறவுகொள், இன்னவை விரும்புவாய்''

என்று பல்வேறு "தருமங்களை" எடுத்து ஓதுகின்றார்;[10] ஓய்விலாது அவனோடு உயிர் விடுகின்றார்.

ஓதினவையெல்லாம் செவிடன் காதில் ஊதின சங்கு கொலிபோ லாகின்றன.

கதையிலே கணவன் சொல்லினுக் கெல்லாம்
எதிர்செயும் மனைவிபோல் இவனும்நான் காட்டும்
நெறியினுக் கெல்லாம் நேர்எதிர் நெறியே
நடப்பா னாயினன்.

இந்நில வுலகில் மக்களின் மதிப்பையும் அவர்தம் புகழுறு வாழ்வையும் தெய்வமாகக் கொண்டவர் கவிஞர்.

---

10. இந்தச் செயல் இக்காலத்திலுள்ள 'கிழங்களை' நினைவு கூரச்செய்கின்றன. எங்கணும் பிறர்க்கு உபதேசம் செய்வதைத்தான் காண்கின்றோம்.

ஆனால் தன்னைச் சிறுமதியுடையவனாகக் கருதுகின்றார். இது உலகினர் உய்யவேண்டும் என்று உண்மையாகவே உயர் சிந்தனையில் செயலாற்றும் பெரியோர்களின் நிலையை எல்லாம் நினைத்துப் பார்க்கச் செய்கின்றது. போலிகளுக்குத்தான் காலம் என்ற சிந்தனையும் எழாமல் இல்லை. காரணம், அதைத்தானே எம்மருங்கும் காண்கின்றோம்!

கண்ணனாகிய சீடன் கவிஞர் காட்டிய நெறியினின்றும் விலகியே நடக்கின்றான். உலகினர் வெறுப்புறக் கருதும் அனைத்தையும் தலைமேற்கொள்ளுகின்றான்; அவர்களை இகழ்கின்றான்; பழிக்கின்றான். நாளாக நாளாகக் கண்ணன் தன் "கழிபடு நடையில் மிஞ்சுவானாயினன்." தெருவில் இவனைக் காணும் பெரியோகளும் கிழவியரும் 'இகழ்ச்சியோடு இரக்கமுற்று ஏளனம் புரியும்' நிலையையும் எட்டிவிடுகின்றான். கவிஞரின் வருத்தம் இவ்வளவு அவ்வளவு என்று அளவிட்டுரைக்க ஒண்ணாது. முத்தனாக்க நினைத்த கவிஞரின் முயற்சி அவனைப் பித்தனாக்கி விட்டதே என்று உலகினர் .பேசிய பேச்சு இவர் நெஞ்சினை வாள்போல் அறுத்தது. நீதிகள் சொல்லியும், தந்திரங்கள் பலவற்றைக் கையாண்டும் சாத்திரங்களைப் பயன்படுத்திச் சீடனைத் 'தொளைத்தும்' அவர் செய்த முயற்சிகள் யாவும் விழலுக்கு இறைத்த நீர்போலாயின. தேவர் நிலைக்குச் சேர்ந்திடாவிட்டாலும் மானிடர் நிலையினின்று தவறாதிருந்தால் போதும் என்று நினைக்கின்றார் கவிஞர். எனவே, கவிஞர் அவனை எப்படியாவது காத்திடல் வேண்டும் என்று கருதுகின்றார். சில சமயம் தீயெனக் கொதித்தும், சினமொழி கூறியும் தெருட்டுகின்றார். சிலசமயம் சிரித்துரை கூறியும் செள்ளென உமிழ்ந்தும், கேலிகள் பேசிக் கிளறியும் நாலா விதங்களில் நயம்பட உரைத்தும் இன்னும் எத்தனையோ

வழிகளைக் கையாண்டும் கண்ணனைத் தன் வழிக்குக் கொண்டுவர முயல்கின்றார். பயன்?

> கண்ணன் பித்தாய்க் காட்டா னாகி
> எவ்வகைத் தொழிலிலும் எண்ணமற் றவனாய்,
> எவ்வகைப் பயனிலும் கருத்திழந் தவனாய்
> குரங்காய்க் கரடியாய்க் கொம்பிடைப் பிசாசாய்
> யாதோ பொருளாய், எங்ஙனோ நின்றான்.

கவிஞரின் அகந்தையும் மமதையும், தலைதூக்கி நின்றன. கண்ணனை நேரில் கண்டு பேச நினைக்கின்றார். இவனை ஓர் தொழிலில் ஈடுபடச் செய்தால் கடைத்தேறு வான் என நினைக்கின்றார். அதற்கேற்ற சமயம் வருங்கால் அவ்வாறு செய்யலாம் என்று காத்திருக் கின்றார். ஒருநாள் கண்ணனைத் தன் வீட்டிற்குத் தனியாக இட்டுச்சென்று அன்பாகப் பேசுகின்றார். "மகனே, நீ வரம்பிலா நேசமும் அன்பும் உடையை. நான் ஒன்று கேட்பேன். நீ அதைச் செய்வாய் எனக் கருது கின்றேன். சேர்க்கையின்படியே மாந்தரின் செயல் எல்லாம் அமைகின்றன. வயிற்றுப் பிழைப்புக்காகப் பொருள்தேடி அலையும் நேரம்போக, சாத்திர நாட்டமும் தருக்கமும், கவிதையில் மெய்ப்பொருள் ஆய்வதில் பேரார் வமும் கொண்ட ஒருவருடன் சேர்ந்திருப்பதால் எனக்கு நன்மை உண்டு. நீயோ மிக்க அறிவுடையவன். உன்னைத் தவிர வேறொருவரை அறிந்திலேன். என் பயன் கருதி என்னுடன் சிலநாள் நீ இருக்குமாறு வேண்டுகின்றேன்." என்று தம் விருப்பத்தை வெளியிடுகின்றார்.

கண்ணனும் "அங்ஙனே புரிவேன். சோம்பலில் என்னால் காலத்தைக் கொன்னே கழித்தல் இயலாது. ஆகவே, எனக்கு ஒரு தொழிலைக் காட்டுவாய்" என்று மறுமொழி பகர்கின்றான். கவிஞனும்,

"என் செய்யுளை எல்லாம்
நல்லதோர் பிரதியில் நாடொறும் எழுதிக்
கொடுத்திடுந் தொழிலினைக் கொள்ளுதி"

என்று வேலை தருகின்றார். "என் செய்யுளை எல்லாம் நல்லதோர் பிரதியில் நாடொறும் எழுதிக் கொடுத்திடுந் தொழிலைக் கொள்ளுதி" என்று வேண்டுகின்றார் கவிஞர். ஒப்புக்கொண்டவன் ஒரு நாழிகை இருந்து ஏக முயல்கின்றான். பழங்கதை யொன்றைப் படி எடுத்துத் தருமாறு பணிக்கின்றார் கவிஞர். இணங்குவது போன்று நடித்திட்டு மறுகணம் கம்பிநீட்ட நினைக்கின்றான் மாயக் கண்ணன். கவிஞர் சினம் கொள்ளுகின்றார்: "ஏதடா சொன்ன சொல் மாறுகின்றாய். ஊரார் உன்னைப் பித்தனென்று உரைப்பது உண்மையாயிற்றோ?" என்கின்றார். "நாளை வந் திவ்வினை நடத்துவேன்" என்கின்றான் கண்ணன்.

கவிஞரின் சினம் உச்ச நிலையை எட்டுகின்றது. "இப்பொழுதே இதனைச் செய்வாயா? செய்யாயா? உடன் பதில் தருக" என்று உறுமுகின்றார் கவிஞர். "இல்லை" என்பதை இமைக்குமுன் கூறினான் கண்ணன். கவிஞரின் சினம் வெள்ளம்போல் பாய்கின்றது. கண்கள் சிவந்து இதழ்களும் துடிக்கின்றன; "சீச்சி, பேய் நீ. இனி சிறிது நேரம்கூட என்முன் நில்லாதே இனி என்பக்கம் தலை காட்டாதே. போ போ போ" என்று சொற்களை வெடிக்கின்றார். கண்ணனும் எழுந்து செல்குவானாயினன்.

கவிஞரிடம் இரக்க உணர்ச்சி தோன்றுகின்றது. விழி நீர் பெருக்கெடுக்கின்றது. சினத்தீ அந்நீரில் அழிகின்றது. கவிஞர் பேசுகின்றார்: "மகனே, சென்று வா. தேவர்கள் உன்னைக் காக்கட்டும். உன்னை மேம்பாடுறச் செய்ய ஏதேதோ செய்தேன். அவற்றில் தோற்றேன். திரும்ப வாராய். செல்க; வாழ்க!" என்று வாழ்த்துகின்றார்;

அமைதியோடு வாழ்த்து நடைபெறுகின்றது. கண்ணனும் சென்று விடுகின்றான்.

கவிஞர் எதிர்பாராதது நடைபெறுகின்றது. கண்ணன் எங்கிருந்தோ எழுதுகோல் பெற்றுத் திரும்புகின்றான். கவிஞர் காட்டிய பகுதியை கவினுற வரைகின்றான். பின்னர், "ஐயனே, அடியேன் தேவரீர் சொல்வழி நடப்பேன். தொழில் பல புரிவேன். அடியேனால் தேவரீருக்கு யாதொரு தீங்கும் எய்தாது" என்று உரைத்து நகைக்கின்றான்; திடீரென்று மறைந்து விடுகின்றான்.

அடுத்தக் கணத்தில் கவிஞரின் நெஞ்சில் தோன்றிப் பேசுகின்றான் : "மகனே, ஒன்றை ஆக்கலும், மாற்றுதலும், அழித்திடலும் நின்செயலன்று, 'தோற்றேன்' என்று உரைத்திடும்பொழுதே நீ வென்றவனாகின்றாய். உலகினில் நீ மேற்கொள்ளும் தொழிலெலாம் ஆசையும் தாபமும் அகற்றியே புரிவாய். வாழ்க நீ" என்கின்றான்.

இந்தக் கவிதையால் நாம் அறிந்து கொள்வதென்ன? எல்லா நிலைக் கல்வியும் படிப்போனை மையமாக வைத்து நடைபெறுதல் வேண்டும் (Child centred). குருவித் தலையில் பனங்காயை வைத்துக் கட்டுதல் கூடாது. மாணாக்கர்களின் உளப்போக்கை அறிந்து ஆசிரியர்கள் கற்பித்தல் வேண்டும். பெற்றோர்களும் தம் வழித் தோன்றல்கள் அவர்தம் திறமைக் கப்பாற்பட்ட கல்விபெறவேண்டும் என்று பிடிவாதம் பிடித்தல் கூடாது. பெற்றோரும் ஆசிரியரும் அரசும் மாணாக்கர்கள் கற்கும் சூழ்நிலையை உண்டாக்கல் வேண்டும்; உருவாக்குதல் வேண்டும்; விதையினுள் மறைந்திருக்கும் சிறுசெடி முளைத்து வளர்வதற்கு உழவன் பல்வேறு முறைகளை மேற்கொள்ளுகின்றான். எருவிடல், நீர்பாய்ச்சல், களை எடுத்தல், நோய் தொற்றாது மருந்து தெளித்தல் போன்ற செயல்

களை அவன் மேற்கொள்ளுகின்றானேயன்றி, வேறொன்றும் செய்வதில்லை. செடி தானாக வளர்கின்றது. நல்ல பலனையும் தருகின்றது. பாடம் பயிற்றலில் ஆசிரியர் ஆத்திரம் கொள்ளலாகாது. பெற்றோரும் வரம்பு மீறித் தம் தோன்றல்களின் முன்னேற்றத்திற்கு "அது, இது" என்று வேண்டாதவற்றைச் செய்வதினின்றும் ஒதுங்கிக் கொள்ளல்வேண்டும். 'மதிப்பெண் பட்டியல் ஊழல்களில்' ஆசிரியரும், பெற்றோரும், தேர்வாளர்களும், மதிப்பெண்களைப் பதிவு செய்வோரும் பங்கு பெற்றிருப்பதைக் காணும்போது தேசமே வெட்கப்பட வேண்டும் என்ற நிலை ஏற்படுகின்றது. கல்விபற்றிய பண்டையோரின் மெய்விளக்க நெறிப்படி யொழுகினால் கல்வியும் பெருகும்; திறமையும் வளரும். இவ்விடத்தில் பாரதியாரின்,

"படிச்சவன் சூதும் பாவமும் பண்ணினால்
போவான் போவான ஐயோவென்று போவான்"

புதிய கோணங்கியின்[9] அருள்மொழி, சம்பந்தப்பட்டவர்கட்கு ஓர் எச்சரிக்கையாக இருக்கட்டும்.

இங்குச் சீடன் ஆசிரியர்க்கு வழிகாட்டுவதுபோல் தோன்றுகின்றது—இராமாநுசர் திருக்கோட்டி நம்பியின் கண்களைத் திறந்து விட்டதுபோல. 'கண்ணன்—என் சீடன்' என்ற பாடல் கல்வி நெறியாளர்க்கும் பெற்றோர்க்கும்—ஏன்? கற்கும் மாணாக்கர்கட்கும் கூடத்தான்—கலங்கரைவிளக்குபோல் இருப்பதாகத் தோன்றுகின்றது.

9. பல்வகைப் பாடல்கள்—புதிய கோணங்கி

# கண்ணம்மா—என் குழந்தை

குழந்தைச் செல்வத்தைப் பாடாத கவிஞர்களே இல்லை எனலாம். உலகமொழிகளிலுள்ள இலக்கியங்களி லெல்லாம் மக்கட் செல்வத்தைப் பற்றிய கவிதை களைக் காணலாம்.

இம்மை யுலகத்து இசையொடும் விளங்கி
மறுமை உலகமும் மறுவின்று எய்துப
செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்
சிறுவர் பயந்த செம்ம லோர்எனப்
பல்லோர் கூறிய பழமொழி எல்லாம்
வாயே யாகுதல்[1]

[இசை - புகழ், மறு - குற்றம்; செறுநர் - பகைவர்; செம்மலோர் - தலைமையுடையவர்]

என்று செல்லூர்க் கோசிகன் கண்ணனார் என்ற சங்கப் புலவர் கூறியுள்ளார். மக்களைப் பெற்றவர்க்கு இவ் வுலகிலும் புகழ் உண்டு; மறுமை யுலகின் வாழ்வையும் குற்றமின்றி எய்துவர் என்கின்றார். இது வழிவழியாக வரும் பழமொழி என்று கவிஞர் குறிப்பிடுவதிலிருந்து இக் கருத்து மக்களிடையே நிலவி வரும் கருத்தாகும் என்பதை யும் அறிகின்றோம்.

1. அகம்.—66.

பிள்ளைப் பேற்றின் பெருமையைப் பற்றி பாண்டியன் அறிவுடை நம்பியின் கூற்று இது :

படைப்புப் பலபடைத்துப் பலரோடு உண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினும் இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறும் மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லை தாம்வாழு நாளே.[2]

[படைப்பு - படைக்கப்படும் செல்வம்; உடைப் பெரும் - உடைமை மிக்க; இடைப்பட - காலம் இடையே யுண்டாகி; இட்டும் - கலத்தில் உள்ளதைத் தரையில் இட்டும்; தொட்டும் - கூடப் பிசைந்து தோண்டியும்; துழந்தும் - கையால் துழாவியும்; கவ்வியும் - வாயாற் கவ்வியும்; விதிர்த்தும் - சிதறியும்; மயக்குறும் - இன்பத்தால் மயக்கும்]

சிறு பிள்ளைகள் உண்ணும் காட்சி பெற்றோர்க்கு இன்பந் தருவதைச் சொல்லோவியமாகக் காட்டுகின்றது இப்பாடல். தம் பெற்றோர் உண்ணும் உணவில் சிறு பிள்ளைகள் தம் இரு கைகளையும் இட்டும் தொட்டும் கவ்வியும் தம் உடலெங்கும் சிதறியும் 'சிறுகையான் அளாவித்' தொழில் புரிகின்றதையும்; அவர்கள் சிதைத்தலால் சிதறும் உணவை அவர் உண்ணுங்கால் உண்டாகும் இன்பம் பெரிதாதலையும் பாடல் குறிப்பிடுகின்றது. அப்போது அந்த இளஞ்சிறார் மிழற்றும் சொல்லும், செய்யும் செயலும் செவிக்கும் கண்ணுக்கும் உடலுக்கும் இன்பம் தந்து அறிவை மயக்குதலையும்

2. புறம்—188.

காட்டுகின்றது பாடல். இத்தகைய நலம் சான்ற மக்களைப் பயவாதார்க்குத் தாம் வாழும் நாளில் முடிக்கக் கூடிய பொருளே இல்லை என்பது பாடல் உணர்த்தும் உண்மை.

கலித்தொகையில் குழந்தை யின்பத்தைப்பற்றி ஒரு குறிப்பைக் காண்கின்றோம். பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் வீட்டிற்கு வெளியில் (சிறைப்புறத்தில்) நிற்கின்றான். அப்போது தலைவி குழந்தையாக இருக்கும் தன் மகனுக்கு உரைக்கின்றாள்:

கிளர்மணி ஆர்ப்பார்ப்பச்
சாஅச் சாஅய்ச் செல்லுந்
தளர்நடை காண்டல்
இனிது......[3]

[கிளர்மணி - விளங்கு மணிகள்; சாஅய் - அசைந்து]

'விளங்கின மணிகள் ஆரவாரிப்ப ஆரவாரிப்ப அசைந்து அசைந்து நடக்கும் தளர்ந்த நடையைக் கண்டு மகிழ்ந் திருத்தல் எமக்கு இனிதாக உள்ளது...' என்கின்றாள்.

...காமரு நோக்கினை!
அத்தத்தா என்னுநின்
தேமொழி கேட்டல்
இனிது......

[காமரு - விருப்பம் மருவுகின்ற; நோக்கு - அழகு]

'விருப்பம் மருவுகின்ற அழகினையுடையாய்! 'அத்தத்தா' என்று மழலைமொழி பேசும் நினது இனிய மொழியைக் கேட்டு மகிழ்ந்திருத்தல் இனிது...' என்கின்றாள்.

3. கலி.—80 (மருதக்கலி - 15)

...திங்கட் குழவி!
வருகென யான்நின்னை
அம்புலி காட்டல்
இனிது...!

'திங்களாகிய பிள்ளையே! நீ இவனுடன் விளையாடும்படி வருவாயாக என்று கூறி அம்புலிக்கு நின்னைக் காட்டி மகிழ்தல் இனிது......' என்கின்றாள்.

அகநானூற்றுத் தலைவி குழந்தை இன்பத்தைப் படுக்கையில் ஒரு செய்தி நிருபர்போல் தோழியிடம் பேசுகின்றாள். புறநானூற்று அறிவுடை நம்பியும் குழந்தை யின்பத்தைப் படுக்கையில்தான் பேசுகின்றான். கலித்தொகைத் தலைவியோ குழந்தையிடமே நேரில் பேசிக் குழந்தையின்பத்தை அநுபவிக்கின்றாள்.

பெரியாழ்வார் யசோதை பாவனையில் கண்ணனின் தளர்நடையைப் பல்வேறு விதமாக அநுபவிக்கின்றார்.

உடன்கூடிக் கிண்கிணி ஆரவாரிப்ப
உடைமணி பறைகறங்க
தடந்தா ளிணைக்கொண்டு சார்ங்கபாணி
தளர்நடை நடவானோ

அக்குவடம் உடுத்து ஆமைந்தாலி
பூண்ட அனந்த சயனன்
தக்கமா மணிவண்ணன் வாசுதேவன்
தளர்நடை நடவானோ

கடுஞ்சேக் கழுத்தின் மணிக்குரல்போல்
உடைமணி கணகணென,
தடந்தா ளிணைக்கொண்டு சார்ங்கபாணி
தளர்நடை நடவானோ[4]

---

4. பெரியா. திரு. 1. 7 : 1, 2, 3.

என்ற பாசுரப் பகுதிகளில் இந்த அநுபவத்தைக் கண்டு மகிழலாம். இங்ஙனமே புறம் புல்கல், அப் பூச்சி காட்டுதல் போன்ற கண்ணன் விளையாட்டுகளை அநுபவித்து மகிழ்கின்றாள் யசோதைப் பிராட்டி. பெரியாழ்வார் தான் யசோதைப் பிராட்டியாக நின்று கண்ணனின் சிறு குறும்புகளையும் பிறவற்றையும் அநுபவிக்கின்றார்.

பாரதியோ பராசக்தியைக் 'கண்ணம்மா'[5] என்று பெண்குழந்தையாக்கிக் குழந்தையிடமே நேரில் பேசுகின்றார்.

சின்னஞ் சிறுகிளியே—கண்ணம்மா!
செல்வக் களஞ்சியமே

என்று பாட்டினைத் தொடங்கும் போதே தாலாட்டுப் பாணியில் தொடங்குகின்றார். பாட்டின் ஒவ்வொரு அடியையும் சிந்தித்துப் பார்க்கும்போது உருக்காட்சி (Imagery) புலப்படும். செல்வப் பிராணியாக வளர்க்கப் படும் கிளியை நினைந்து அதனோடு குழந்தையை ஒப்பிடுகின்றார். கட்டுப்பாடின்றித் திரியும் அழகிய கிளிக்குக் கட்டுப்பாடில்லாமல் இங்குமங்கும் ஓடும் அழகிய குழந்தை தாய்க்கு செல்வக்களஞ்சியமாகத் தென்படுகின்றது. இந்த இரண்டு அடிகளிலும் தாயின் கொஞ்சுதல் தென்படுகின்றது. அடுத்த இரண்டு அடிகள் அற்புதமானவை.

என்னைக் கலிதீர்த்தே—உலகில்
ஏற்றம் புரிய வந்தாய்!

இவற்றில் குழந்தையைப் பெற்றெடுத்த தாயின் மட்டற்ற களிப்பு—பூரிப்பு—வெளிப்படையாகப் புலனாகின்றது.

---

5. பாட்டின் தலைப்பில் 'பராசக்தியைக் குழந்தையாகக் கண்டு சொல்லிய பாட்டு' என்ற குறிப்பு உள்ளது.

'மக்கட்பேறு' என்பது ஒரு தாய்க்கு—தந்தைக்கும் கூடத் தான்—ஒரு மாபெரும் பேறு அல்லவா? குழந்தையைப் பெற்ற தாய் கொள்ளை இன்பம் அடைகின்றாள்.

*பிள்ளைக் கனியமுதே—கண்ணம்மா*
*பேசும் பொற்சித்திரமே!*
*அள்ளி யணைத்திடவே—என்முன்னே*
*ஆடிவருந் தேனே!*

என்ற அடிகளில் அவள் பெறும் இன்பம் பளிச்சிடுகின்றது. ஆழ்வாருக்கு ஆண்டவன் 'தேனும் பாலும் கன்னலும் அமுதுமாய்த் தித்தித்து' இனிப்பதுபோல் தாய்க்குக் குழந்தை. அமுதம் கலந்த பழத்தின் இனிமைபோல் இனிக்கின்றது.

*தனித்தனிமுக் கனிபிழிந்து வடித்தொன்றாக் கூட்டி*
*சர்க்கரையும் கற்கண்டின் பொடியுமிகக் கலந்தே*
*தனித்தநறுந் தேன்பெய்து பசும்பாலும் தெங்கின்*
*தனிப்பாலுஞ் சேர்த்தொருதீம் பருப்பிடியும் விரவி*
*இனித்தநறு நெய்அளைந்தே இளஞ்சூட்டின் இறக்கி*
*எடுத்தசுவைக் கட்டியினும் இனித்திடுந்தெள் அமுதே*
*அனித்தமறத் திருப்பொதுவில் விளங்கு நடத்தரசு*[6]

என்று வள்ளலார் நடராசரிடம் பெறும் இன்பத்தைப் போல் தாய் குழந்தையினால் இன்பம் பெறுகின்றாள். இக்குழந்தை 'பேசும் பொற்சித்திரமாகவும்' அமைந்து விடுகின்றது. இந்த இனிய தோற்றத்தை அளிக்கும் குழந்தையை—ஓடிவரும் தேனை—அள்ளி அணைத்திட எண்ணுகின்றாள். இங்ஙனம் அணைத்திடும் போது—பெறும் அந்த ஊற்றின்பம்—தேனை உண்டதுபோன்ற மகிழ்ச்சியைத் தருகின்றது அவளுக்கு. 'மக்கள் மெய்

---

6. திரு அருட்பா—ஆறாம் திருமுறை—அருள்விளக்க மாலை - 17 (4106)

தீண்டல் உடற்கின்பம்' என்று வள்ளுவர் சொல்லிவைத் தாரல்லவா? தேனே ஓர் அழகிய உருவம் கொண்டு அவள் முன் ஓடி வருகின்றது போன்ற ஒருமயக்கம்! அந்தப் போதையை அநுபவித்து மகிழ்கின்றாள் தாய். இந்த அநுபவம்,

ஓடிவருகையிலே—கண்ணம்மா
　உள்ளம் குளிருதடீ!
ஆடித் திரிதல் கண்டால்—உன்னைப்போய்
　ஆவி தழுவுதடீ!

குழந்தை ஓடிவரும் அழகைப் பார்த்தாலே தாயின் உள்ளம் குளிர்கின்றதாம். அந்தக் களிப்பில்—எக்களிப்பில்—தாயின் உடல் அந்தக் குழந்தையை அள்ளி அணைப்பதற்கு முன்னரே அவளுடைய உயிர்—ஆவி—அக் குழந்தையைத் தழுவிக் கொண்டு விடுகின்றது. என்ன அற்புதமான கற்பனை! இதில் பாரதிக்கு நிகர் பாரதி தான்.

ஓடிவரும் தேனை—ஆடித்திரியும் அன்புப்பெட்டகத்தைத்—தூக்கி அணைந்த வண்ணம் அதன் உச்சியை முகந்தால் அவள் கொள்ளும் பெருமிதம் சொல்லி முடியாது. குழந்தையின் பண்பை ஒருதாய் மாத்திரம் மெச்சிக் கொண்டிருந்தால் போதுமா? ஊரில் உள்ளவர்கள் அதனை மெச்சிப் புகழும்போது அவள் மேனியெல்லாம் சிலிர்க்கின்றதாம். அத்தகைய பேரானந்தத்தை அளிக்கக் கூடியவன் குழந்தைக் கண்ணன். கவிஞர் கூறுகின்றார்:

உச்சிதனை முகந்தால்—கருவம்
　ஓங்கி வளருதடீ!
மெச்சி யுனைஊரார்—புகழ்ந்தால்
　மேனி சிலிர்க்குதடீ!

தாயின் மகிழ்ச்சி பாரமானியில் காற்றழுத்தம் ஏறுவது போல் ஏறிக்கொண்டே போகின்றது.

ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும் தன் மகனைச்
சான்றோன் எனக்கேட்டதாய். [7]

என்ற வள்ளுவர் வாக்கை நினைந்து பாடுகின்றார் போலும்.

தூக்கிய குழந்தையைத் தாய் உச்சி முகப்பதுடன் விட்டு விடுகின்றாளா? அதன் கன்னத்தில் முத்தமிடுகின்றாள். பலபடியாகத் தழுவி மகிழுகின்றாள். மகிழ்ச்சி கள் வெறியை எட்டி விடுகின்றது. உன்மத்தம் அடைகின்றாள். இந்த அநுபவத்தைக் கவிஞர் பேசுகின்றார் :

கன்னத்தில் முத்தமிட்டால்—உள்ளந்தான்
கள்வெறி கொள்ளுதடீ!
உன்னைத் தழுவிடிலோ—கண்ணம்மா!
உன்மத்த மாகுதடீ!

குழந்தையைத் தழுவும்போது உண்டாகும் மகிழ்ச்சியைச் சொல்லும் முன்பே 'கண்ணம்மா!' என்று சொல்லி மகிழ்கின்றாள். அந்தச் சொல்லால் கற்கண்டைச் சுவைப்பது போன்ற இன்பப் பெருக்கு அவளிடம் ஏற்படுகின்றது. மேலும் கவிஞர் பேசுகின்றார்:

மார்பில் அணிவதற்கே—உன்னைப்போல்
வைர மணிகள் உண்டோ?
சீர்பெற்று வாழ்வதற்கே—உன்னைப்போல்
செல்வம் பிறிதுமுண்டோ?

குழந்தையைப்பற்றிய ஆசை பெண்களிடம் இயல்பாகவுள்ள நகையாசையையும்—பைத்தியம் என்று கூடச் சொல்லலாம்—மூழ்கடித்து விடுகின்றது! பாடப்பாடத் தெவிட்டாத—ஆரா அமுதாக—இன்பம் தரும் கவிதை இது.

---

7. குறள் - 69.

குழந்தைகளின் மழலைச் சொற்களைக் கேளாதவர்க்குத்தான் குழலொலியும் யாழ் ஓசையும் இனிமையாக இருக்கும் என்கின்றார்.

குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்.[8]

என்பது அவர் வாக்கு. மழலைச் சொல்லின் பயனைப் பாரதியார் புலப்படுத்துகின்றார். குழலும் யாழும் மனத்திற்கு அமைதி கொடுக்கவல்லவை என்பது வள்ளுவர் கருத்து. 'மழலைச்சொல்லோ அன்னையின் துன்பங்கள் அனைத்தையும் போக்குகின்றது; குழந்தையின் முல்லைச் சிரிப்பு மனோவிகாரத்தையும் அகற்றி விடுகின்றது' என்பது பாரதியாரின் கணிப்பு.

சொல்லும் மழலையிலே—கண்ணம்மா!
துன்பங்கள் தீர்த்திடுவாய்;
முல்லைச் சிரிப்பாலே—எனது
மூர்க்கந் தவிர்த்திடுவாய்.

என்று இக்கருத்தைச் சொல்லோவியமாக்கிக் காட்டுகின்றார் கவிஞர்.

இப்படியெல்லாம் இன்பம் ஊட்டும் குழந்தை முகம் கோணினால் அன்னை அடையும் துன்பம் சொல்லி முடியாது. குழந்தையின் கண்ணில் நீர்வடிந்தால் எந்தத் தாயும் அதனைக் கண்டு ஒரு நொடியும் சகிக்க மாட்டாள். அவளுடைய இதயம் வெடித்துக் குருதி வெள்ளமிட்டோடச் செய்யும். பாரதியாரின் சொல்லோவியங்கள் இவற்றை விளக்குகின்றன.

சற்றுன் முகம்சிவந்தால்—மனது
சஞ்சல மாகுதடீ!

---

8. மேலது - 66.

நெற்றி சுருங்கக் கண்டால்—எனக்கு
நெஞ்சம் பதைக்குதடீ!
உன்கண்ணில் நீர்வழிந்தால்—என் நெஞ்சில்
உதிரம் கொட்டுதடீ!

இத்தனைக்கும் காரணம் என்ன? கவிஞரையே கேட்போம் :

என்கண்ணின் பாவையன்றோ—கண்ணம்மா!
என்னுயிர் நின்னதன்றோ?

தாயின் கண்மணி போன்று இனிய காட்சியாகத் திகழும் குழந்தையின் உயிரும், தாயின் உயிரும் ஒன்றாகப் பிணைக்கப்பட்டிருப்பதை இந்த அடிகள் காட்டுகின்றன:

இறுதியாக, முத்தாய்ப்பாகக் கூறுகின்றார் கவிஞர் :

இன்பக் கதைகள் எல்லாம்—உன்னைப்போல்
ஏடுகள் சொல்வ துண்டோ?
அன்பு தருவதிலே...உனைநேர்
ஆகுமோர் தெய்வமுண்டோ?

பேசாத பேச்சாக, இன்பத்தோற்றத்தாலேயே பெற்றோர் உள்ளத்தில் எழுப்பும் இன்பக் கதைகளை, எழுத்தாணி கொண்டெழுதிய ஏடுகளும் எழுதுகோல் கொண் டெழுதிய நூல்களும் நுவல முடியுமா என்று கேட்கின்றார். குழந்தையைப்போல் அன்பு ஊற்றெடுக் கும் தெய்வமும் இல்லை என்பது கவிஞரின் அநுபவம். அதுவும் தெய்வக் குழந்தை கண்ணன் என்றால் சொல்லவும் வேண்டுமா, என்ன?

இவ்விடத்தில் குழந்தை தரும் இன்பத்தைத் தேவகி புலம்பலாகக் குலசேகராழ்வார் காட்டும் காட்சிகள் எல்லாம் நம் மனத்தில் குமிழியிடச் செய்கின்றன. ஒரு

காட்சியினை மட்டிலும் காட்டி இந்த இயலை நிறைவு செய்வோம்.

முழுதும் வெண்ணெய் அளந்துதொட்டு உண்ணும்
முகிழ்இ ளஞ்சிறுத் தாமரைக் கையும்
எழில்கொண் தாம்புகொண்டு அடிப்பதற்கு எள்கு
நிலையும் வெண்தயிர் தோய்ந்தசெவ் வாயும்
அழுகை யும் அஞ்சி நோக்கும்அந் நோக்கும்
அணிகொள் செஞ்சிறு வாய்நெளிப் பதுவும்
தொழுகை யும்இவை கண்ட அசோதை
தொல்லை இன்பத்து இறுதிகண் டாளே.[9]

[இளமுகிழ் --இளந்தளிர்; எழில் - அழகு; எள்குநிலை - அஞ்சி நிற்கும் நிலை; தோய்ந்த - பூசிய; அணிகொள் - அழகிய; நெளிப்பதும் - துடிப்பதும்]

இந்த இயலில் கண்ணனைப் பெண் குழந்தையாகப் படைத்து இன்பம் கண்டமை சிந்திக்கத் தக்கது. அன்னை பராசக்தியைக் 'கண்ணம்மா' வாகக் காணும் கவிஞரின் எக்களிப்பு குழந்தைப்பேறு இல்லாதோரையும் குதூகலிக்கச் செய்து விடுகின்றது.

இந்தப் பாடலின் தொடக்கத்தில் பாரதியார் தந்துள்ள குறிப்பு இது : 'பராசக்தியைக் குழந்தையாகக் கண்டு சொல்லியபாட்டு' என்பது. எல்லாவற்றையும் சக்தி மயமாகக் காணும் பாரதியாருக்குக் குழந்தைக் கண்ணனையும் சக்தியாகக் கண்டு பாடுவதில் வியப்பில்லை.

---

9. பெரு. திரு. 7:8.

ஆதாரம் சக்தி யென்றே
அருமறைகள் கூறும்:
யாதானும் தொழில் புரிவோம்;
யாதுமவள் தொழிலாம்.[10]

என்றும்,

மாதா பராசக்தி வையமெலாம் நீ நிறைந்தாய்!
ஆதாரம் உன்னையல்லால் ஆரெமக்குப்பாரினிலே!
ஏதாயினும் வழிநீ சொல்வாய் எமதுயிரே
வேதாவின் தாயே! மிகப்பணிந்து வாழ்வோமே![11]

என்றும் பாடுபவரல்லவா?

10. தோ. பா.—41 தேசமுத்துமாரி - 5.

11. மேலது—63. நவராத்திரிப் பாட்டு - 1.

இயல்—12

# கண்ணன்—என் விளையாட்டுப் பிள்ளை

கண்ணன் சிறுவனாக இருக்கும்போதும், சற்று வளர்ந்து முன்-குமரப் பருவத்தை எட்டிய போதும் அவன் செய்த குறும்புகளை அளவிட்டு உரைத்தல் முடியாது. கண்ணனின் இத் 'திருவிளையாடல்கள்' பாகவத புராணத்தின்மூலமும் பல்வேறு இதிகாச புராணங்களின் மூலமும் மக்களிடையே பரவியிருந்தன. ஆழ்வார்கள் பாசுரங்களும் இவற்றைக் குறிப்பிட்டுள்ளன. இந்தப் பாடல் பாரதியாரின் கருத்தில் முகிழ்த்ததற்கு இவை யெல்லாம் மூலங்களாக அமைந்திருத்தல் வேண்டும் என்று கருதலாம்.

குழந்தைப் பருவத்தில் விளையாட்டு ஒன்றுதான் அதற்கு இன்பம் அளிப்பது. இந்த இன்பத்தை உளவியல் விவரிக்கின்றது; விதிகளையும் வகுத்துக் காட்ட முயல் கின்றது. எல்லா நாட்டுக் கவிஞர்களும் தம் கவிதைகளில் படைத்துக் காட்டி இந்த இயல்பூக்கத்திற்கு அழியா நிலையை ஏற்படுத்தி விடுகின்றனர். 'கற்பனையூர்' என்ற பாரதியாரின் கவிதையொன்றில் குழந்தைப் பருவத்தின் பெருமகிழ்ச்சி விளக்கப்படுகின்றது.

குழந்தைகள் வாழ்ந்திடும் பட்டணம்காண்—அங்கு
கோல்பந்து யாவிற்கும் உயிருண்டாம்

........................................
*பிள்ளைப் பிராயத்தை இழந்தீரே—நீர்!*
*பின்னும்அந் நிலைபெற வேண்டீரோ?*
*குழந்தைகள் ஆட்டத்தின் கனவையெல்லாம்—அந்தக்*
*கோலநன் னாட்டிடைக் காண்பீரே;*
*இழந்தநல் இன்பங்கள் மீட்குறலாம்—நீர்*
*ஏகுதிர் கற்பனை நகரினுக்கே.*[1]

என்ற பகுதியில் இதனைக் கண்டு மகிழலாம். பொறுப் பற்ற விளையாட்டு ஒன்றுதான் உலக இயற்கை என்று குழந்தை கருதுகின்றது; அதற்குமேல் அதன் மனம் சிந்திப்பதில்லை. குழந்தை வளரவளரத் தன் சுற்றுப்புறச் சூழ்நிலையைத் தெரிந்து கொள்ள விழைகின்றது. இந்த ஆர்வம்தான் வளர்ந்து அறிவு நிலையை எட்டியவுடன் பஞ்சபூதங்களைச் சோதிகக அடிப்படையாக அமைகின் றது. இந்த விளையாட்டு நிலை—இந்த அரிய நிலை— கழிந்து போனதற்காக நாம் இரங்குகின்றோம். சங்கப் புலவர் ஒருவர் கழிந்த தம் இளமை நிலைக்கு இரங்கி அதற்கு அழியா நிலையை அளித்துச் சென்றுள்ளார் :

*இனிநினைந்து இரக்க மாகின்று திணிமணல்*
*செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்*
*தண்கயம் ஆடும் மகளிரொடு கைபிணைந்து*
*தழுவுவழித் தழீஇத் தூங்குவழித் தூங்கி*
*மறையெனல் அறியா மாயமில் ஆயமொடு*
*உயர்சினை மருதத் துறையுறத் தாழ்ந்து*
*நீர்நணிப் படிகோடு ஏறிச் சீர்மிகக்*
*கரையவர் மருளத் திரையகம் பிதிர*
*நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து*
*குளித்துமணற் கொண்ட கல்லா இளமை*
*அளிதோ தானே யாண்டுண்டு கொல்லோ?*[2]

---

1. வேதாந்தப் பாடல்கள்—25. கற்பனையூர்.
2. புறம்—243.

[திணி - செறிந்த; கயம் - பொய்கை; தைஇ - சூடி; கைபிணைந்து - கைகோத்து; தழீஇ - தழுவி; தூங்கி - இசைந்து; நணி - அண்ணிதாக; கோடு - கொம்பு; சீர் - அழகு; மருள - வியப்ப; பிதிர - திவலைஎழ; குட்டம் - மடு; கல்லா இளமை - கல்வியில்லாத இளமை: அரிது - இரங்கத்தக்கது]

இப்பாடலில் மறையும் மாயமும் அறியாத இளையருடன் கூடி நீரில் பாவை வைத்து விளையாடியதும், நெடுநீர்க் குட்டத்தில் குதித்து ஆழ்ந்து சென்று மணல்கொண்டு வந்து காட்டி மகிழ்ந்ததுமான செயல்கள் விவரிக்கப் பட்டிருத்தலைக் கண்டு மகிழலாம். இந்த ஏக்கமே நம் உள் மனத்தைத் தூண்டுகின்றது; கழிந்துபோன நிலையின் பிரதிபிம்பங்களாகக் குழந்தைகளை நேசிக்கவும் செய் கின்றது.

சாதாரண மனிதன் தான் காணநேரிடும் குழந்தை களை நேசித்துத் தன் ஏக்கத்தைத் தீர்த்துக் கொள்ளுகின் றான். கவிஞனோ இந்த நிலைக்கு அழியாத ஓர் உருவம் கொடுக்க விழைகின்றான். சாதாரணமாகத் தமிழ்நாட்டுக் கவிஞர்கள் குழந்தை முருகன், குழந்தை கண்ணன் இவர் களின் விளையாட்டுகளுக்கு அதிக இடம் கொடுத்துள்ள னர். பிள்ளைத்தமிழ் இலக்கியங்களில் முருகன் சிறுகுறும் புகள் அதிகமாக இடம் பெற்றுள்ளன. கண்ணனைப் பற்றிய சிறுகுறும்புகள் ஆழ்வார் பாசுரங்களில் அதிகமாகச் சித்திரிக்கப்பெற்றிருப்பதைக் காணலாம். சாதாரணப் பிள்ளைகள் விளையாட்டில் களைத்துப்போகும்; சில சமயம் அலுப்பும் சலிப்பும் அவர்களிடம் தோன்றுவதும் உண்டு. ஆனால் கண்ணனாகிய பிள்ளை சலிக்காமல், களைப்படையாமல், முடிவின்றி விளையாடுவதாகக்

கவிஞர்கள் கற்பனை செய்துள்ளனர். தெய்வக்கூறுகளைக் கொண்ட பிள்ளை இத்தகைய கற்பனைக்கு இடம் தருகின்றது. இலக்கியம் வாழ்க்கையினின்று மலர்வதாகச் செப்புகின்றனர் திறனாய்வாளர்கள். நாம் நம் பிள்ளைப் பிராயத்தில் சிறுமியரோடு விளையாடி மகிழ்ந்த காட்சிகளை நம் மனம் எண்ணிப் பார்க்கின்றது; அங்ஙனமே இலக்கியங்களில் காணப்பெறும் கண்ணன் ஆய்ப்பாடியில் ஆயச் சிறுமியருடன் சேர்ந்து விளையாடிக் களித்த காட்சிகளை நம் உள் மனம் காண்கின்றது. இந்த இரண்டு காட்சிகளை இணைத்தமை தெரியாவண்ணம் இணைத்து கலை உருவம் தந்து அவற்றிற்கு அழியா வாழ்வை அளித்து விடுகின்றான் கவிஞன். இத்தகைய கலைஉருவம் சமைப்பதற்கு ஆழ்வார் பாசுரங்கள் பாரதியாருக்குக் கை கொடுத்து உதவியுள்ளன என்று கருதலாம்.

> தீராத விளையாட்டுப் பிள்ளை—கண்ணன்
> தெருவிலே பெண்களுக் கோயாத தொல்லை.

என்று பாடல் தொடங்குகின்றது. கண்ணனைப்பற்றிய காட்சியை இவ்வடிகள் நம் மனக்கண்முன் கொண்டுவந்து நிறுத்துகின்றன. பெரியாழ்வார் பாசுரங்களில் நாம் காணும் கண்ணன் அற்புதமானவன். சாதாரண நிகழ்ச்சிகளையும் தெய்விக நிகழ்ச்சிகளையும் கலந்து காட்டுபவன். பாரதியார் காட்டும் கண்ணன் சாதாரணமானவன்; சாதாரணக் குறும்புச் செயல்களைப் புரிபவன்; ஆனால் இந் நிகழ்ச்சிகள் இதிகாசக் கண்ணனை நம் மனத்தில் கொண்டு வந்து நிறுத்துகின்றன.

இதிகாசக் கண்ணன் கன்றுகளுடன் செய்யும் விளையாட்டைப் பாரதியார் காட்டும் பிள்ளைக் கண்ணன் சிறுமிகளுடன் காட்டுகின்றார்:

கன்றுகள் ஓடச் செவியில்
கட்டெறும்பு பிடித்து இட்டால்
தென்றிக் கெடும்.[3]

என்ற அடிகளில் கண்ணன் சில கட்டெறும்புகளைக் கன்றுகளின் காதில் இட்டு அதனால் அவை வெருண்டு ஓடுவதைக் கண்டு மகிழ்கின்றான். பாரதியாரின் கண்ணன் செய்யும் சிறு குறும்பைச் சிறுமிகளே முறையிடுகின்றனர்.

அங்காந் திருக்கும் வாய்தனிலே—கண்ணன்
ஆறேழு கட்டெறும்பைப் போட்டு விடுவான்
எங்காகி லும்பார்த்த துண்டோ?—கண்ணன்
எங்களைச் செய்கின்ற வேடிக்கையொன்றோ?[4]

இத்தகைய குறும்பைப் பாரதிகாட்டுவது நகைச்சுவையின் மிகையைக் காண்பிக்கின்றது என்றும், இஃது இயற்கைச் சித்திரத்திற்கு முற்றும் மாறாக இருக்கின்றது என்றும், இத்தகைய கற்பனையைப் பாரதி பயன்படுத்தியிருக்கக் கூடாது என்றும் சில திறனாய்வாளர்கள் கருதுகின்றனர்.[5] ஆனால், கவிஞனுக்குத் தனி உரிமம் உண்டு; அவன் எதை வேண்டுமானாலும் செய்வான். அதில் நாம் தலையிடுவதற்கில்லை. பாரதியார் நாம் சிறுவர்களிடம் காணாத ஒன்றைக் கண்ணனாகிய சிறுவன் புரிந்து மகிழ்வதைக் காட்டுகின்றார்.

கண்ணன் புரியும் சிறுகுறும்புகள் முடிவில் மகிழ்ச்சியை நல்குவனவாக இருப்பினும் மக்களிரைப் படாதபாடு படுத்தி விடுகின்றன. பெரியாழ்வாரின் கண்ணனைப்பற்றி ஆய்ச்சியர் குற்றப்பத்திரிக்கை வாசிக்கின்றனர்.

---

3. பெரியாழ். திரு. 2-4:2.
4. தீராத விளையாட்டுப் பிள்ளை - 6.
5. கண்ணன் என் கவி—பக். 115.

வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை
வெற்பிடையிட்டு அதன்ஓசை கேட்கும்;
கண்ணபிரான் கற்ற கல்வி தன்னைக்
காக்ககில்லோம் உன்மகனைக் காவாய்;
பாலைக் கறந்து அடுப்புஏற வைத்துப்
பல்வளையாள் என்மகள் இருப்ப
மேலைஅகத்தே நெருப்பு வேண்டிச்
சென்று இறைப்பொழுது அங்கே பேசி நின்றேன்
சாளக் கிராமம் உடைய நம்பி
சாய்த்துப் பருகிட்டுப் போந்து நின்றான்
கன்னல் இலட்டுவத்தோடு சீடை
காரெள்ளின் உண்டை கலத்தில் இட்டு
என்அகம் என்றுநான் வைத்துப் போந்தேன்
இவன்புக்கு அவற்றைப் பெறுத்திப் போந்தான்
பின்னும் அகம்புக்கு உறியை நோக்கிப்
பிறங்குஒளி வெண்ணெயும் சோதிக்கின்றான்;[6]

அசோதை கண்ணனை நோக்கி,

வருக வருக வருக இங்கே
வாமன நம்பீ! வருக இங்கே.
......................
அஞ்சன வண்ணா! அசலகத்தார்
பரிபவம் பேசத் தரிக்க கில்லேன்
பாவியேனுக்கு இங்கே போதராயே.[7]

என்று தன்னிடம் வருமாறு அழைக்கின்றாள். இது கோகுலத்தில் கண்ணன் செய்த தீம்புகளைக் காட்டு கின்றது.

யசோதைப்பிராட்டி கண்ணனுக்கு முலைப்பால் ஊட்ட மறுக்கின்றாள். அதற்குக் காரணங்களையும் தருகின்றாள்.

6. பெரியாழ். திரு. 2. 9 : 1, 5, 9
7. மேலது 2. 9 : 2.

மின்போல் நுண்ணிடை யாள்ஒரு கன்னியை
வேற்றுருவம் செய்துவைத்த
அன்பா! உன்னை அறிந்துகொண்டேன்;

மைஆர் கண்மட ஆய்ச்சியர் மக்களை
மையன்மை செய்துஅவர் பின்போய்
கொங்ஆர் பூந்துகில் பற்றித் தனிநின்று
குற்றம் பலப்பல செய்தாய்;

முப்போதும் கடைந்து ஈண்டியவெண்ணையி
னோடு தயிரும் விழுங்கி
கப்பால் ஆயர்கள் காவிற் கொணர்ந்த
கலத்தொடு சாய்த்துப் பருகி
மெய்ப்பால் உண்டுஅழு பிள்ளைகள் போல
விம்மி விம்மி அழுகின்ற
அப்பா! உன்னை அறிந்துகொண்டேன்.

வாளா ஆகிலும் காணகில்லார்; பிறர்
மக்களை மையன்மை செய்து
தோளால் இட்டுஅவளோடு திளைத்துநீ
சொல்லப் படாதன செய்தாய்
கேளார் ஆயர்குலத்தவர் இப் பழி

தாய்மார் மோர்விற்கப் போவர்; தமப்பன்மார்
கற்றா நிரைப்பின்பு போவர்;
நீஆய்ப்பாடி இளங்கன்னி மார்களை
நேர்படவே கொண்டு போதி

தொத்தாற் பூங்குழற் கன்னி ஒருத்தியைச்
சோலைத் தடம்கொண்டு புக்கு
முத்தார் கொங்கை புணர்ந்து இராநாழிகை
மூவேழு சென்றபின் வந்தாய்.[8]

இப்படிப் பல தீம்புகளைப் பட்டியலிட்டுக் காட்டி,

8. மேலது. 3.1:2, 4, 5, 8, 9, 10.

அப்பா! உன்னை அறிந்துகொண்டேன் உனக்கு
அஞ்சுவன் அம்மம் தரவே.

என்று பேசுகின்றாள். இங்குப் பல்வேறு வயது நிலைகளுக் கேற்றவாறு கண்ணன் செய்த தீம்புகளைக் காண்கின் றோம்.

ஆனால், பாரதியார் தீராத விளையாட்டு பிள்ளை யிடம் காட்டும் சிறு குறும்புகள் நாம் பிள்ளைப் பிராயத் தில் சிறுமியரோடு விளையாடி மகிழ்ந்த காட்சிகளை நினைவுக்குக் கொணர்கின்றன. சிறுமியர்க்குத் தின்னப் பழங்கொண்டு தருகின்றான். அவர்கள் தின்கின்ற சமயத் தில் தட்டிப் பறிக்கின்றான். 'என்னப்பன், என்னய்யன்' என்று அவர்கள் புகழ்ந்து கெஞ்சிக் கேட்டால் எச்சிற் படுத்திக் கொடுக்கின்றான். தேனொத்த பண்டங்களைச் சிறுமியர்க்கு எட்டாத உயரத்தில் வைத்துவிட்டு அவர் களை நோக்கி 'மான் ஒத்த பெண்ணல்லவா?' என்று கொஞ்சுவான். அவர்கள் மனம் மகிழ்ந்துகொண்டிருக்கும் போதே அவர்களைக் கிள்ளி அழச்செய்து விடுவான்.

அழகுள்ள மலர்களைக் கொண்டுவந்து ஒரு சிறுமி யிடம் தருகின்றான்; அவளை அழவைத்த பின்னரே அதை அவளுக்குத் தருகின்றான். அவள் கண்ணை மூடிக்கொண் டால் அவளுக்குச் சூட்டுவதாகச் சொல்லுகின்றான். ஆனால் அவள் கண்ணை மூடிக்கொண்ட பிறகு அவளுடைய தோழியொருத்திக்குச் சூட்டிவிடுகின்றான். இன்னும் சில குறும்புகள் :

பின்னலைப் பின்னின் றிழுப்பான்;—தலை
பின்னே திரும்புமுன் னேசென்று மறைவான்;
வண்ணப் புதுச்சேலை தனிலே—புழுதி
வாரிச் சொரிந்தே வருத்திக் குலைப்பான்

புல்லாங் குழல்கொண்டு வருவான்;—அமுது
பொங்கித் ததும்புநற் கீதம்ப டிப்பான்;
கண்ணால் மயங்குவது போலே—அதைக்
கண்மூடி வாய்திறந் தேகேட் டிருப்பான்.

இன்னும் என்னென்ன செய்வான் தெரியுமா? சொல்லுகின்றாள் ஒரு பெண்: "எங்களை விளையாட வருமாறு அழைப்பான். வீட்டில் ஏதாவது பணி செய்யுமாறு ஏவினால் அதைக் காதில் போட்டுக்கொள்வதே இல்லை. வேறு ஆண்பிள்ளைகளுடன் ஆடிக் குதிப்பான்; எம் விளையாட்டிடையில் பிரிந்து போய் விடுவான். வீட்டிற்குச் சென்று எங்களைப்பற்றி இல்லாததையும் பொல்லாததையும் சொல்வான்.

கோளுக்கு மிகவும் சமர்த்தன்;—பொய்ம்மை
குத்திரம் பழிசொலக் கூசாச் சழக்கன்;
ஆளுக் கிசைந்தபடி பேசித்—தெருவில்
அத்தனைப் பெண்களையும் ஆகா தடிப்பான்;

"ஆனால் இல்லத்தில் அன்னைக்கும் நல்லவன்; அத்தைக்கும் நல்லவன்; தந்தைக்கும் அப்படியே. எம்மைத் துயர் செய்யும் கண்ணன் வீட்டிலுள்ளோர் அனைவர்க்கும் நல்லவன்போல் நடந்து கொள்வான்" என்கின்றாள்.

இத்தனை "சேஷ்டிதங்களும்" கேட்பதற்கு நன்றாகத்தானிருக்கின்றன. நாம் இவற்றைக் கேட்டு மகிழ்கின்றோம்; சிரிக்கின்றோம்; இந்த நிகழ்ச்சிகளைப் பால்வேற்றுமையின்றி அனைவருமே அநுபவித்து மகிழ்கின்றனர், கலப்பற்ற நகைச் சுவையின் சிறந்த கூறுகளைக் கொண்டுள்ளன இச் செயல்கள். இவை "தெருவிலே பெண்களுக்கு ஓயாத தொல்லை" தருபவை

களாக இருப்பினும் அவர்களும் நிரந்தரமான மகிழ்ச்சி யையே அடைகின்றனர்.

இந்தப் பாடலின் தலைப்பில் கவிஞரே 'ரசங்கள் : அற்புதம், சிருங்காரம்' என்ற குறிப்பினைத் தந்துள்ளார். 'அற்புதம்' என்ற சுவையின் விளக்கத்தை இயல்—7 இலும்[9] 'சிருங்காரம்' என்ற சுவையின் விளக்கத்தை இயல் 13 இலும்[10] இலும் கண்டு தெளியலாம்.

---

9. இந் நூல் பக்கம்—(68 - 69).

10. இந் நூல் பக்கம்—137 - 138.

# கண்ணன்—என் காதலன்

காம உணர்ச்சி, அஃதாவது இன்ப உணர்ச்சி, பருவம் நிரம்பிய உயர்த்திணை அஃறிணை உயிர்க்கெல்லாம் பொதுவாய் அமைந்து கிடப்பது.

எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
தான்அமர்ந்து உரூஉம் மேவற் றாகும்.[1]

என்று ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியர் சுட்டியுள்ளவாறு பிறவியிலேயே உடம்போடு ஒட்டிய இயல்புடையது. இத்தகைய இன்ப உணர்வை—காமத்துடிப்பை—நெறிப்படுத்தி 'அகத்திணை' என்று இலக்கியமாக்கி வரம்பு கட்டிய பெருமை பண்டைத் தமிழ்ச் சான்றோர்களைச் சாரும். உலக இலக்கியங்களெல்லாம் காதல் உணர்வு அமைந்திருப்பினும் தமிழ் இலக்கியத்தில் அமைந்திருப்பது தனிச்சிறப்புடையது. ஒரு தனி மனிதனுடைய காதலை மன்பதைக்குரிய பொதுப் பொருளாக்கித் தூய்மைப் படுத்திய பெருமை தமிழர்களின் தனிச்சிறப்பாகும்.

இங்ஙனம் இறைவன் படைப்பின் இருபெருஞ்சின்னங்களாகிய ஆண் பெண் இரண்டையும் ஒன்றாகப் பிணைத்து இறைவனின் அன்புநிலையுடன் ஒப்பிட்டுக் காட்டிய பெருமை பக்தி இலக்கிய காலத்தில் தோன்றிய

1. தொல். பொருள். பொருளியல் - 27.

சமயகுரவர்களின் பெரும் சிறப்பாகும். சங்கச்சான்றோரர்களின் பாடல்களில் தூய்மைப்படுத்தப்பெற்ற இந்த உணர்ச்சி ஆழ்வார்கள் நாயன்மார்கள் காலத்தில் மேலும் தூய்மை அடைந்தது. சம்பந்தஞானத்தைப்பற்றி முன்னர்க் குறிப்பிட்டேன் அல்லவா? சீவான்மாவுக்கும் பரமான்மாவுக்கும் உள்ள உறவு நாயகி—நாயகன் (தலைவி—தலைவன்) உறவுபற்றிக் குறிப்பிட்டதை ஈண்டு நினைவு கூர்க. வேதாந்தங்களில் குறிப்பிடப்பெறும் பக்தி ஆழ்வார்கள்போன்ற ஞானச் செல்வர்களிடம் காதல் முறையில் பரிணமித்து நிற்கும். எம்பெருமான்மீது கொள்ளும் காமம் 'பகவத் விஷயகாமம்' என்று வழங்கப் பெறும். இங்ஙனம் மாதவன்மீது அவர்கள் கொள்ளும் காமம் மங்கையர்மீது கொள்ளும் காமத்தினின்றும் வேறுபட்டது. ஆயினும், சிற்றின்ப அநுபவமாகிய காதலுக்குக் கூறப்பெறும் அகப்பொருள் துறைகள் யாவும் இந்த 'பகவத் விஷயகாமத்திற்கு'க் கூறப்பெறும் சிற்றின்ப அநுபவத்திற்குக் கொங்கை முதலியன சாதனமாயிருப்பதுபோல, பகவத்விஷயாநுபவத்திற்குப் பரபக்தி[2] பரஞானம்[3] பரமபக்தி[4] இவை இன்றியமையாதனவாக இருப்பதால்

---

2. பரபக்தி என்பது, எம்பெருமானை நேரில் காண வேண்டும் என்ற ஆவல். பொய்கையாழ்வார் இந் நிலையை அடைந்தவர்.

3. பரஞானம் என்பது, எம்பெருமானை நேரில் காணல். பூதத்தாழ்வார் இந்நிலையை அடைந்தவர்.

4. பரமபக்தி என்பது, எம்பெருமானை இடையறாது அநுபவிக்க வேண்டும் என்ற ஆவல். இந்நிலையை எய்தியவர் பேயாழ்வார்.

இவற்றின் விளக்கத்தை இவ்வாசிரியரின் முத்திநெறி (பாரி நிலையம், சென்னை - 600 001) என்ற நூலில் பக். 100-104 கண்டு தெளிக.

அவையே கொங்கை முதலான சொற்களால் இவ்வாழ்வார்களின் அருளிச் செயல்களில் கூறப்பெறுகின்றன என்று ஆன்றோர் கொள்வர்.

இந்த அநுபவத்தின் அடிப்படையில் பாரதியாரின் ‘கண்ணன்—என் காதலன்’, ‘கண்ணம்மா—என் காதலி’ என்ற தலைப்பின்கீழ் உள்ள பாடல்களை ஆய்தல் வேண்டும். முதல் வகையில் ஐந்து பாடல்கள் உள்ளன. ஒவ்வொன்றாக ஆராய்வோம்.

முதற் பாடல் : தலைவி (இங்குக் கவிஞர்) தன் பிரிவாற்றாமையைத்[5] தோழியிடம் கூறுவதையும், கனவில் கண்ட உருவம் கண்ணனாக இருந்தமையைக் கூறுவதையும் உரைப்பது. பாரதியார் ஆழ்வார் பாசுரங்களின் மரபையொட்டி இப்பாடலை அமைத்தாலும் பாடல் தனித்தன்மைபெற்றுப் ‘பாரதியின் முத்திரை’யைக்காட்டுகின்றது. பாரதியார் காதலி நிலையில் இருந்துகொண்டு கணவன் பிரிவினை (காதலன் பிரிவினை)த் தம்மால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை என்று தோழியிடம் பேசுகின்றார். எடுத்த எடுப்பில்,

தூண்டிற் புழுவினைப் போல்—வெளியே
சுடர்வி ளக்கினைப்போல்,
நீண்ட பொழு தாக—எனது
நெஞ்சம் துடித்ததடீ!
கூண்டுக் கிளியி னைப்போல்—தனிமை
கொண்டு மிகவும் நொந்தேன்;

5. பிரிவாற்றாமை—துணைவர்கள் ஒருவரையொருவர் பிரிந்து இருத்தலைச் சகியாமைப்பற்றிக் கூறுவதாக அமைவது இத்துறை [விளக்கம்: ‘அகத்திணைக் கொள்கைகள்’—பக் (615 - 16) காண்க.]

வேண்டும் பொருளை எல்லாம்—மனது
வெறுத்து விட்டதடீ!

என்று கண்ணனின் பிரிவால் தமது ஆற்றாமையை—உள்ளக்குமுறலை—வெளியிடுகின்றார். தலைவனைப் பிரிந்ததனால் தலைவி (இங்குக் கவிஞர்) தூண்டிலில் மாட்டிக்கொண்ட புழுவினைப்போலும், காற்று அலை மோதுதலால் விளக்கு ஆடி அணையும் போக்கைகாட்டுவது போலும், கூண்டில் அடைப்பட்ட கிளியினைப் போலும் துன்பப்படுவதாகக் கூறுகின்றாள்.

தலைவி தனியாகப் பாயில் படுத்திருக்கும்போது அன்புக்கு உறைவிடமான அன்னை அருகில் வந்தாலும் அவளுக்குச் சலிப்புதான் ஏற்படுகின்றதென்றும், தனக்கு ஏற்பட்ட "நோய் நாடி, நோயின் குணம் நாடி, அதுதணிக்கும் வாய் நாடி" வாய்ப்பச் செய்யாமல் அவர்கள் தத்தமக்குத் தோன்றியவாறெல்லாம் பிதற்றுவதை அவள் விரும்பவில்லை என்பதைத் தெரிவிக்கின்றாள். "ஊணிலும் நாட்டம் இல்லை; உறக்கமும் கொள்ள முடிய வில்லை; மலரின் மணமும் அவள் மனத்தை ஈர்க்கவில்லை. எதிலும் மனம் ஈடுபடாமல் ஒரே குழப்பம். ஒருக் கணமாயினும் சுகம் காணக்கிடைத்ததில்லை"—என்று தன் நிலையை எடுத்துக் கூறுகின்றாள். பிரிவாற்ற முடியாத நிலையிலுள்ள சங்ககாலத் தலைவியரின் நிலையும் இதுதான். ஆனால் நேராகச் சங்க இலக்கியங்களின் தாக்கம் இவர் பாடல்களில் இருப்பதாகச் சொல்லப் போதுமான சான்றுகள் இல்லை. ஆனால் சங்க நூல்களை ஆழ்ந்து பயின்று பாசுரங்கள் அருளிச் செய்த ஆழ்வார் பிரபந்தங்களின் தாக்கம் இப்பாடல்களில் தெளிவாகப்

6. குறள்—948.

புலனாகின்றது. மேலே தலைவியே கூறியனவாகவுள்ள செய்திகள் ஆழ்வார் பாசுரங்களில் தாயின் கூற்றாக வருகின்றன.

உண்ணும் நாள்இல்லை
    உறக்கமும் தான்இல்லை
    ................................
கண்ணன்ஊர் கண்ணபுரம்
    தொழும்...[7]

என்ற பெரிய திருமொழிப் பாசுரத்தைக் கண்டு இதனைத் தெளிக.

குணம் உறுதியில்லை;—எதிலும்
    குழப்பம் வந்ததடீ!

என்ற பாரதியாரின் பாடல் அடியிலுள்ள கருத்து திருமங்கையாழ்வாரின்,

தாய்வாயில் சொல்கேளாள்; தன்ஆயத்
    தோடு அணையாள்; தடமென் கொங்கை
யேஆரச் சாந்தணியாள்.[8]

பூண்முலைமேல் சாந்தணியாள்; பொருகயல்கண்
    மைஎழுதாள்; பூவை பேணாள்
ஏண் அறியாள் எத்தனையும்.[9]

[ஏண் அறியாள் - நெஞ்சால் நினைக்கின்றாள் இல்லை]

என்ற பாசுர அடிகளிலுள்ள செயற்படாத் தன்மையை விளக்குவதாகக் கருதலாம். மேலும் பாரதியார்,

ஆடிஆடி அகம்க ரைந்திசை
பாடிப் பாடி கண்ணீர் மல்கிஎங்கும்

7. பெரி. திரு. 8. 2:4.
8. மேலது. 5. 3:4.
9. மேலது 5. 3:5

நாடி நாடி நரசிங்கா! என்று
வாடி வாடும் இவ்வாள் நுதலே.[10]

என்ற நம்மாழ்வார் பாசுரக் கருத்தையும்,

உள்ளம், மலங்க வெள்உயிர்க்கும்.[11]

பட்டபோது எழுபோது அறியாள்; விரை
மட்டும்அலர் தண்துளாய் என்னும்.[12]

என்ற பாசுர அடிகளிலுள்ள கருத்தையும் அடிப்படையாகக் கொண்டுத் தம் பாடலை அமைத்துள்ளார் என்று கருதவும் இடம் உண்டு. இவையும் தாய் கூற்றுகளாகவே அமைந்தவையாகும். இன்னும் திருவாய்மொழியிலுள்ள தன்மகள் பொருட்டுத் தாய் இரங்குவதாகவுள்ள பாசுரங்கள் யாவும் பாரதியாரின் இப் பாடலுக்குக் கைகொடுத்து உதவியுள்ளன என்று கருதலாம்,

இன்னும் பாரதி நாயகி[13] பேசுகின்றாள் :

பாலுங் கசந்த தடீ!—சகியே
படுக்கை நொந்ததடீ!
கோலக் கிளிமொழியும்—செவியில்
குத்தல் எடுத்த தடீ!
நாலு வயித்தியரும்—இனிமேல்
நம்புதற் கில்லை யென்றார்;
பாலத்து 'சோசியனும்—கிரகம்
படுத்தும் என்று விட்டான்.

---

10. திருவாய் 2. 4:1

11. மேலது 2. 4:4

12. மேலது 2. 4:9

13. நாயகி நிலையை ஏறிட்டுக்கொண்டு பேசும் கவிஞர் பாரதி, பரகாலநாயகி, பராங்குச நாயகி என்று வருவனபோல.

பிரிவாற்றாமையால் பாலும் கசக்கின்றது. படுக்கையும் கொள்ள இடம் தரவில்லை; மருத்துவரும் இவள் பிழைப்பாள் என்ற நம்பிக்கை தெரிவிக்கவில்லை; புகழ்வாய்ந்த பாலம் என்ற ஊரிலுள்ள சோதிடனும் இவள் நிலைக்குக் காரணம் கிரக நிலைதான் என்கின்றான்.

பாரதி நாயகி கனவு காண்கின்றாள். கண்ணுக்குப் புலனாகாத ஒருவன் இவள் அகத்தைத் தொட்டுவிடுகின்றான். அவன் தன் திருமேனியை மறைத்துவிடுகின்றான். எனினும், இவள் மனம் மகிழ்ச்சிக் கடலில் மிதக்கின்றது. பேசுகின்றாள் நாயகி :

உச்சி குளிர்ந்த தடீ!—சகியே!
உடம்பு நேராச்சு
மச்சிலும் வீடுமெல்லாம்—முன்னைப்போல்
மனத்துக் கொத்ததடீ!
இச்சை பிறந்த தடீ!—எதிலும்
இன்பம் விரைந்த தடீ!
அச்சமொழிந்த தடீ!—சகியே!
அழகு வந்த தடீ.

தன் முன்னைய நிலை எய்தி களிப்பெருக்குடன் உள்ள தலைவியை இங்குக் காண்கின்றோம்.

நல்ல விருந்து உண்ணும்போது ஏற்படும் மகிழ்ச்சியை விட பின்னர் ஒருநாள் அவ்விருந்துபற்றி நினைந்து பேசும் போது அதிக மகிழ்ச்சி ஏற்படுவதை ஒவ்வொருவரும் அநுபவத்தால் அறியலாம். பாரதி நாயகியும் தான் கனவில் கண்ட உருவத்தையும் அவன் தன்னைத் தொட்ட இடத்தையும் எண்ணி எண்ணிப் பார்க்கின்றாள். கனவில் வந்தவன் கண்ணன் என்றே அறிகின்றாள். இக்கருத்தினை நுவலும்,

எண்ணும் பொழுதிலெல்லாம்—அவன்கை
இட்ட விடத்தினிலே
தண்ணென் றிருந்ததடீ!—புதிதோர்
சாந்தி பிறந்ததடீ!
எண்ணி யெண்ணிப் பார்த்தேன்;—அவன்தான்
யாரெனச் சிந்தை செய்தேன்
கண்ணன் திருவுருவம்—அங்ஙனே!
கண்ணின் முன் நின்றதடீ!

**என்ற பகுதியுடன் இப்பாடல் நிறைவு பெறுகின்றது.**

**இறையநுபவத்தை விட்டு விலகும்போது அடியார்க ளெல்லோரும் நீரை விட்டு விலகும் மீன்கள் போலா கின்றனர்.**

கூவிக் கூவி நெஞ்சுருகிக்
கண்பனி சோரநின்றால்
பாவிநீ என்றொன்று சொல்லாய்
பாவியேன் காண வந்தே.[14]

**என்றும்,**

கூவிக் கூவிக் கொடுவினை
தூற்றுள் நின்று
பாவியேன் பலகாலம் வழிதிகைத்து
அலமர் கின்றேன்.[15]

**என்றும் நம்மாழ்வார் எம்பெருமானை ஊனக் கண்ணால் காணத் துடிப்பதைக் கண்டு மகிழலாம் இப்பாசுரப் பகுதி களில். இன்னும்,**

முடிசேர் சென்னி அம்மா! நின்
மொய்பூம் தாமத் தண்துழாய்த

14. திருவாய். 4.7:3
15. மேலது. 3.2:9

கடிசேர் கண் ணில் பெருமானே!
என்றுஎன்று ஏங்கி அழுதக்கால்
படிசேர் மகரக் குழைகளும்
பவள வாயும் நால்தோளும்
துடிசேர் இடையும் அமைந்ததுஓர்
தூநீர் முகில்போல் தோன்றாயே.[16]

என்ற திருவாய்மொழிப் பாசுரத்திலும் இத்துடிப்பினைக் காணலாம். இந்தப் போக்கில் பாரதியாரும் இந்த ஞானச் செல்வர்கள் கூட்டத்தில் சேர்ந்து விடுகின்றார்.

இந்தப் பாடலின் தலைப்பில் 'சிருங்கார ரசம்' என்ற குறிப்பு காணப்பெறுகின்றது. இந்த ரசத்தைப்பற்றிய தெளிவு ஏற்பட்டால் பாடலின் சுவை படிப்போரிடையே எழுவதற்கும், அஃது அவர்களின் அநுபவமாதற்கும் ஏதுவாகும். வடமொழிப் புலவர்கள் சிருங்காரத்தை முதல் ரசமாகக் குறிப்பிட்டுள்ளனர். 'காதல் இல்லாமல் கதை உண்டா?' என்ற கேள்வி நம்மிடையே உலவுகின்ற தன்றோ? இதற்கு மூல காரணம் இலக்கியங்களில் அதிக மாக உவகைச் சுவை மட்டுமீறி இருப்பதுதான். தமிழ் இலக்கியத்திலும் இதே நிலைதான். இதனால் சில மேதாவிகள் ஆங்கில இலக்கியங்களை மட்டிலும் படித்து விட்டு—இன்னும் சிலர் எதனையும் படிக்காமல்—இவர்கள் 'நெருப்பு' என்றாலே வாய் வெந்துவிடும் என்று கருதும் அதி மேதாவிகள்—நமது இலக்கியங்களில் சிருங்காரம் ஒன்றே அதிகமாகத் தென்படுவதையும் அவற்றில் உள்ள 'பச்சையான' வருணனைகளையும் கண்டு அவ்விலக்கியங் களை அதிகமாக இகழ்கின்றனர்.[17]

16. மேலது. 8.5:3

17. யார் என்று திட்டமாகக் குறிப்பிட முடியவில்லை. 'தமிழறியாத் துரைகள்' என்று சொல்லிவைக்கலாம்.

வடமொழி வாணர்கள் சிருங்காரத்தைச் 'சம்போக சிருங்காரம்' (காதலன் காதலி சேர்ந்திருக்கும்போது ஏற்படும் நிகழ்ச்சிகளைச் சித்திரிப்பது) என்றும், 'விப்ரலம்ப சிருங்காரம்' (காதலன் காதலி பிரிந்திருக்கும் நிகழ்ச்சிகளைச் சித்திரிப்பது) என்றும் இருபிரிவாகப் பிரித்துப் பேசுவர். காதலியைக் கண்டு உள்ளம் பூரிக்கும்பொழுது அவளை அணுகித் தழுவுவது ஒரு மனநிலை; அப்பொழுது மனத்தை ஒருபுறமாய் நிறுத்தித் தன் காதலியின் அழகிய செயல்களையும் இனிய சொற்களையும் கண்டு மகிழ்வது அதிலும் மேலான மன நிலை. இதனையே சுவைஞர்கள் உயர்ந்ததென ஒப்புக்கொள்வர். இந்த இரண்டு வகையும் சேர்க்கையுள் அடங்கும் 'சம்போக சிருங்காரம்' ஆகும். சம்போக சிருங்காரத்தைவிட விப்ரலம்ப சிருங்காரமே உயர்வு பெற்று விளங்கும். சிருங்காரத்தைப் பிரிவில் வருணிப்பதிலேயே கவிஞர்கள் அதிக மகிழ்ச்சி அடைவர். தலைவன் தலைவியருக்குச் சினத்தாலும், வேற்று நாட்டிற்குச் சென்றதாலும், சாபத்தாலும் மணந்து கொள்வதற்கு முன் நிகழும் இடையூறுகளாலேயே பலவிதங் களில் பிரிவு நிகழலாம். ஒவ்வொன்றையும் கவிஞர்கள் வாய்ப்பு கிடைத்தபொழுது விரிவாகக் கேட்போர் இன்புறத்தக்க முறையில் சித்திரித்துள்ளனர் வடமொழிப் புலவர்கள். தமிழ் இலக்கியத்திலும் புணர்ச்சி நிலையைக் குறிப்பிடும் குறிஞ்சி, முல்லைத் திணைகளைவிடப் பிரிவினைத் தெரிவிக்கும் பாலைத் திணையும், ஏதோ ஒருவகையில் பிரிவினையே காட்டும் நெய்தலும் மருதமும் அதிக இன்பம் பயப்பதை நாம் நன்றாக அறிவோம்.

இங்குக் காணும் பாரதியாரின் பாடல் பிரிவு நிலையையே சித்திரிக்கின்றது. பாரதி நாயகி தன்னுடைய பிரிவு நிலையை அற்புதமாகப் புலப்படுத்து

கின்றாள். கனவில் கண்ட காதலன் மறைத்துவிட்ட போதிலும், அவள் மனத்தில் தன் பிரிவினால் 'புதியதோர் மகிழ்ச்சி'யை விளைவித்து விடுகின்றான். தான் பெற்ற அந்த மகிழ்ச்சியை இன்ப உணர்ச்சியைத்—தன் தோழிக்கு அற்புதமாகச் சித்திரித்துக் காட்டுகின்றாள் :

உச்சி குளிர்ந்ததடீ!—சகியே
 உடம்பு நேராச்சு,
மச்சிலும் வீடுமெல்லாம்—முன்னைப்போல்
 மனத்துக் கொத்ததடீ!
இச்சை பிறந்ததடீ!—எதிலும்
 இன்பம் விளைந்ததடீ!
அச்சம் ஒழிந்த தடீ!—சகியே
 அழகு வந்ததடீ!

என்ற கவிதைப் பகுதியில் நாயகியின் இன்ப உணர்ச்சி கொடுமுடியை எட்டுவதைக் கண்டு மகிழலாம். கவிதையை அநுபவிக்கும் நம்மையும் அந்த உயர் நிலைக்குக் கொண்டுசெலுத்துவதையும் உணரலாம்.

இரண்டாம் பாடல் : அது நள்ளிரவு. பாரதி நாயகி உறக்கமின்றித் தவிக்கின்றாள். அவளது தோழிமார் கள்வர்களும் உறங்கிவிடும் நள்ளிரவில்—கும்மிருட்டில்—கும்மாளம் அடிக்கின்றனர்; புழுதி பறக்கும் அளவுக்குக் 'கூத்து' நடைபெறுகின்றது. நாயகி பேசுகின்றாள் : "தோழியரே, என்ன நினைத்து இந்தக் கும்மாளம்? உறங்கும் ஊரையே எழுப்பிவிடுவீர்கள் போலிருக்கின்றது. உங்கள் ஆட்டத்தாலும் பாட்டாலும் நம் வீட்டில் 'அன்னை' என்ற ஒரு மூதாட்டி இருப்பதுகூட உங்கட்கு நினைவு இல்லை போலும்! நீங்கள் பேசும் நொள்ளைக் கதைகள் யாவும் சாரம் கொண்டவை என்று 'சரடு' விடுகின்றீர்கள். உங்கள் 'அரட்டைக் கச்சேரி' எனக்கு

ஒரே சலிப்பினைத் தருகின்றது. ஒரே 'அறுவை!' நானும் பல தினங்கள் பொறுத்துப் பொறுத்துப்பார்த்தேன். நீங்கள் போடும் கூச்சல் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போகிறது" என்று தன் அருவருப்பைக் காட்டு கின்றாள்; வெறுப்பினைப் புலப்படுத்துகின்றாள்.

'சகிப் பெண்களே, யாரோ கூனன் ஒருவன் சடையை இழுத்ததால் கொண்டை மலர்கள் சிதறிப் போயின என்றும், மதம் பிடித்த யானையொன்று வஞ்சியம்மையின் அருகினில் ஓடும்போது இவள் மூர்ச்சையுற்றாள் என்றும்; பானையிலுள்ள வெண்ணெய் முழுவதையும் யாரோ (கண்ணன்?) தின்றுவிட்டதால் பாங்கி உரோகிணி நோயுற் றாள் என்றும்; பத்தினிப் பெண்ணொருத்தியை வயல் வெளியில் பத்துச் சிறுவர்கள் வந்து முத்தமிட்டார்கள் என்றும் யாரோ ஒரு பெண்ணுக்கு நாற்பது அரசர்கள் திருமணம் புரிந்து கொள்வதாகச் சோதிடன் இட்டுக் கட்டிய கதையும்;

கொத்துக் கனல்வழியக் கோவினிப் பெண்ணைக்
கொங்கத்து மூளிகண்டு கொக்கரித்ததும்
வித்தைப் பெயருடைய வீணி யவளும்
மேற்குத் திசைமொழிகள் கற்று வந்ததும்

யாருக்கு வேண்டும்? எத்தனைப் பொய்கள்? என்ன கதைகள்!" என்று சொல்லி 'முகத்தைக் காட்டுகின்றாள்.' "உங்கள் அரட்டைக் கச்சேரியும், வம்பர் மாநாடும் என்னை உறக்கமின்றி இன்னல் செய்கின்றன. உங்கள் கடையைக் கட்டுங்கள்" என்று சீறி விழுகின்றாள். அவள் விடுக்கும் ஆணை :

சத்தமிடும் குழல்கள் வீணைக ளெல்லாம்
தாளங்க ளோடுகட்டி மூடிவைத் தங்கே

மெத்த வெளிச்சமின்றி ஒற்றை விளக்கை
மேற்குச் சுவரருகில் வைத்ததன் பின்னர்
நித்திரை கொள்ளஎனைத் தனியில் விட்டே
நீங்களெல் லோருமுங்கள் வீடுசெல்லுவீர்!

என்பது. தான் 'குறியிடம்' ஏகவேண்டியிருப்பதால் துடிப்புடன் இருக்கும் பாரதி நாயகி கடையைக் கட்டிக் கொண்டு அனைவரையும் கம்பிநீட்டவைக்கின்றாள்.

ஐந்திணையொழுக்கத்தில் தோழியின் உதவியால் காதலர்கள் சந்திக்கும் இடம் 'குறியிடம்' என்று வழங்கப் பெறும். அது 'பகற்குறி', இரவுக்குறி' என இருவகைப் படும். இதனைத் தொல்காப்பியர்,

குறியெனப் படுவது இரவிலும் பகலிலும்
அறியக் கிளந்த ஆற்ற தென்ப.[18]

என்று கூறுவர். பகற்குறி என்பது பகலில் சந்திக்கும் இடம்; இரவுக்குறியென்பது இரவில் சந்திக்கும் இடம். இந்தக் குறி யிடங்கள் தலைவியாலும் தோழியாலும் குறிப்பிடப் பெற்று அவ்வவ்விடங்களில் தலைவன் பகலிலும் இரவிலும் சந்திப்பான். களவு நீட்டிக்க வேண்டும் என்பதும், காதலா யினார் இருவகைக் குறிகள் நிகழ்த்த வேண்டும் என்பதும் அகத்திணையின் நோக்கம் இல்லை. பாலதாணையால் தாமே கண்டு தம்முட் புணர்ந்த களவுக் காதலர்கள் வெளிப்படையாக மணந்து இல்லறம் நடத்தவேண்டும் என்பதே அதன் நோக்கம். இந்த நோக்கம் நிறை வேறத் தக்க காலம் வாயாவிடின் களவு நீடிக்கும். களவு நீளுங்காலத்தில் பகற்புணர்ச்சிகள் இரவுப்புணர்ச்சி கள் நடைபெறும். இவற்றிற்கெல்லாம் வரையறைகள் உண்டு. விவரங்களை உரிய நூலில் கண்டு தெளிக.[19]

---

18. களவியல்—40 (இளம்)
19. அகத்திணைக் கொள்கைகள்—பக் (88-94)

ஈண்டுப் பாரதி நாயகி இரவுக் குறிப்போக எண்ணுகின்றாள். பாங்கியர் போனபின்பு தனியிருந்து பேசுவது:

கண்கள் உறங்கவொரு காரணமுண்டோ?
கண்ணனை இன்றிரவு காண்பதன் முன்னே?
பெண்களெல் லோருமவர் வீடு சென்றிட்டார்
பிரியமிகுந்த கண்ணன் காத்திருக்கின்றான்;
வெண்கல வாணிகரின் வீதி முனையில்
வேலிப் புறத்திலெனைக் காணடியென்றான்;
கண்கள் உறங்கலெனும் காரிய முண்டோ?
கண்ணனைக் கையிரண்டுங் கட்டலின்றியே?

எப்படியும் அன்றிரவு—இரவுக் குறியில்—கண்ணனைச் சந்தித்து விடவேண்டும் என்ற துடிப்பு இப்பேச்சில் புலனாகின்றது. இங்குப் புணர்ச்சிக் குறிப்பு இல்லை. சந்தித்து அவன் கையைக் கட்டித் தொடுவதால் ஊற்றின்பம் பெறுதல் வேண்டும் என்ற துடிப்புதான் தெரிகின்றது. இவ்விடத்தில் அநுமன் சீதைக்குக் கூறும் அடையாளங்களைக் கூறும் வகையில் அமைந்த பெரியாழ்வார் பாசுரத்தின்,

எல்லியம்போது இனித்திருத்தல்
இருந்ததுஓர் இடவகையில்
மல்லிகைமா மாலைகொண்டு
அங்கு ஆர்த்ததும்ஓர் அடையாளம்.[20]

என்ற அடிகளையும் நாம் நினைவுகூர்ந்து மகிழ்கின்றோம். காதலிமார் காதலன்மார்களின் கைகளைக் கட்டி மகிழ்வார்கள் என்ற குறிப்பினை நாமும் அறிந்து மகிழ்கின்றோம்.

---

20. பெரியாழ். திரு. 3. 10:2

இந்தப் பாடலின் தலைப்பில் 'உறக்கமும் விழிப்பும்' என்ற தொடர் காணப்பெறுகின்றது. நாயகியின் உறங்க வேண்டும் என்று சொல்லும் 'பாசாங்கும்' உறங்காமல் கண்ணனைக் 'குறியிடத்தில்' சந்திக்க வேண்டும் என்ற திட்டமும் உண்மையிலேயே நமக்கு மகிழ்ச்சியை விளைவிக்கின்றன. 'சிருங்காரச் சுவை' நம் மனத்தில் தட்டுப்படுகின்றது; அதனை அநுபவித்து மகிழ்கின்றோம்.

மூன்றாம் பாடல் : இப்பாடல் நாயகி நாயகனைத் 'திக்குத் தெரியாத காட்டில்' (மிகவும் நெருங்கியிருக்கும் அடவியில்) தேடுவதாக அமைந்துள்ளது. தலைவி சோர்ந்து நிற்கும் தருணத்தில் கொலை வேடன் ஒருவன் இவள்மீது காதல் கொண்டு வெட்கம் கொண்டொழிய விழித்து,

> பெண்ணே உனதழகைக் கண்டு—மனம்
> பித்தம் கொள்ளுது.

என்று நகைக்கின்றான். சில காதற்பேச்சுகளையும் பேசுகின்றான். நாயகி தான் மணந்துகொண்ட பெண் என்று கூறி தன்னைக் கண்ணால் பார்த்திடவும் தகாது என உரைக்கின்றாள். அவனோ விடாக்கண்டன்; தன்னிடம் வலிந்து இன்பம் பெற நினைக்கின்றான் என்பதை அறிகின்றாள் நாயகி. 'அட கண்ணா' என்று அலறி விழவும், அவள் போதம் தெளிகின்றது. கண்ணனைக் கண்ணால் காண்கின்றாள்.

> கண்ணா! வேடனெங்கு போனான்—உனைக்
> கண்டே அலறிவிழுந் தானோ?—மணி
> வண்ணா! எனதபயக் குரலில்—எனை
> வாழ்விக்க வந்தஅருள் வாழி!

என்று நாயகியின் வாழ்த்துரையுடன் இக்கவிதை நிறைவு பெறுகின்றது.

இந்தப் பாடலில் பாரதியின் இயற்கைமீது கொண்டுள்ள ஆர்வம் தெரிகின்றது; ஆராக்காதல் தெளிவாகின்றது. இப்பண்பில் ஆங்கிலக் கவிஞராகிய வொர்ட்ஸ்வொர்த்துடன் சேர்ந்து விடுகின்றார். பாரதி நாயகி காட்டும் அடவியின் சொல்லோவியம் இது :

மிக்க நலமுடைய மரங்கள்—பல
விந்தைச் சுவையுடைய கனிகள்,—எந்தப்
பக்கத்தையும் மறைக்கும் வரைகள்,—அங்கு
பாடி நகர்ந்துவரும் நதிகள்,—ஓ (திக்குதல்)

நெஞ்சிற் கனல்மணக்கும் பூக்கள்,—எங்கும்
நீளக் கிடக்குமிலைக் கடல்கள்—மதி
வஞ்சித்திடும் அகழிச் சுனைகள்—முட்கள்
மண்டித் துயர்கொடுக்கும் புதர்க்கள்—ஒரு (திக்குத்)

ஆசை பெறவிழிக்கும் மான்கள்,—உள்ளம்
அஞ்சக் குரல் பழகும் புலிகள்,—நல்ல
நேசக் கவிதைசொல்லும் பறவை,—அங்கு
நீண்டே படுத்திருக்கும் பாம்பு,—ஒரு (திக்குத்)

தன்னிச்சை கொண்டலையும் சிங்கம்—அதன்
சத்தத் திலிற்கலங்கும் யானை—அதன்
முன்னின் றோடுமிள மான்கள்—அவை
முட்டா தயல்பதுங்குந் தவளை.

இதில் கவிஞன் இயற்கை அழகு நிலை ஒவ்வொன்றிலும் ஒரு கவிதையைப் பார்க்கின்றான். ஒரு நதி பாடிக் கொண்டே நகர்ந்துவரும் காட்சி அவனுடைய உணர்ச்சியில் உற்பத்தியாவது சிறிதும் வியப்பில்லை. காட்சியின் சுற்றுணர்ச்சியும் இத்தகைய கற்பனைக்கு இடம் தருகின்றது. கனல் மணக்கும் பூக்கள், இலைக்கடல்கள், வஞ்சித்திடும் அகழிச் சுனைகள், முட்கள் மண்டித் துயர்

கொடுக்கும் புதர்கள், ஆசைபெற விழிக்கும் மான்கள், உள்ளம் அஞ்சக் குரல் பழகும் புலிகள், நேசக்கவிதை சொல்லும் பறவை, நீண்டு படுத்திருக்கும் பாம்பு, தன் மீசை கொண்டலையும் சிங்கம் போன்ற சொற்றொடர்கள் பல்வேறு உருக்காட்சிகளை (Imagery) எழுப்பிக் கவிதையின் கவினை உயர்த்துகின்றது. பாரதி நாயகி இவற்றையெல்லாம் துய்க்கும் நிலையில் 'திக்குத்தெரியாத காட்டில்' தன் காதலனைத் தேடி இளைத்துப் போகின்றாள்; சோர்ந்து விழும் நிலையில்தான் வேடனைப்பற்றிய நிகழ்ச்சி வருகின்றது; காதலனாகிய கண்ணனின் தரிசனமும் கிடைக்கின்றது.

கவிதையின் தலைப்பில் 'பயாநகம், அற்புதம்' என்ற ரசக் குறிப்பு உள்ளது. இக்குறிப்பினைப்பற்றி சில சொற்கள். பயம் மாந்தர்களுக்கு உடன் பிறந்த சொத்து. பயம் என்ற உணர்ச்சியற்றவர்கள் இல்லை என்றே சொல்லலாம். பயத்தை உண்டாக்கும் பொருள்கள் வேறுபடலாம்; பய உணர்ச்சி மட்டிலும் எல்லோருக்கும் பொதுவானது. ஆனால், இவ்வளவு பழக்கமான உணர்ச்சியாக இருந்த போதிலும் பயத்தை ஓர் இலக்கியத்திற்கு முக்கிய ரசமாகக் கவிஞர்கள் விவரிக்க·வில்லை. ஆயினும், ஒரு சில இடங்களில் இந்த ரசம் சிறப்பாகவே சித்திரிக்கப்பெற்றுள்ளது. பாரதத்தில் விராடன் மகன் உத்தர குமாரன் இந்த ரசத்திற்கு ஏற்ற நாயகனாக அலைந்துவிடுகின்றான். விராட நகரத்தில் போர்க்கொடி உயர்த்தப்பெற்ற பொழுது இவன் அந்தப்புரத்தில் மறைந்து கொள்ளுவதும் இவனைப் பார்த்தன் வல்லந்தமாய்த் தேரில் ஏற்றிக் கொண்டு போர்க்களத்திற்குக் கொண்டு போனாலும் இவன் பயத்தால் நடுங்கி முகத்தைத் திருப்பிக்கொண்டு இருந்ததும், பகைவர்கள் ஓடிவிட்டனர் என்று அறிந்தவுடன் ஆறுதலடைந்து பெருமூச்செறிந்து தெளிவுற்றது

மான நிகழ்ச்சிகள் யாவும் பயத்திற்குத் தக்க சான்றாகவே அமையும்.

இந்தப் பாடலில் கொலை வேடன் பாரதி நாயகியைச் சந்தித்துக் காதல் பேச்சினைத் தொடங்கிய பொழுது, இவளைப் பய உணர்ச்சி ஆட்கொள்ளுகின்றது.

—"அடி
கண்ணே, எனதிருகண் மணியே—உனைக்
கட்டித் தழுவமனம் கொண்டேன்
சோர்ந்தே படுத்திருக்க லாமோ?—நல்ல
துண்டக் கறிசமைத்துத் தின்போம்—சுவை
தேர்ந்தே கனிகள் கொண்டு வருவேன் நல்ல
தேங்கள் ளுண்டினிது களிப்போம்"
என்றே கொடியவிழி வேடன்—உயிர்
இற்றுப் போகவிழித் துரைத்தான்.

என்ற பகுதியில் பய உணச்சி தலைக்காட்டுகின்றதைக் காணலாம். இந்தப் பய உணர்ச்சியால் 'பாரதி நாயகி 'இருகரமும் குவித்து' அந்த நீசன் முன்னர் இவற்றைச் சொல்லுகின்றாள் :

"அண்ணா உனதடியில் வீழ்வேன்—எனை
அஞ்சக் கொடுமைசொல்ல வேண்டா—பிறன்
கண்ணாலஞ் செய்துவிட்ட பெண்ணை—உன்றன்
கண்ணாற் பார்த்திடவுந் தகுமா?"

இந்தப் பகுதியில் பயத்தினால் ஏற்படும் நடுக்கத்தைக் காணமுடிகின்றது. இந்தச் சொற்கள் காமம் மீறி நிற்கும் 'கொடியவிழி வேடனின்' செவியில் ஏறவில்லை. காமம் ஏறிய நிலையில் பேசுகின்றான் :

"ஏடி, சாத்திரங்கள் வேண்டேன்;—நின
தின்பம் வேண்டுமடி, கனியே,—நின்றன்
மோடி கிறுக்குதடி தலையை,—நல்ல
மொந்தை பழையகள்ளைப் போலே"

கேட்டவுடன் பயத்தால் 'கண்ணா!' என்று அலறி வீழ்கின்றாள் பாரதி நாயகி. பயாநக ரசம் உச்சநிலையை எட்டுகின்றது. ரசமும் நம்மை ஆட்கொண்டுவிடுகின்றது.

சற்று நேரம்கூட ஆகவில்லை. இதற்குள் போதம் தெளிந்து விடுகின்றது நாயகிக்கு. அவள் வேடனைக் காணவில்லை. கண்ணன் தரிசனம் அவளுக்குக் கிட்டுகின்றது. வேடன்தான் கண்ணனாக மாறினானோ? சேலையை வளரச் செய்து திரௌபதியின் மானத்தைக் காத்த கண்ணன் பாரதி நாயகியின் கற்பைக் காக்க நேரில் வந்து விடுகின்றான்! இவளது அபயக்குரல் கண்ணனின் அருள் காக்கச் செய்து விடுகின்றது. அச்ச உணர்ச்சி திடீரென்று வியப்புணர்ச்சியாக—அற்புத ரசமாக[21]—மாறிவிடுகிறது. ரசக் கலப்பும் ஒருவித ரசனையைத் தந்து நம்மை மகிழ்விக்கின்றது.

நான்காம் பாடல் : பாரதி நாயகி கண்ணனிடம் பாங்கியைத் தூதுவிடுவதாக அமைந்துள்ளது இப்பாடல். காதல் இலக்கியத்தில் 'தூது விடுதல்' ஓர் இன்றியமையாத மரபாக அமைந்துவிட்டது. அந்த மரபையொட்டியே இந்தப் பாடலில் தூதுக் கூறு அமைந்துள்ளது. 'தங்கப்பாட்டு' மெட்டில் அமைந்த இப்பாடல் நாட்டுப்புற இலக்கியத்தை நினைவுறுத்தும் பாங்கில் நடைபெறுகின்றது.

கண்ணன் மனநிலையைத் தங்கமே தங்கம்
(அடி தங்கமே தங்கம்)
கண்டுவர வேணுமடி தங்கமே தங்கம்

என்று பாடல் தொடங்குகின்றது. அடுத்து நாயகி தோழியிடம் நாயகனுக்குச் சொல்ல வேண்டிய செய்தியை

21. அற்புத ரசத்தின் விளக்கத்தை இயல்—6இல் கண்டு தெளிக. (இந்நூல் பக். 68—69D)

நிரல்படக் கூறுவதாகப் படல் அமைந்துள்ளது. நாயகி செய்தியைக் கூறும்போதே சிருங்கார உணர்ச்சியும் சின உணர்ச்சியும்' கலந்து வெளிப்படுவதைக் காணலாம். சிருங்கார ரசத்தைப்பற்றி இந்த இயலின் முற்பகுதியில் விளக்கியுள்ளோம். சின உணர்ச்சி—அதாவது வெகுளிச் சுவைபற்றி—வடமொழியில் இது ரௌத்திரம் என வளங்கப்பெறும்—ஈண்டு விளக்குவது இன்றியமையாததா கின்றது.

பகைவன் செய்த தீச் செயல்களை நினைந்து மனம் கொதிக்கும் நிலையைக் 'குரோதம்' என்று வழங்குவர். குரோத உணர்ச்சியில் மலர்ந்த ரசமே—சுவையே—ரௌத்திரமாகும்; ரௌத்திர ரசமே தமிழில் வெகுளிச் சுவை என்று வழங்கப்பெறுகின்றது. கரந்துறை வாழ்க்கை நிறைவு பெற்றதும் பாண்டவர்களும் எவ்வளவோ இன்னல்களுக்கிடையில் போருக்கு ஆயத்தமாகின்றனர். பீமனுக்கு உள்ளம் பூரிக்கின்றது. தங்களை அவமதித்து வீண் சிரமங்களுக்கு ஆளாகிய துரியோதனனையும் துச்சாதனனையும் பழிவாங்க நல்ல தருணம் வாய்த்த தென்று உள்ளம் இன்பத்தால் பொங்குகின்றது. இந்நிலை யில் கண்ணனைத் தூதனுப்பிச் சமாதானம் செய்து கொள்ளலாம் என்று தருமபுத்திரர் தீர்மானித்தது அவன் செவியில் விழுகின்றது. சினம் தாங்கவில்லை; பொங்கி எழுகின்றது. தானே நேரில் போரில் இறங்கி துரியோதனனைப் பழிவாங்கத் தீர்மானிக்கின்றான். இதனையறிந்த சகாதேவன், 'அண்ணா, பெரிய அண்ணனின் மனம் நொந்துவிடும். அண்ணனுக்கு விரோதமாகப் பேசுவது நீதியன்று' என்று வேண்டிக் கொள்கின்றான்.

இதற்கு வீமன் அளித்த மறுமொழி என்ன? "அரக்கு மாளிகையில் அனலிட்டதும், நஞ்சு கலந்த சோற்றை

அளித்ததும், சூதாட்டத்தில் பாஞ்சாலியை அவமதித்ததும் சிறிய செயல்களால்ல. நம்முடைய உயிரையும் சொத்தையும் பறிக்க வழிதேடின கொடியவன் துரியோதனன். அவனை நான் விட்டு வைக்கப்போவதில்லை. அவனுக்கு துணைசெய்த துச்சாதனனையும் விட்டுவிடமாட்டேன். கண்ணன் பதத்தில் ஆணையிட்டுச் சொல்லுகின்றேன். 'துரியோதனனின் தொடையைப் பிளந்து உயிர் மாய்ப்பேன். தம்பி துச்சாதனனின் தோள்களைப் பிய்ப்பேன். அங்குக் கள் என்று ஊறும் வெங்குருதியைக் குடிப்பேன். உன் அண்ணன் சமாதானம் செய்து கொள்ளட்டும், நான் போர் தொடுக்கிறேன். இன்று ஒரு நாள் அவர் எனக்கு அண்ணனும் அல்ல; நான் அவருக்குத் தம்பியுமல்ல'' என்கின்றான்; இத்தகைய மனவேகம்தான் 'குரோதம்' என்பது. இதனை வீரத்திற்கு உறுப்பாகவும், அளவு கடந்து நிற்கும் வீரத்தின் நிலை என்றும் கூறலாம். நாட்டியக் கலையில் பரத முனிவர் ரெளத்திர ரசத்தினின்றும் கருணம் ஏற்படுவதாகக் கூறுவர். மேலும் குரோதம் என்பது மனிதனுடைய பகுத்தறிவினைக் கீழடக்கிப் பொங்கிஎழும் ஓர் உணர்ச்சி. அஃது ஒரு பேயின் வேகத்தோடு கிளம்புவதால் அதன் செயல்கள் பின்னர் வருந்தத் தக்கவையாகவே இருக்கும்.

பாரதியாரின் இந்தப் பாடலும் நாயகியின் பேச்சாகவே அமைந்துள்ளது. கண்ணன் மன நிலையை கண்டு வரவேண்டும் என்று கூறும் வரையிலும் உள்ள பகுதியிலும் இறுதியில்,

நேர முழுதிலுமப் பாவி தன்னையே—உள்ளம்
நினைத்து மறுகுதடி தங்கமே தங்கம்
தீர ஒரு சொலினைக் கேட்டு வந்திட்டால்—பின்பு
தெய்வ மிருக்குதடீ தங்கமே தங்கம்

என்று பாட்டை நிறைவு செய்யும் பகுதியிலும் சிருங்கார ரசம் கொப்புளித்து நிற்கின்றது. சிருங்கார ரசத்தின் தன்மையை அறிந்து இப்பகுதிகளில் அதனைத் துய்த்து மகிழலாம்.

எஞ்சியுள்ள பகுதிகள் யாவும் ரௌத்திர ரசத்தில் தோய்ந்தவை.

சொன்ன மொழிதவறும் மன்னவ னுக்கே—எங்கும்
தோழமை இல்லையடி தங்கமே தங்கம்;
என்ன பிழைக ளிங்கு கண்டிருக்கி றான்?—அவை
யாவும் தெளிவுபெறக் கேட்டு விடடீ!

மையல் கொடுத்துவிட்டுத் தங்கமே தங்கம்—தலை
மறைந்து திரிபவர்க்கு மானமு—முண்டோ?
பொய்யை உருவமெனக் கொண்டவ னென்றே—கிழப்
பொன்னி உரைத்ததுண்டு தங்கமே தங்கம்

சோர மிழைத்திடையர் பெண்க ளுடனே—அவன்
சூழ்ச்சித் திறமைபல காட்டுவ தெல்லாம்
வீர மறக்குலத்து மாத ரிடத்தே
வேண்டிய தில்லையென்று சொல்லிவிடடீ!

என்ற பகுதிகளில் ரௌத்திரத்தைக் காணலாம். இடைக் குலப் பெண்டிரிடம் காட்டும் கைவரிசைகளெல்லாம் மறக் குலத்து மாதரிடம் மிசையா என்று சொல்லுமாறு தோழியிடம் பணிப்பதில் ரௌத்திரத்தின் கொடுமுடியைக் காணலாம்.

ஆற்றங் கரையதனில் முன்ன மொருநாள்—எனை
அழைத்துத் தனியிடத்தில் பேசியதெல்லாம்
தூற்றி நகர்முரசு சாற்றுவ னென்றே
சொல்லி வருவாயடி தங்கமே தங்கம்.

என்ற பகுதி தமிழ் மரபுக்கு—தமிழ்ப் பண்பாட்டிற்கு—ஒத்து வரவில்லை. சங்ககால அக இலக்கிய மரபையொட்டி, இஃது அமையவும் இல்லை. காதலன் காதலியிடம் பேசும்

'அந்தரங்கப்பேச்சை'—தனியிடத்தில் பேசினவற்றை—நகர் முரசு அடிப்பித்து ஊரம்பலப்படுத்தும் முறை அகத்திணை மரபுக்கு ஒவ்வாதது. ஒருகால் பரகால நாயகி (திரு மங்கையாழ்வார்) பெண்மடலேறும் வழக்கத்தைப பேசுகின்றாளே, அதனையொட்டி பாரதி நாயகியும் துணிந்து விட்டாளோ என்று நினைக்கத் தோன்றுகின்றது.

—'மான் நோக்கின்
அன்ன நடையார் அலர்ஏச ஆடவர்மேல்
மன்னும் மடல்ஊரார்' என்பதுஓர் வாசகமும்
தென் உரையில் கேட்டு அறிவதுண்டு அதனையாம்
தெளியோம்!
மன்னும் வடநெறியே வேண்டினோம்[22]

என்ற பாசுரப்பகுதிதான் இத்துணிவைத் தந்திருக்க வேண்டும் :

ஐந்தாம் பாடல் : 'ஆசை முகம் மறந்து போச்சே' என்று தொடங்கும் இந்தப் பாடல் உண்மையிலேயே ஓர் அற்புதமான பாடல். பாரதிநாயகியின் அநுபவமாக வெளிப்படும் இந்த அநுபவம் முற்காலக் கவிஞர்களிடையேயும் இக்காலக் கவிஞர்களிடையேயும் காண முடியாத ஓர் அற்புத அநுபவமாகும். நாயகியின் பிரிவாற்றாமைமையை நுவல்கின்றது இப் பாடல். நாயகி தோழியிடம் பேசுகின்றாள் :

தேனை மறந்திருக்கும் வண்டும்—ஒளிச்
சிறப்பை மறந்துவிட்ட பூவும்
வானை மறந்திருக்கும் பயிரும்—இந்த
வைய முழுதுமில்லை தோழி! (1)

பூச்சி உலகில் வண்டுகள் தேனை மறக்கா; தாவர உலகில் பூக்கள் கதிரவன் ஒளியை மறக்கா; பயிர்கள் வானை

22. பெரிய திருமடல்.

(மழையை) மறக்கா. இந்த நிலையை இந்த வையகத்தில் காணமுடியாது. இஃது அநுபவ ரீதியான உண்மை. இங்ஙனமே தன்னுடைய உள்ளம் (நாயகியின் உள்ளம்) கண்ணனின் உறவையே சதா நினைந்த வண்ணமிருக்கும்; வாயும் அந்த மாயனின் புகழினையே உரைத்துக் கொண் டிருக்கும்.

ஒய்வும் ஒழிதலுமில் லாமல்—அவன்
உறவை நினைத்திருக்கும் உள்ளம்
வாயும் உரைப்பதுண்டு கண்டாய்—அந்த
மாயன் புகழினையெப் போதும் (2)

தன் அவப்பேற்றின் காரணமாகத் தன் கண்ணில் (மனக் கண்ணில்) தெரியக் கூடிய கண்ணனின் தோற்றத்தில் அவனது முழு அழகும் இல்லை. அவன் முகத்தை உற்று நோக்கினாலும் அவனது மலர்ச்சிரிப்பு—மோகனப் புன்னகை—தென்படவில்லையே! (3) என்று கவல் கின்றாள் பாரதிநாயகி.

கண்கள் புரிந்துவிட்ட பாவம்—உயிர்க்
கண்ண னுருமறக்க லாச்சு;
பெண்க ளினத்திலிது போலே—ஒரு
பேதையை முன்புகண்ட துண்டோ? (4)

இந்தப் பாடற்பகுதி அருட்சக்தியில் தோன்றிய அமுதக் கவிதை. சாதாரண மக்கள், குழந்தைகள் இவர்கள் பேசும் சொற்கள்தாம் இதில் கையாளப் பெற்றுள்ளன. இவற்றைக் கொண்டு கவிஞர் ஓர் 'இரசவாதமே' செய்திருப்பதைக் கண்டு மகிழலாம். இறைவனைப்பற்றி உருகி உருகிப் பாடி யிருக்கும் மணிவாசகப் பெருமான், ஞானசம்பந்தப் பெருமான், ஆண்டாள், நாவுக்கரசர், இராமலிங்க அடிகள் இவர்கள் கவிதையின் உச்சத்தில் கனிந்திருக்கும் அனல் - தன்மையை,

கண்கள் புரிந்துவிட்ட பாவம்—உயிர்க்
கண்ண னுருமறக்க லாச்சு

என்ற அடிகளில் எவ்வளவு எளிதாக அமைத்து விடுகின்றார் பாரதியார்! நாயகி வாக்காக இது வெளிப் படும்போது நம்மை கவிதையநுபவத்தின் கொடுமுடிக்கே உந்தித் தள்ளிவிடுகின்றது!

பாரதியார் பாடல்களைப் பதிப்பித்த நூல்களில் காணப்பெறும் வரிசையை நீக்கி இங்குக் காட்டப் பெற்றுள்ள வரிசையில் பாடல்களைப் பாடி அநுபவிக்க வேண்டும். இந்தப் பதிப்புகளில் முதலாவதாகக் காணப் பெறும் 'ஆசை முகம்' என்று தொடங்கும் பாடலை இறுதியாகப் படித்து அநுபவிக்க வேண்டும்.

ஆசை முகமறந்து போச்சே—இதை
ஆரிடம் சொல்வேனடி தோழி?
நெச மறக்கவில்லை நெஞ்சம்—எனில்
நினைவு முகமறக்க லாமோ?

இதில் பொதிந்துள்ள அநுபவம் அரிது; அலாதியானது. இதனை அநுபவிக்க அநுபவிக்க 'ஆரா அமுதமாக' இருப்பதைக் கவிதைகளை உண்மையாகவே சுவைத்து மகிழும் ஒரு சிலரே காண்பார்கள். இறுதியாகவுள்ள 'கண்ணன் முக மறந்துபோனால்' என்று தொடங்கும் பகுதியை நீக்கி விட்டால் கூட நல்லது என்றே தோன்று கின்றது. காரணம் இஃது எதிரான உணர்ச்சியைக் கிளப்பி நம் அநுபவத்தையே குலைத்துவிடுகின்றது[23]

---

23. Meenakshi Sundaram, (Dr) : *A Study on the Poetical Works of Bharathi* (Paari Nilayam, Madras-600001 (1965)

இயல் —14

# கண்ணன்—என் காந்தன்

தமிழ் இலக்கியத்தில் சிறந்த பகுதி அகத்துறை இலக்கியம் ஆகும். இது களவு, கற்பு என்று இரு வகையாகப் பகுத்துப் பேசப்படும். களவுக் காலத்தில் தலைவனும் தலைவியும் ஒருவர்மேல் மற்றொருவர் கொண்டிருக்கும் அன்பு—ஆராக் காதல்—இ வ் வ ள வு அவ்வளவு என்று எடுத்துக் கூறல் இயலாது, இக்காலத்தில் தலைவன் 'கையுறை' கொண்டு தலைவியைச் சந்திக்கும் வாய்ப்புகள் உண்டு. பெரும்பாலும் இக்'கையுறை' தழை, மலர் மாலைபோன்ற பொருள்களாகவே இருக்கும். இக் 'கையுறை'பற்றிய செய்தியை இறையனார் களவியல்[1], திருக்கோவையார்[2], தஞ்சைவாணன் கோவை[3] போன்ற நூல்களில் காணலாம்.

இங்குக் 'காந்தன்' என்ற சொல் களவுக் காலத்தில் தலைவனுக்குப் பாரதியார் சூட்டிய பெயராகும். இங்ஙனமே இக் கவிஞர் பெருமான் அத்தினபுரத்துப் பெண்களை

1. இறை, கள. நூற்பா - 12 (உரை)
2. திருக்கோவை. சேட்படை - செய் 90—96.
3. தஞ். கோ. 97.

'மலர்விழிக்காந்தங்கள்'[4] என்று சுட்டுவதையும் ஈண்டு நினைவுகூரலாம். களவு வாழ்க்கையில் காதலர்கள் ஒருவர்க்கொருவர் சந்திக்கும் வாய்ப்புகள் அருகியிருக்கும் போது இருவர் மாட்டும் காதல் உணர்ச்சி காந்த சக்தி போல் உறைப்பாக இருக்குமாதலால் ஆண்மகனைக் 'காந்தன்' என்றும், பெண்மகளைக் 'காந்தம்' என்றும் சுட்டியிருப்பதும் எவ்வளவு பொருத்தமாகத் தோன்றுகின்றது! தவிர, காதலிக்குக் காதலன் 'காந்தன்'—ஈர்ப்பவன், ஈர்க்கப்படுகின்றவன்—என்ற நிலையில் இருப்பான். ஆனால், இங்கு ஈர்ப்பவள் பெண்ணே ஆவள்.[5] ஆதலால் அவள் 'காந்தம்' என்றே தானியாகு பெயரால் உருவகமாகக் குறிக்கப் பெற்றிருத்தல் சிந்தித்து மகிழத்தக்கது. ஓர் இலாடகாந்தம் அல்லது கட்டைக்காந்தத்தின் அருகில் ஒரு காந்த ஊசி வைக்கப்பெறுங்கால் அந்தக் காந்தஊசி சுற்றியலைவதை ஈண்டு நினைவுகூர்க. உலக வாழ்வில் பெரும்பாலும் ஆணே பெண்ணை நாடி அலைகின்றானேயன்றி பெண் ஆணை நாடி அலைவதில்லை. ஆயின், இதிகாச உலகில் கோபியர் கண்ணனை நாடி அலைவது சீவான்மாக்கள் பரமான்மாவை நாடி அலைவதற்குக் குறியீடாகும்.

கண்ணனாகிய காந்தன் காதலிக்கு என்னென்ன பொருள்களைக் கையுறையாகக் கொண்டுவந்து தருகின்றான்? கவிஞர் கூறுவார் :

---

4. பாஞ்சாலி சபதம் - 13

5. 'காந்தள்' என்று குறிப்பிட்டால், அது மலரைக் குறிக்குமேயன்றி மாதினைக் குறிக்காது. 'இல்லாள்' என்ற பெயருக்கு 'இல்லான்' என்ற பொருள் பொருந்தாததுபோல், 'காந்தன்' என்ற பெயருக்கு 'காந்தள்' என்ற பெயர் பொருந்தாமையை எண்ணி உணர்க.

கனிகள் கொண்டுதரும்—கண்ணன்
கற்கண்டு போலினிதாய்
பணிசெய் சந்தனமும்—பின்னும்
பல்வகை அத்தர்களும்,
குனியும் வாண்முகத்தான்—கண்ணன்
குலவி நெற்றியிலே
இனிய பொட்டிடவே—வண்ணம்
இயன்ற சவ்வாதும்

மதுரமான கனிகள், குளிர்ப்பூட்டும் சந்தனம், நறுமணம் விளைவிக்கும் அத்தர் வகைகள், கோலப்பொட்டுக்குரிய சவ்வாதும் தருகின்றான்.

இவற்றைத் தவிர வேறு பொருள்களையும் அன்பளிப்பு செய்கின்றான் :

கொண்டை முடிப்பதற்கே—மணங்
கூடு தயிலங்களும்,
வண்டு விழியினுக்கே—கண்ணன்
மையுங் கொண்டு தரும்;
தண்டைப் பதங்களுக்கே—செம்மை
சார்ந்து செம்பஞ்சுதரும்;
பெண்டிர் தமக்கெல்லாம்—கண்ணன்
பேசருந் தெய்வமடீ!

இக்காலத்தில் மகளிர் கொண்டை போடுவதில் கலை யார்வம் செலுத்துகின்றதையும், குழந்தைகள் முதல் வளர்ந்தவர்கள் வரை கண்ணுக்கு மையிட்டுக் கொள் வதையும், தண்டைகள் குலுங்கும் அழகிய பாதங்களுக்குச் செம்பஞ்சுக் குழம்பைப் பூசிக்கொள்வதையும் கூர்ந்து கவனித்த கவிஞர் இவற்றையெல்லாம் கண்ணன் தன் காதலிக்குக்—காதலிமார்க்குத்—தருவதாகக் கற்பனையில் கண்டு மகிழ்கின்றார். இதை ஒரு பெண் தன்னைச் சூழ்ந்துள்ள மற்ற பெண்களுக்குக் கூறுவதாகக் கவிதைகள்

அமைத்த திறம் மகிழ்ச்சி தருகின்றது. தானே சொன்னால் அது இதழ் நிருபர் ஒருவர் சொல்வதுபோல் உயிரற்ற செய்தியாகும் என்று கருதிய கவிஞர் சங்க இலக்கியப் பாணியில் கூற்று இலக்கியமாக்கி' விடுகின்றார்.

மார்பில் தொய்யில் எழுதுவதற்கு குங்குமமும் கொண்டு வருகின்றானாம். மணப்பொருள் சந்தையில் புதுப்புதுப் பொருள்கள் வந்தவண்ணம் உள்ளன. கவிஞர் இவற்றையெல்லாம் கற்பனையில் காண முடியவில்லை. தன் இயலாமையை ஓர் அற்புத உத்தியால் நிறைவுசெய்து விடுகின்றார். இவற்றை வாங்குவதற்கு 'சங்கையிலாத பணம்' தருவதாக அமைத்து விடுகின்றார், பாடலை.

பங்க மொன் றில்லாமல்—முகம்
பார்த்திருந் தாற்போதும்;
மங்கள மாகுமடீ!—பின்னோர்
வருத்த மில்லையடீ!

என்று பாடலை முத்தாய்ப்புடன் நிறைவு செய்கின்றார். கண்ணன் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாலே போதும் என்பது இந்த நங்கையின் நினைப்பு. இந்த நங்கைதானே கவிஞர்! ஓவியர் மணி இரவிவர்மா தன் கை வண்ணத்தால் தீட்டிய கண்ணனின் மூவண்ண ஓவியத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும்போது உண்மையான கண்ணனை நேரில் பார்ப்பது போன்ற அநுபவம் ஏற்படுகின்றதல்லவா? இந்த இடத்தில்,

நெடியானே! வேங்கடவா!
நின்கோயி லின்வாசல்
அடியாரும் வானவரும்
அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துஉன்
பவளவாய் காண்பேனே.[5]

5. பெரு. திரு. 4:9.

என்ற குலசேகராழ்வாரின் பாசுரத்தையும் நினைவுகூர் கின்றோம். ஆழ்வார் பெற்ற அநுபவத்தைப்போல், நாம் இரவிவர்மாவின் ஓவியத்தை நோக்கிக் கண்ணனை நேரில் பார்க்கும் அநுபவத்தைப் பெறுவது போல், கவிஞர் பெருமானும்,

பங்கம்ஒன் றில்லாமல்
பார்த்திருந் தாற் போதும்

என்று மங்கையொருத்தியின் வாய்மொழியாகப் பேசிக் கண்ணனை மானசீகமாக அநுபவித்து மகிழ்கின்றார். 'பகவதநுபவம்'' என்பது கிடைத்தற்கரிய, கிட்டற்கரிய பேறு அல்லவா?

இந்தப் பாடலின் தலைப்பில் இப்பாடல் சிருங்கார ரசத்தைப் பயக்கக்கூடியது என்ற குறிப்பைத் தந்துள்ளார் இதனைச் சற்று விளக்குவது இன்றியமையாததாகின்றது. தமிழில் தொல்காப்பியர் குறிப்பிடும் உவகைச் சுவையைத் தான் வடமொழிவாணர்கள் 'சிருங்கார ரசம்' என்று கூறுவர். கவிஞர்கள் சிருங்காரத்தைக் கையாண்ட விதத்தையும் தமிழ் வடமொழி இலக்கியங்களைச் சிருங்காரச் சுவை ஆட்கொண்டிருக்கும் நிலையையும் நோக்கியே இதனை 'ரசங்களின் மன்னன்' என்று குறிப் பிட்டது சரி என்றே தோறுகின்றது.

இலக்கியங்களில் சிருங்காரத்தைத் துய்க்க உள்ளத் தூய்மையும் சுவைக்கும் பழக்கமும் வேண்டும். நமது மனத்தில் கிடக்கும் அற்பமான காம வெறியாகிய சிந்தனையோடு காவியங்களைச் சுவைக்கப் புகுவது இலக் கியங்களை இகழ்வதாகும். கற்பனை உலகில் காணும் இன்பக் கனவுகளாகின்ற வருணனைகளைத் தூல உலகத் தோடு ஒப்பிட்டுப் பார்ப்பது மதியீனம் என்பதை உண்மைச் சுவைஞர்களே அறிவர். மேலும், பிரகிருதி அன்னையுடன்

ஆன்மா என்னும் பரமசிவன் இன்புற்று விளையாடுவதிலேயே உலகம் பிறந்தது என்று மாமுனிவர்கள் போதித்துள்ளார்கள். இந்தத் திருவிளையாடலே சிருங்காரம் என்பது அவர்கள் கருத்து. அந்தச் சிருங்காரமே உலகத்தின் அடிப்படைத் தத்துவம் என்பதை விளக்கவே கவிஞர்கள் இலக்கியங்களில் அந்த ரசத்தை அதிகமாகக் கையாண்டுள்ளார்கள் போலும்!

இந்தப் பாடலில் கண்ணன் என்ற 'காந்தன்' தன் காதலிக்குப் பல்வேறு வகைப்பட்ட கையுறைகளைத் தருவதாக வருணித்துள்ளார் கவிஞர். காதலன் கையுறைகளைத் தருவதாலும், காதலி அவற்றை ஏற்பதாலுமே இருவரும் இன்பத்தின் கொடுமுடியை எட்டிவிடுகின்றனர். காதலி தான் பெற்ற இன்பத்தைத் தோழிக்கு உணர்த்துவதாகப் பாடல் அமைந்துள்ளது. கண்ணன் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாலே போதும் என்ற கருத்தில்,

பங்கமொன் றில்லாமல்—முகம்
பார்த்திருந்தாற் போதும்

என்ற அடிகள் அமைகின்றன.

கண்களவு கொள்ளும் சிறுநோக்கம் காமத்தில்
செம்பாகம் அன்று பெரிது.[6]

என்று காதலன் கூற்றாகக் கூறியதை இங்குப் பாரதியார் காதலியின் கூற்றாக அமைத்துள்ளார். ஒருவர் முகம் மற்றவருக்கு இன்பம் பயப்பதுதானே உண்மை? 'முக தரிசனம்' எழுப்பும் உணர்ச்சியை உண்மைக் காதலர்களே அறிவார்கள்.

6. குறள் - 1092.

# கண்ணம்மா—என் காதலி

சமய இலக்கியங்களில்—சிறப்பாக வைணவ இலக்கியங்களில்—சீவான்மாவைத் தலைவியாகவும் பரமான்மாவைத் தலைவனாகவும் உறவு கற்பித்துக் கூறும் மரபு உண்டு. இது நாயக—நாயகி உறவு என்று வழங்கப் பெறும். இது முன் இயலிலும் குறிக்கப்பெற்றது. ஆனால் 'கண்ணம்மா—என் காதலி' என்ற தலைப்பில் காணப்பெறும் ஆறுபாடல்களிலும் இந்த உறவு முறையை மாற்றிப் பேசுகின்றார் கவிஞர். இக் கவிதைகளில் இறைவனைத் தலைவியாகவும், தன்னைக் காதலனாகவும் கொண்டு பேசுகின்றார். மரபுக்கு மீறிய இம் முறையை பாரதியார் எங்கோ தெரிந்திருக்கவேண்டும். இதனைச் சிந்தித்து ஆராயுங்கால் 'திருவாசக வியாக்கியானம்' எழுதிய (1834) சீகாழித் தாண்டவராயரின் குறிப்பு தென்படுகின்றது. அக்குறிப்பு : ''பத்தி முத்திக்கு உவமை பெத்தம்; பேரின்பத்துக்கு உவமை சிற்றின்பம் என வைத்து, உடம்பையுடைய யோகிகள்பால் உற்ற சிற்றின்பம், அடங்கத்தன் பேரின்பமாக, பேரின்பமான பிரம்மக்கிழத்தியோடு ஓரின்பமான அன்பே சிவமாய், அருளே காரணமாக சுத்தாவத்தையே நிலமாக, நாயகி பரம்பொருளாக, நாயகன் பக்குவான்மாவாக, தோழி திருவருளாக, தோழன் ஆன்ம போதமாக, நற்றாய்

பரையாக, திரோதாயி செவிலித்தாயாக மேலும் நாயகன் கூற்றெல்லாம் நாயகி கூற்றாகவும், நாயகி கூற்றெல்லாம். நாயகன், கூற்றாகவும் நிகழ்ந்துவரும். அவை அநுபூதியாற் காண்க.'' இந்தக் குறிப்பில் 'நாயகி பரம்பொருளாக, நாயகன் பக்குவான்மாவாக' என்ற பகுதி மட்டிலும் பாரதியாரின் மனத்தைக் கவர்ந்திருத்தல் வேண்டும்; இதனை அடிப்படையாகக் கொண்டே இப் பாடல்களில் சீவான்மா பரமான்மா உறவு முறையை தோசையைத் திருப்பிப் போடுவது போல, மாற்றியமைத் துள்ளார் என்று கருதலாம். அல்லது கவிஞர்க்கே உரிய தனி உரிமத்தைக் கொண்டு (Poetic License) இங்ஙனம் அமைத்துக் கொண்டார் என்று கொள்ளினும் இழுக்கில்லை. இந்த அடிப்படையில் இந்த ஆறுபாடல் களையும் ஆராய்வோம்.

முதற்பாடல் : பாடலை ஆய்வதற்கு முன் தமிழரின் அகத்திணை மரபுபற்றி ஒரு சில சொற்கள். பருவம் நிரம்பிய ஆடவனையும் மகளையும் ஒன்றாகப் பிணைப்பது 'காதல்' உணர்ச்சியாகும். ஒத்த அன்புடைய தலைவன் தலைவியர் ஒருவரை யொருவர் காண்பது ஊழ்வலியினால் என்பது பண்டையோர் கருத்து. இதனைத் தொல்காப்பியர்,

ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பால தாணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப.[2]

என்று கூறுவர். இங்ஙனம் ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப் படும் முதற்காட்சிக்கு நல்லூழின் ஆணையே காரண மென்பார் 'உயர்ந்த பாலதாணையின்' என்று கூறினார்;

1. பன்னிரு திருமுறை வரலாறு—இரண்டாம் பகுதி - பக். 273.

2. தொல். பொருள். களவு. 2.

அவ்வூழின் ஆணைக்குக் காரணம் அவ்விருவரும் பண்டைப் பிறப்புகளிற் பயிலியது கெழிஇய நட்பென்பார், 'ஒன்றி உயர்ந்த பாலதாணை' என்று உரைத்தார்; பல பிறவி களிலும் பழகிய அன்பின் தொடர்ச்சியே ஒருவரை யொருவர் இன்றியமையாதவராகக் காணுதற்குரிய காதற் கிழமையை வழங்கியதென்பார் 'ஒத்தகிழவனும் கிழத்தி யும் காண்ப' என்று சொன்னார். ஒத்த பருவத்தார் ஒரு வரை யொருவர் கண்டுழியெல்லாம் புணர்ச்சி வேட்கை தோற்றாமையின் 'ஒன்றி உயர்ந்த பாலதாணையின் காண்ப' என்றார் ஆசிரியர் என்பதை உளங்கொள்ளுதல் வேண்டும். ஈண்டுக் 'காணுதல்' என்பது தனக்குச் சிறந்தா ராகக் கருதுதலை.

இங்ஙனம் தலைவன் தலைவி என்ற இருவருள்ளத்தும் உள்நின்று சுரந்த அன்பின் பெருக்கினால் நடைபெறுவது தான் 'தான், அவள்' என்ற வேற்றுமையின்றி இருவரும் ஒருவராயொழுகும் உள்ளப்புணர்ச்சியாகும். இதனை இறையனார் களவியல்,

அதுவே,
தானே அவளே தமியர் காண
காமப் புணர்ச்சி இருவயின் ஒத்தல்.[3]

என்று குறிப்பிடும். இந்த உள்ளப் புணர்ச்சி நிகழ்ந்த பின்னர் ஒருவரையொருவர் இன்றியமையாது ஒழுகும் உயிரோரன்ன செயிர்தீர் நட்பே சாந்துணையும் நிலை பெற்று வளர்வதாகும். இதன் பின்னர் நடைபெறுவது இயற்கைப் புணர்ச்சியாகும்; இதுவே 'தெய்வப்புணர்ச்சி' என்றும் வழங்கப் பெறும்.

இயற்கைப் புணர்ச்சிக்கு முன்னர் தலைவனிடம் பெரும்பான்மை நிகழும் காட்சி, ஐயம் தெளிதல், தேறல்

3. இறை. கள. 2.

என்ற நான்கு நிலைகள் ஆகும். இதனைச் சிந்தாமணி ஆசிரியர் பதுமையார் இலம்பகத்தில் மிக அருமையாக விளக்குவதை இந்நூலாசிரியர் எடுத்துக் காட்டியுள்ளார்.[4] ஆண்டுக் கண்டு தெளிக.

பாரதியார் இந்தப் பாடலில் விளக்குவது 'காட்சி' என்ற நிலை. தமிழ் இலக்கிய மரபுப்படி நான்கு நிலைகளையும் வேற்கொள்ளாமல் இவர் காதலியைக் கண்டவுடன் அவளது காட்சியால் தம்மையே இழந்த நிலையில் பேசுகின்றார். அவளது அற்புதமான திருமேனியழகில் ஈடுபட்டுச் சிருங்கார ரசத்தில் ஆழங்கால் பட்டுப் பேசுகின்றார். இதற்கு முன்னர் பாரதியார் நாயகன் நிலையிலிருந்து கொண்டு கண்ணம்மாவின் எழிலை,

எங்கள் கண்ணம்மா நகைபுது ரோஜாப்பூ
எங்கள் கண்ணம்மா விழி இந்த்ர நீலப்பூ!
எங்கள் கண்ணம்மா முகஞ்செந் தாமரைப்பூ;
எங்கள் கண்ணம்மா நுதல் பாலசூர்யன்.

என்று வருணித்துள்ளார்.[5] மேலும், இங்கு வருணிக்கும் திறன் பாண்பெருமாள் திருவரங்கப் பெருமானை திருவடி முதல் திருமுடிவரையில் வருணித்துள்ள திறனை நினைக்கச் செய்கின்றது.[6]

மேற்குறிப்பிட்ட 'கண்ணம்மா—என் காதலி' என்ற முதற் பாடலில் கண்ணம்மாவின் காட்சியில்

4. தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை—(முதற் பதிப்பு). பக். 83 - 88.

5. தோ. பா.—55 கண்ணம்மாவின் எழில்.

6. முதலாயிரம் - அமலனாதி பிரான்.

ஈடுபட்டு வியந்து பாடுகின்றார். பாடல், நாயகன் வாக்காக அமைந்துள்ளது.

சுட்டும் விழிச்சுடர்தான்—கண்ணம்மா!
  சூரிய சந்திரரோ?
வட்டக் கரியவிழி—கண்ணம்மா!
  வானக் கருமை கொல்லோ?
பட்டுக் கருநீலப்—புடவை
  பதித்த நல்வயிரம்
நட்ட நடுநிசியில்—தெரியும்
  நட்சத்திரங்க ளடீ!

மேலும் பேசுகின்றார் : "உனது சுந்தரப் புன்முறுவல் சோலை மலரொளிபோல் தோன்றுகின்றது; உன் நெஞ்சில் எழும் அலைகள் நீலக்கடல் அலைகள்போல் காட்சி அளிக்கின்றன. உன் குரலின் இனிமை குயிலின் இனிய ஓசையை ஒத்துள்ளது. உனது யௌவன எழில் கட்டித்தழுவ என்னைத் தூண்டுகின்றது." பல்வரிசைக்கு முல்லை முகையை கூறுவதை நாம் கேட்டிருக்கின்றோம்; இது வடிவ உருக்காட்சி. ஆனால் இதனை மாற்றி வண்ண உருக்காட்சியாகக் காட்டுவது மிக அற்புதம். சோலை மலரொளியோ—உனது சுந்தரப் புன்னகைதான்! அவள் சிரிப்பு மின்சாரச் சிறு கை விளக்கொளிபோல் (Torch light) தோன்றுகின்றது போலும்!

இறுதிப் பாடற்பகுதி இப் பாட்டின் முத்தாய்ப்பு போல் அமைந்துவிடுகின்றது.

சாத்திரம் பேசுகிறாய்,—கண்ணம்மா!
  சாத்திர மேதுக் கடீ!
ஆத்திரம் கொண்டவர்க்கே,—கண்ணம்மா!
  சாத்திர முண்டோ டீ!

மூத்தவர் சம்மதியில்—வதுவை
முறைகள் பின்பு செய்வோம்;
காத்திருப் பேனா டீ?—இதுபார்
கன்னத்து முத்த மொன்று!

பெற்றோர்கள் சம்மதம் பெற்று, வதுவை மணமுறைகளை மேற்கொள்வதற்குமுன் 'அச்சாரமாக' முத்தமொன்று தரவிழைகின்றார்; அதனை அவள் முகத்தில் பதித்தும் விடுகின்றார்!

இந்தப் பாடலில் பாரதி கையாண்டுள்ள உருக்காட்சிகள் யாவும் இயற்கையினின்றும் தேர்ந்தெடுத்துக் கொண்டவை. சங்க இலக்கிய மரபுப்படி கற்புக்கு முன் களவு மணம் தொடங்குகின்றது. பொங்கி எழும் காதலுக்கு முன் சமூகம் விதித்துள்ள ஒழுங்கு முறைகள் யாவும் தவிடுபொடியாகி விடுகின்றன.

இரண்டாம் பாடல்: இப்பாடலில் அற்புதமான நிகழ்ச்சியைச் சித்திரித்துக் காட்டுகின்றார் கவிஞர். மாலைப் பொழுதில் ஒருநாள் கடற்கரையில் கடலை நோக்கிய வண்ணம் மணல்மீது அமர்ந்திருக்கின்றார்.[7] அப்போது மூலைக் கடலினை வான வளையம் முத்தமிட்டுத் தழுவி முகிழ்த்தலைக் காண்கின்றார். தம்மையே மறந்து 'பகற் கனவில்' ஆழ்ந்து விடுகின்றார். பின்புறத்தில் யாரோ வரும் 'ஆளரவம்' மெதுவாகக் கேட்கின்றது; அந்த ஆள் நிற்பதால் பகற்கனவு கலையத் தொடங்குகின்றது. வந்த ஆள் கவிஞரின் கண்களைப் பொத்துகின்றார். இதனை

7. பாரதியார் திருவல்லிக்கேணியில் வாழ்ந்தி போது 'மெரீனா'க் கடற்கரையில் பல நாட்கள் கழித்தி வேண்டும். அப்போது இப் பாடல் தோன்றியிருக்க வேண்டும் என்று கருத இடமுண்டு.

அந்த ஆளைத் தீண்டுவதால் அறிந்து கொள்ளுகின்றார், 'மொர மொர' என்று பட்டாடை உரசும் ஒலியும் உடலில் பூசியுள்ள மணப் பொருளின் வாசனையும் 'வந்தது ஆள்' என்பதை உணர்த்திவிடுகின்றன. அந்த ஆள் கைப்பட்ட தால் கவிஞரிடம் உவகையூற்றுத் தோன்றுகின்றது. வந்த ஆளை இனம் கண்டுவிடுகின்றார்.

'வாங்கி விடடிகையை யேடி கண்ணம்மா!
மாய மெவரிடத்தில்?'

என்று பேசுகின்றார். அவள் சிரிக்கின்றாள், அந்தச் சிரிப் பொலியில் அவள் பொத்திய கைகளை விலக்கித் தழுவி 'என்ன செய்தி சொல்' என்று வினவுகின்றார். அவள் அடுக்கடுக்காக அன்பு குழைந்த வினாக் கணைகளைத் தொடுக்கின்றாள்:

"நெரித்த திரைக்கடலில் என்ன கண்டிட்டாய்?
நீல விசும்பினிடை என்ன கண்டிட்டாய்?
திரித்த நுரையினிடை என்ன கண்டிட்டாய்?
சின்னக் குமிழிகளில் என்ன கண்டிட்டாய்?
பிரித்துப் பிரித்துநிதம் மேகம் அளந்தே
பெற்ற நலங்கள்என்ன? பேசுதி" என்றாள்.

இங்ஙனம் கண்ணம்மாவின் வினாக்கணைகட்குக் கவிஞர் காட்டும் கேடயம் :

"நெரித்த திரைக்கடலில் நின்முகம் கண்டேன்;
நீல விசும்பினிடை நின்முகம் கண்டேன்;
திரித்த நுரையினிடை நின்முகம் கண்டேன்;
சின்னக் குமிழிகளில் நின்முகம் கண்டேன்;
பிரித்துப் பிரித்துநிதம் மேகம் அளந்தே
பெற்றதுன் முகமன்றிப் பிறிதொன்றில்லை;
சிரித்த ஒலியினிலுன் கைவி லக்கியே
திருமித் தழுவியதில் நின்முகம் கண்டேன்."

இவ்வாறு ஒவ்வொரு கணைக்கும் ஈடு கொடுக்கின்றார். இதில்,

'பெற்றதுன் முகமன்றிப் பிறிதொன்றில்லை'

'திருமித் தழுவியதில் நின்முகம் கண்டேன்'

என்ற அடிகளில் 'கவிதையின் அனல்' தெறிக்கின்றது. நாம் சிருங்காரத்தின் 'கொடுமுடி'யை எட்டிவிடுகின்றோம். சிருங்காரத்தை அறிய முடியாதவர்களும் இப்பாடலில் சிருங்கார ரசத்தை இனங் கண்டு கொள்ள முடியும்.

மூன்றாம் பாடல் : ரஜபுத்திரப் பெண்களும் முகமதியப் பெண்களும் முக்காடிட்டு முகத்தை மறைத்துக்கொள்ளும் வழக்கத்தைக் காண்கின்றோம். இந்தப் பழக்கத்தைப் பற்றி இப்பாடல் குறிப்பிடுகின்றது.

கவிஞரின் காதலி கண்ணம்மா முகத்திரையுடன் காணப்பெறுகின்றாள். அவளை நோக்கிக் கவிஞர் பேசுகின்றார் :

தில்லித் துருக்கர் செய்த வழக்கமடீ!—பெண்கள்
திரையிட்டு முகமலர் மறைத்து வைத்தல்;
வல்லி யிடையினையும் ஓங்கி முன்னிற்கும்—இந்த
மார்பையும் மூடுவது சாத்திரங் கண்டாய்;
வல்லி யிடையினையும் மார்பி ரண்டையும்—துணி
மறைத்தத னாலழகு மறைந்ததில்லை;
சொல்லித் தெரிவ தில்லை, மன்மதக்கலை—முகச்
சோதி மறைந்துமொரு காதலிங் குண்டோ?

இந்தியப் பெண்கள் அழகாக ஆடை யுடுத்தி மார்பகங்களை மூடி, மறைத்துக்கொண்டிருப்பதே ஒரு தனி எழில். இப் பழக்கம் மகளிரின் அடக்கப் பண்பிற்கும் நாணத்திற்கும் ஓர் அறிகுறி. இங்ஙனம் இடையையும் மார்பகத்தையும் மூடுவதால் மகளிரின் அழகு மறைந்து போவதில்லை என்பது கவிஞரின் கருத்து. உண்மையும்

அதுதானே. உயிரினங்கள்—பயிரினங்கள் கூட—'மன்மதக் கலை'யை நன்கு அறிந்துள்ளன. இனவிருத்தியும் இக் கலையின் அடிப்படையில்தானே அமைந்துள்ளது? 'முகதரிசனம்' தான் ஒரு பெண்ணின் தோற்றத்திற்கு உயிர் நாடியாக உள்ளது. பொதுவாக மேனியழகு ஒரு மகளுக் குக் கவர்ச்சி தருவதாக இருப்பினும், அவளது முகவெட்டு தான் ஓர் ஆடவனை அதிகமாகக் கவருகின்றது. இதனால் தான் 'பாஸ்போர்ட்' அளவு ஒளிப்படத்தைக் கொண்டே ஓர் ஆடவன் தன் பாதி இசைவினைத் தருகின்றான்; மகளும் அப்படியே. இருவரும் ஓரளவு ஒப்புதல் தெரிவித்த பின்னரே நேரில் காணும் நிகழ்ச்சி நடைபெறுகின்றது. அப்போதும் 'முகச்சோதி'யை முக்காடிட்டு மறைத்தால் யாது பயன்? 'சோதி—முகச்சோதி—மறைத்துமொரு காதலிங் குண்டோ?' என்பது இளங்காதலர்க்குக் கவிஞர் விடும் சவால்!

திரையை இட்டு முகத்தை மறைக்கும் பழக்கம் ஆரிய முன்னெறிகள் என்று கண்ணம்மா கூறுவதாகக் கருதும் கவிஞர்,

ஆரியர் முன்னெறிகள் மேன்மை யென்கிறாய்—பண்டை
ஆரியப் பெண்களுக்குத் திரைகள் உண்டோ?

என்று வினவுகின்றார். இதுபற்றிய விளக்கத்தைத் திருப்பதியில் என்னுடன் பணியாற்றின இந்தி நண்பர் ஒருவரைக் கேட்டேன். அவர் தந்த விளக்கம்: வட புலத்தில் ரஜபுத்திரர்கட்கும் முகம்மதியர்கட்கும் பிறவியி லிருந்தே காழ்ப்பு. இவர்கள் ஆட்சி புரியுங்கால் ஒரு சாரா ரின் இளம்பெண்களை மற்றொரு சாரார் தூக்கிக் கொண்டு செல்வது வழக்கமாக இருந்து வந்தது. முக அழகுதான் இந்தக் கவர்ச்சியை உண்டாக்குவதற்குக் காரணம் என்று சொல்லுவதில் இருவேறு கருத்திற்கு இடம் இல்லை. இதனால் வடநாட்டுப் பெண்கள் அனைவரிடமும் 'முகம்

மூடி[7] போடும் வழக்கம் இருந்து வருகின்றது. மேலும் அவர் 'இரு சாராரும் வீடு கட்டுவதில் வாயில்களை நேர் நேராக வைப்பதில்லை; வெளியிலிருந்து வீட்டினுள் நடமாடும் இள நங்கையர்களைப் பிறர் பாராமலிருப் பதற்கே இந்த ஏற்பாடு' என்றார். இருசாரார் ஆட்சியிலும் உளவாளிகளை வைத்து இளம்பெண்கள் இருப்பதை நோட்டம் பார்த்து அப்படி யிருப்பதைத் தெரிந்து, வலிந்து கவர்ந்து செல்வார்கள் என்ற பழக்கத்தையும் தெரிவித்தார். பாரதியார் கருத்துப்படி பண்டை ஆரிய மகளிரிடம் முகத்திரை யிடும் பழக்கம் இல்லாதிருக்கலாம். இன்றைய வடநாட்டுப் பெண்கள் அனைவரிடமும் இவ் வழக்கம் இருந்து வருவதற்கு என் இந்தி நண்பர் கூறிய காரணம் பொருத்தமாகவே அமைகின்றது.

பாரதியாருக்கு முகத்திரையிடும் பழக்கம் ஓர் ஒவ்வாமை (Allregy) போல் தோன்றுகின்றது. கண்ணம் மாவிடம் நன்கு பழகியவர் பாரதி. பராசக்தியையே குழந்தையாகக் கண்டு மகிழ்ந்தவரல்லவா? இப்படி நீண்ட நாள் பழகியதற்குப் பிறகு ஒப்புக்கு முகத்தை மூடி நாணத் தைக் காட்டுவதில் பொருள் இல்லை. அதனால்தான்,

ஒரிரு முறைகண்டு பழகியபின்—வெறும்
ஒப்புக்குக் காட்டுவதிந் நாண மென்னடீ?

என்று கேட்கின்றார். பண்டைய நெறிப்படி அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு[8] பெண்களிடம் பிறவிப் பண்பு

---

8. நாண் - பெண்டிற்கு இயல்பாக உள்ளதொரு தன்மை; மடம்-கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமை; அச்சம் - பெண்மையின் தான் காணப்படாததோர் பொருள் கண்ட விடத்து அஞ்சுவது; பயிர்ப்பு - பயிலாத பொருட்கண் அரு வருத்து நிற்கும் நிலைமை. இது நக்கீரர் தரும் விளக்கம் (இறை. கள. 2—உரைகாண்க).

களாக அமைந்தவை. இன்றும் சிலரிடம், மார்பகத்தை நன்கு மூடி வைத்திருப்பினும், ஓர் ஆடவரைக் காணும் போது மார்பகத்தை மேலும் மூடுவதுபோல், கை செயற் படுவதைக் காணலாம். அங்ஙனமே, நன்கு பழகிய வட நாட்டார் வீட்டில் நாம் இருக்கும்போது முகத்திரை இடாது காணப்படும் பெண்கள் வேறு ஓர் வட நாட்டார் (ஆடவர்) வருங்கால் சரேலென்று முகத்திரை இட்டுக் கொள்வதைக் காணலாம். இச்செயல்கள் எதனைக் காட்டு கின்றன? இவை மகளிரிடம் இயல்பாகவுள்ள நாணத்தைக் காட்டுகின்றன. இதற்குமேல் ஒன்றும் கூறுவதற்கில்லை. 'ஒப்புக்கு' இவ்வாறு செய்கின்றனர் என்றும் சொல்லுவதற் கில்லை.

பாரதியாருக்குக் கண்ணம்மாவைத் தொட்டுப் பார்க்க வேண்டும்—நொப்புல அநுபவம் பெறவேண்டும்—என்ற எண்ணம் உதிக்கின்றது. அவர் கூறுகின்றார்:

யாரிருந் தென்னை யிங்கு தடுத்திடுவார்—வலு
வாக முகத்திரையை அகற்றி விட்டால்?
காரிய மில்லையடி வீண்ப சப்பிலே—கனி
கண்டவன் தோலுரிக்கக் காத்திருப்பனோ?

இறுதியடி கவிஞரின் காமத் துடிப்பினைக் காட்டுகின்றது.

ஆத்திரம் கொண்டவர்க்கே,—கண்ணம்மா
சாத்திர முண்டோடீ!

என்று முன்னர் சொன்னவரல்லவா? இத்துடிப்பெல்லாம் நம் மனத்தில் எழும் 'காமத்துடிப்பு' போன்றதன்று. இது தெய்விகக் காதல். இக் காதல்,

நின்னையே ரதியென்று
நினைக்கின்றேனடி!—கண்ணம்மா!

தன்னையே சசியென்று
சரண மெய்தினேன்.[9]

என்ற இசைப்பாடற் பகுதியில் அரணாக அமைந்து இக் கருத்தினை மேலும் உறுதி செய்கின்றது. 'விஷய காமம்' 'பகவத்விஷய காமமாகப்' பரிணமித்துத் திகழ்வதை இங்குக் காணலாம்.

நான்காம் பாடல் : இப்பாடலில் கவிஞர் சீவான்மாவுக்கும் பரமான்மாவுக்குமுள்ள வழிவழித் தொடர்பை—பிறவிதோறும் தொடர்ந்து வரும் உறவினை—எடுத்துக் காட்டுகின்றார்.

எற்றைக்கும் ஏழ்ஏழ்
பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே ஆவோம்!
உனக்கேநாம் ஆட்செய்வோம்.[10]

என்ற ஆண்டாளின் கருத்தினையொட்டி இஃது அமைந் திருப்பதாகக் கருதலாம்.

சித்தோபாயமாக இருப்பவன் எம்பெருமான். அவன் இப்பொழுது பாரதியாருக்குக் கண்ணம்மாவாக இருக் கின்றான். முகத்திரையைக் களைந்திடுமாறு கேட்டவர் அவளுடைய காதற்குறிப்பை அறிந்தே அவள் துகிலினை —முகமூடியை—தானே நீக்கி விடுகின்றார். கண்ணம்மா நாணிக் கண்புதைக்கின்றாள்.[1] உடனே கவிஞர் கேட் கின்றார் :

---

9. தோ. பா. 53—கண்ணம்மாவின் நினைப்பு

10. திருப்.—29

11. 'நாணிக்கண் புதைத்தல்'—என்ற ஒரே துறையில் அமைந்த அமிர்தகவிராயரின் ஒரு துறைக் கோவை நினை விற்கு வருகின்றது.

மன்னர் குலத்தினிடைப் பிறந்ததவளை—இவன்
மருவ நிகழ்ந்த தென்று நாண முற்றதோ?
சின்னஞ் சிறுகுழந்தை யென்ற கருத்தோ?—இங்கு
செய்யத் தகாத செய்கை செய்தவருண்டோ?

சின்னஞ்சிறுவயதிலிந்து கவிஞர் சக்தி வழிபாடுடையவர். சக்திதான் கவிஞருக்குக் கலைமகளாகவும், திருமகளாக பராசக்தியாகவும் காட்சி தருகின்றாள். கண்ணம்மாவும் இவளே. சிறு பிராயத்தில் கலைமகளிடம் காதல் கொண்டதை,

பிள்ளைப் பிராயத்திலே—அவள்
பெண்மையைக் கண்டு மயங்கிவிட்டேனங்கு
பள்ளிப் படிப்பினிலே—மதி
பற்றிட வில்லை யெனிலுந் தனிப்பட
வெள்ளை மலரணைமேல்—அவள்
வீணையுங் கையும் விரிந்த முகமலர்
விள்ளும் பொருளமுதும்—கண்டுடன்
வெள்ளை மனது பறிகொடுத்தேன், அம்மா![13]

என்ற பாடலில் காணலாம். ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட இப் பாடலிலும் (நான்காம் பாடல்) இதனை வலியுறுத் தில் பேசுகின்றார்: "கண்ணம்மா, கன்னிவயதிலுன்னைக் கண்டவனன்றோ? கன்னஞ் சிவக்க முத்தமிட்டேனே, நினைவு இல்லையா? நம்மை நாம் அன்னியமாக ஒரு போதும் நினைத்ததில்லையே, நம் உறவு ஈருடல் ஒருயிரன்றோ? பன்னிப் பன்னிப் பேசுவதால் பயன் என்ன? துகில் பறித்தவனுக்குக் கைபறிக்க அச்சம் எழா தன்றோ?

என்னைப் புறமெனவும் கருதுவதோ? கண்கள்
இரண்டினில் ஒன்றையொன்று கண்டு
வெள்குமோ?"

13. தோ. பா.—64. மூன்று காதல்-1

நம் நாட்டில் ஆண்கள் பெண்களை அடக்கிவைப்ப தற்கு எத்தனையோ பொய்க் கதைகளைப்—சுவை நைந்த பழங்கதைகளைப்—புனைந்து வைத்துள்ளனர். அவற்றை யெல்லாம் தாம் கண்ணம்மாவுக்குச் சொல்ல வேண்டுமா? என்கின்றார். ஆணுக்குப் பெண் சரிநிகர் சமானம் என்ற கொள்கையையுடையவர் நம் கவிஞர் பெருமான். ஆதலால்தான்,

பாட்டும் சுதியு மொன்று கலந்திடுங்கால்—நம்முள்
பன்னி உபசரணை பேசுவ துண்டோ?
நீட்டுங் கதிர்களொடு நிலவு வந்தே—விண்ணை
நின்று புகழ்ந்து விட்டுப் பின் மருவுமோ?
மூட்டும் விறகிணையச் சோதி கவ்வுங்கால்—அவை
முன்னுப சாரவகை மொழிந்திடு மோ?

என்று வினவுகின்றார். சீவான்மாவும் பரமான்மாவும் பாட்டும் சுதியும்போலவும், நிலவுக்கதிகளும் விண்வெளி யும்போலவும், விறகும் தீயும் போலவும் உறவுகொண் டிருப்பதாகத் தெரிவிக்கின்றார்.

இந்த உறவு இன்று நேற்று ஏற்பட்டதன்று. இந்த உலகம் தோன்றிய நாள்தொட்டு ஏற்பட்டதாகும். சாத்திரங்கள் யாவும் இதையே உரத்த குரலில் எடுத் தோதுகின்றன. கவிஞர் கூறுகின்றார் :

நேற்று முன்னாளில் வந்த உறவன்றடீ!—மிக
நெடும்பண்டைச் காலமுதற் சேர்ந்துவந்ததாம்.
போற்றுமி ராமனென முன்புதித்தனை,—அங்கு
பொன்மிதிலைக் கரசன் பூமடந்தை நான்;
ஊற்றமு தென்னஒரு வேய்ங்குழல் கொண்டோன்
—கண்ணன்
உருவம் நினக்கமையப் பார்த்தன் அங்குநான்.

இவை மட்டுமா?

*முன்னை மிகப்பழமை இரணியனாம்—எந்தை*
*மூர்க்கந் தவிர்க்க வந்த நரசிங்கன்நீ;*
*பின்னையோர் புத்தனென நான்வளர்ந் திட்டேன்*
*—ஒளிப்*
*பெண்மை அசோதரையென் றுன்னை எய்தினேன்.*

என்று மேலும் உறவு காட்டுவார். ஒரு காலத்தில் இராமன் சீதை போலவும் (நாயக நாயகி உறவு), இன்னொரு காலத்தில் கண்ணனும் பார்த்தனும் போலவும் (தோழர்கள் உறவு) மற்றொரு காலத்தில் நரசிங்கனும் பிரகலாதனும் (இறைவன்—மனிதன் உறவு) போலவும், பிறிதொருகாலத்தில் புத்தன்—அசோதரை போலவும் (சேய்—தாய் உறவு) இருந்து வந்ததைப் புலப்படுத்துவார். பரமான்மா நிலையில் இராமன், கண்ணன், நரசிங்கன், புத்தன் இருப்பதையும் சீதை, பார்த்தன், பிரகலாதன், அசோதரை இவர்கள் சீவான்மா நிலையில் இருப்பதையும் 'கண்ணன் பாட்டு' என்ற கவிதையின் தத்துவத்தையே எடுத்துக்காட்டிவிடுகின்றார். இந்த உறவுபற்றிச் சாத்திரங்கள் கூறுவதில் தவறு இல்லை; வல்லார் வரைந்து வைத்த ஏடுகள் இவை. இந்த உறவு எதிர்காலத்திலும் தொடர்ந்து செல்வதை,

*இன்னுங் கடைசிவரை ஒட்டிருக்குமாம்;—இதில்*
*ஏதுக்கு நாணமுற்றுக் கண்பு தைப்பதே?*

என்ற அடிகளில் உறுதிப்படுத்துகின்றார். நிலைமை இப்படியிருக்க கண்ணம்மா தன்னைக் கண்டு நாணிக் கோணவேண்டியதில்லை; கண்புதைக்கவும் வேண்டிய தில்லை. பகிரங்கமான உறவு என்று நிலைநாட்டுகின்றார் இப்பாடலில். இங்கு அடங்கிய சிருங்காரத்தைக் காண்கின்றோம்.

ஐந்தாம் பாடல் : இந்தப் பாடலில் 'குறியிடந் தவறியது' என்ற அகத்துறையின் விளக்கத்தைக் காண முடிகின்றது. இத்துறை 'அல்ல குறிப்படுதல்,[14] என்ற அகத்துறையுடன் ஒரு புடை ஒத்துள்ளது என்று கூறலாம். கண்ணம்மா தோழியுடன் தான் வருவதாகக் குறியமைக்கின்றாள். குறியிடம்—தீர்த்தக்கரையில் தெற்கு மூலையிலுள்ள செண்பகத் தோட்டம்;—காலம் : வெண்ணிலவு காயும் இரவு. (தியானத்திற்கும் தகுந்த இடம்!). கவிஞர் அந்த இடத்திற்கு வந்து கண்ணம்மாவைக் காணாமல் தவிக்கின்றார். அந்த ஏக்கத்தில் பாடல் பிறக்கின்றது.

வார்த்தை தவறிவிட்டாய்—அடிகண்ணம்மா!
மார்பு துடிக்குதடீ!
பார்த்த விடத்தி லெல்லாம்—உன்னைப்போலவே
பாவை தெரியு தடீ!

என்று பகருகின்றார். 'நோக்கிய எல்லாம் அவைபோல் காணல்' நிலை ஏற்படுகின்றது. எங்கும் கண்ணம்மாவின் உருவம் தென்படுகின்றது. 'யாதுமாகி நின்றாய்—காளீ!—எங்கும் நீ நிறைந்தாய்'[15] என்று கூறியவரல்லவா? காரிகை மீதுள்ள காதல் கடவுள் காதலாக மாறிவிடுகின்றது என்று கூட இதனைக் கருதலாம்,

கண்ணம்மாவைக் காணாமல் கவிஞர் எங்ஙனம் ஏங்குகின்றார்? அவரே கூறுகின்றார் :

---

14. அல்ல குறிப்படுதல்—குறியல்லாத குறியில் மயங்குதல். இதன் விளக்கத்தை 'அகத்திணைக் கொள்கைகள்' என்ற நூல் (பக். 94-97) காண்க.

15. தோ. பா.—30 காளிப்பாட்டு; 31. காளிதோத்திரம்—அடி. 1

மேனி கொதிக்கு தடீ!—தலைசுற்றியே
வேதனை செய்கு தடீ!
வானி லிடத்தை யெல்லாம்—இந்த வெண்ணிலா
வந்து தழுவுது பார்!
மோனத் திருக்கு தடீ! இந்தவையகம்
மூழ்கித் துயிலினிலே,
நானொருவன் மட்டிலும்—பிரிவென்பதோர்
நரகத் துழலு வதோ?

வையகமெல்லாம் உறக்கத்தில் ஆழ்ந்து கிடக்கும்போது தான் மட்டிலும் துயிலின்றித் தவிக்கும் நிலையைப் புலப்படுத்துகின்றார். தலை சுற்றிய வேதனையில், மேனி கொதிக்கும் நிலையில், தாம் துன்பப்படுவதை, எடுத்து மொழிகின்றார். கவிஞரின் காதல், கடவுட் காதல்; தெய்விகக் காதல்.

கவிஞர் தலைவன் நிலையிலிருந்துதான் தலைவியைக் காணத் துடிக்கின்றார். தலைவி இருக்குமிடம் காவல் மிகுதியுடையது என்று கூறுகின்றார். காவல் இல்லாத நேரமே இல்லை என்பதையும் புலப்படுத்துகின்றார்.

கடுமை யுடைய தடீ!—எந்த நேரமும்
காவலுன் மாளிகையில்;
........................
கொடுமை பொறுக்க வில்லை—கட்டுக் காவலும்
கூடிக் கிடக்கு தங்கே;

என்ற அடிகளில் இதனைக் காணலாம். தலைவன் நிலையி லிருந்தாலும் அடிமைப் புத்தி (சீவான்மாவின் நிலை) யினைக் காட்டி, விடுகின்றார். தம்மையும் அறியாமல் அதனைச் சொல்லியே தீர்த்துவிடுகின்றார்.

அடிமை புகுந்த பின்னும்—எண்ணும்போதுநான்
அங்கு வருவதற் கில்லை

என்பதில் இப்புலப்பாட்டைக் காணலாம். எப்படியோ கண்ணம்மாவைக் கூடிக் களிக்கவேண்டும் என்ற எண்ணம் நிறைவேறாமல் போய்விடுகின்றது. இறைவன் பட்ச பாதமற்றவன்தான்; ஏனோ தன் அன்புக்குப் பிடிபடாதவனாகப் போய்விடுகின்றான்?

நடுமை யரசி யவள்—எதற் காகவோ
நாணிக் குலைந்திடுவாள்

என்ற அடியில் எம்பெருமானின் நடுவு நிலைமையையும் தனக்குக் அது கிடைக்காமல் 'நாணிக்குலைந்திடுவதையும்' கவிஞர் காட்டிவிடுகின்றார். நம்மாழ்வார் போன்ற ஞானச் செல்வர்கள் தலைவி நிலையிலிருந்து இறைவனைக் காணா நிலையில் தமது ஏக்கத்தைப் புலப்படுத்துவதைப் போலவே, நம் கவிஞரும் தலைவன் நிலையிலிருந்து கொண்டே தமது ஏக்கத்தைத் தெரிவித்துவிடுகின்றார். கிட்டாத பகவதநுபவம் எட்டாப் பழமாக இருப்பதை எடுத்துக் காட்டுவது மிக அற்புதம்; அற்புதம்.

எம்பெருமானுடன் கூடிப் பிரியாமல் ஓரிரவு முழுவதும் கொஞ்சிக் குலவி, ஆடிவிளையாடி, அவன் திவ்விய மங்கள விக்கிரகத்தை ஆயிரம் கோடிமுறை தழுவித் தமது மனக்குறையைத் தீர்த்துக் கொள்ளலாம் என்றுதான் கருதியிருந்தார். ஆனால், என் செய்வது? அப்பேறு தமக்குக் கிடைக்கவில்லையே கவிஞரே கூறுகின்றார் :

கூடிப் பிரியாமலே—ஓரிராவெல்லாம்
கொஞ்சிக் குலவி யங்கே,
ஆடி விளை யாடியே,—உன்றன் மேனியை
ஆயிரங் கோடி முறை
நாடித் தழுவி மனக்—குறைதீர்ந்துநான்
நல்ல களி யெய்தியே
பாடிப் பரவசமாய்—நிற்கவேதவம்
பண்ணிய தில்லை யடீ!

பண்டைய சங்கப்பாடல்களிலும் பிற்காலத்தில் எழுந்த பக்திப் பாசுரங்களிலும் பிரிவாற்றாமையைத் தாங்க முடியாது நாயகியே தவிப்பதாக நவிலப் பெற்றிருக்கும். இதுவே அகத்திணை நெறி. ஆனால், இங்கு நாயகன் தவிப்பதாக ஒரு புதுநெறியை வகுத்து விடுகின்றார் பாரதியார். ஆனால் சிவான்மா—கவிஞர்—தலைவன் நிலையிலிருப்பதால் இந்தப் புதுநெறி பண்டைய அகத்திணை நெறியினின்றும் விலகிப்போகவில்லை என்பதை உய்த்துணரலாம்.

இந்தப் பாடலை—மேலே காட்டிய பகுதியை மட்டி லும்—திரும்பத் திரும்பப் பாடி மகிழுங்கால் சிருங்கார ரசத் தின் உறைப்பு தட்டுப் படும்; பக்தியுணர்வும் இடை இடையே தலை காட்டும். சிறுசிறு நிகழ்ச்சிகளையெல்லாம் ஒன்றுகூட விடாமல் எளிய சொற்களைக் கொண்டு உயரிய முறையில் வருணிக்கும் கவிஞரின் திறன் நம் உள்ளத்தைக் கவருகின்றது. இதில் அமைந்துள்ள உருக்காட்சிகள் நம் உள்ளத்தில் அழியாத ஓவியத்தை நிலைபெறச் செய்து விடுகின்றன.

ஆறாம் பாடல் : எல்லாப் பொருள்களை வருணிப்பதில் கவிஞர்கள் சிறந்து விளங்கினாலும் காதலைத் தங்கள் சொல்லோவியங்களில் காட்டும்போது வருணனையின் கொடுமுடியினை எட்டிவிடுகின்றனர். உலக தத்துவம் முழுவதையும் காதல் வாயிலாக விளக்கிவிடுகின்றனர். இயற்கையின் ஒற்றுமையை விளக்கும் ஒவ்வொரு கூறிலும் காதலின் பேராற்றலைக் காண்கின்றனர்.

இந்தப் பாடலில் பாரதியார் ஏராளமான உருக்காட்சி களைப் (Imagery) பட்டியலிட்டுக் காட்டுகின்றார். இங்ஙனம் காட்டுவதில் கவிஞர் தமது திறமையையெல் லாம் காட்டிவிடுகின்றார். தம் சிந்தனையை யெல்லாம்

தேக்கி ஒரே இடத்தில் காட்டுகின்றார். மரபுவழியைப் பின்பற்றாமல் புதுமரபினை அமைக்கின்றார். இந்தப் பாடலில் காணும் இணையான கூறுகளை நாம் பிரித்துச் சிந்திக்க முயன்றால் காதலனது ஏக்கத்தில் துன்பமும் காதலின் நிலைமாறாத வேகமும் தெளிவாகப் புலனாகும்.

ஒரு சிலவற்றை மட்டிலும் ஈண்டுச் சிந்திப்போம். நம் மனத்திலிருந்து பாயும் அறிவாகிய ஒளி இன்றேல் பார்க்கும் விழியினால் பயன் இல்லை. இவ்விரண்டையும் பிரிக்க முடியாது. அதுபோலவே, தும்பியில்லாமல் தேன் தோயாது. அங்ஙனம் தேன்தோயும்போது அழகும் சேர்ந்தால்தான் பயன் உண்டு. இனிமையும் அழகும் இணைந்தால்தான் இரண்டிற்கும் பெருமை.

> பாயுமொழி நீ எனக்கு—பார்க்கும்விழி நானுனக்கு
> தோயுமது நீ எனக்கு—தும்பியடி நானுனக்கு

விண்டுரைக்க முடியாத காதலன்—காதலி ஒற்றுமை யுணர்ச்சியை ஒன்றுக்கொன்று இன்றியமையாத இணைப்புகளின் மூலம் விளக்குவதில் பாரதிக்கு நிகர் பாரதிதான்.

மகளிர் வீணை வாசிக்கும்போது அழகிய விரல்கள் வீணைத் தந்தியின்மீது மேவுவதே ஒரு தனியழகு. இங்ஙனம் விரல்கள் மேவாவிடில் வீணையின் அழகிய ஆற்றல் வெளிப்படாது. ஒன்றோடொன்று விரலும் வீணையும் மருவாதவரையில் தனித்தனியாக நிற்கும் அவ்விரண்டினாலும் கண்ணிற்கோ காதிற்கோ சிறிதும் பயன் இல்லை. அதுபோலவே வெறும் மாலை அழகுக்கு அழகு செய்யமுடியாது. தனி வைரங்களும் சேர்ந்து பொலிவு அடையமுடியாது. வைரங்களின் வனப்பு முழுவதும் வெளிப்படுத்த வேண்டுமானால் மாலையின் வடம் இன்றியமையாதது.

வீணையடி நீ எனக்கு—மேவும்விரல் நானுனக்கு
பூணும்வடம் நீஎனக்கு—புதுவயிரம் நானுனக்கு

இங்ஙனமே கவிஞர் இரண்டு உயிர்களைப் பிணைக்கும் காதல் உணர்ச்சியை அற்புதமாக விளக்குகின்றார். பாடல் முழுவதையும் படித்துச் சிந்தித்தால் பாரதியாரின் சிந்தனை ஊற்று வற்றாது பாய்ந்து வருவதைக் கண்டு களிக்கலாம்.

நல்லஉயிர் நீஎனக்கு—நாடியடி நானுனக்கு
செல்வமடி நீஎனக்கு—சேமநிதி நானுனக்கு
எல்லையற்ற பேரழகே!—எங்குநிறை பொற்சுடரே!
முல்லைநிகர் புன்னகையாய்;—மோதுமின்பமே!
கண்ணம்மா

என்ற பகுதி இந்தப் பாடலுக்கே ஒரு பொலிவினைத் தருவதுபோல் தோன்றுகின்றது. தாரையும் தண் மதியமும் அளவற்ற இன்பக்காட்சி தருவதையும், வீரமும் வெற்றியும் இன்றியமையாமல் இணைந்திருப்பதையும் எடுத்துக்காட்டி, தாரணியிலும் வானுலகிலும் சார்ந்திருக்கும் இன்பமெல்லாம் ஒரே உருவமாய்ச் சமைந்திருப்பதை அற்புதமாய் எடுத்துக்காட்டுவது சக்தியை நாடிபிடித்துப் பார்க்கும் பாரதியார் ஒருவராலேதான் இயலும்.

தாரையடி நீஎனக்கு—தண் மதியம் நானுனக்கு
வீரமடி நீஎனக்கு—வெற்றியடி நானுனக்கு
தாரணியில் வானுலகில்—சார்ந்திருக்கும் இன்ப
மெல்லாம்
ஒருருவ மாய்ச்சமைந்தாய்! உள்ளமுதே!
கண்ணம்மா!

இங்குச் சக்தியே கண்ணம்மாவாகி விடுகின்றது. பாட்டின் முத்தாய்ப்பாக அமைந்து கிடக்கின்றது இப்பகுதி.

வையம் முழுதும் படைத்தளிக்கின்ற
மகாசக்தி தன்புகழ் வாழ்த்து கின்றோம்;
செய்யும் வினைகள் அனைத்திலுமே வெற்றி
சேர்ந்திட நல்லருள் செய்க வென்றே.[16]

என்று பாடியவரல்லவா?

15. தோ. பா.—22. வையமுழுதும்

# கண்ணன்—என் ஆண்டான்

வைணவ தத்துவத்தில் ஒன்று சேஷ—சேஷிபாவம் (அடிமை—ஆண்டான் பாவனை) ஆகும். இதனை,

> அறிகிலேன் தன்னுள்
> அனைத்துலகும் நிற்க
> நெறிமையால் தானும்
> அவற்றுள் நிற்கும்பிரான்.[1]

[நெறிமையால் - சேஷ—சேஷிபாவமாகிற முறைமை தவறாமல்]

என்ற திருவாய்மொழிப் பாசுரப் பகுதியால் அறியலாம். உலகிலுள்ள பொருள்களெல்லாம் எம்பெருமானுடைய சங்கல்பத்தைப் பற்றிக்கிடக்கின்றன; அப்பொருள்களினுள் எம்பெருமான் தன் சேஷித்துவ முறை (ஆண்டான் என்ற முறை) தப்பாதபடி நிற்கின்றான் என்பது இதன் பொருளாகும். இந்தத் தத்துவத்தை பூதத்தாழ்வார் பாசுரம் மிகவும் தெளிவாக்கும்.

> தனக்கடிமை பட்டது தான்அறியா னேலும்
> மனத்தடைய வைபதாம் மாலை—வனத்திடரை

1. திருவாய் 9. 6:4.

ஏரியாம் வண்ணம் இயற்றுமிது அல்லால்
மாரியார் பெய்கிற்பார் மற்றும்[2]

[மால் - திருமால்; வனம் திடர் - காட்டிலுள்ள மேட்டு நிலம்; இயற்றும் - வெட்டும்; மாரி - மழை]

எம்பெருமான் ஆன்ம கோடிகளை உய்விக்கப் பற்பல அவதாரங்கள் எடுத்துப் படாதன படுகின்றபடியால் நம்மைத் திருத்திப் பணிகொள்ளுதல் அப்பெருமானுக்குக் கடமையாயிருக்கும் என்பது உண்மையே. ஆனால், நாம் யாதொரு முயற்சியும் செய்யவேண்டுவதில்லை என்று கருதுதல் தவறு. எம்பெருமான் நம்மை மண்ணும் மரமும் போல், கல்லும் கரியும்போல், படைக்காமல் அறிவுள்ள பொருளாகப் படைத்துள்ளான். இந்த அறிவுக்கேற்ப நாம் செய்ய வேண்டியதொன்றுண்டு. அதாவது, அவனைப் பெறவேண்டும் என்ற 'ருசி' மாத்திரம் நம்மிடம் இருக்க வேண்டியதொன்று; இதைத்தவிர, நாம் வேறு முயற்சி செய்யவேண்டியதொன்றும் இல்லை. இதுவே சாத்திரங்களின் சாரப்பொருளாகும்.

இப்பாசுரத்தின் முன்னிரண்டு அடிகளின் ஆழ்ந்த கருத்து பின்னிரண்டு அடிகளிலுள்ள எடுத்துக்காட்டால் விளக்கப்படுகின்றது. காடு எழுந்து மேடாயிருந்த நிலத்தைச் சீர்திருத்தி ஏரியாக வெட்டுகின்றோம்; இச்செயல் மழைபெய்வதற்குச் சாதனமாக மாட்டாது; நாம் ஏரி வெட்டினோம் என்பதற்காக மழைக் கடவுள் — வருணன் — மழை பெய்விக்கமாட்டான். மழை பெய்வது இறையருளினால்; அப்படிப்பட்ட மழைக்கு ஏரி வெட்டுதல் உபாயமன்று, இஃது உலகறிந்த செய்தி. ஏரி வெட்டுதல் மழைபெய்வதற்கு உபாயம் ஆகாது என்றால் வீணாக ஏன்

2. இரண். திருவந். 16.

ஏரியை வெட்டவேண்டும்? என்று கருதுதலாகாது. எப்பொழுதாவது இறையருளினால் மழை பெய்யுமாகில் அந்த மழையை 'வனம் திடர்' தாங்கிக் கொள்ள மாட்டாது. நாம் அந்த 'வனத்திடரை'ச் சீர்திருத்தி ஏரியாக அமைத்து வைப்போமாயின் மழைபெய்யும்போது வரும் நீர் அதில் தங்குவதற்குப் பாங்காக அமையும். ஆகவே, மழைநீர் பழுது படாமைக்காக ஏரி வெட்டுதலேயன்றி மழையைப் பெய்வித்தற்காக அன்று என்பது தெளிவாகும். இவ்வாறே நாம் சேதநராகப் பிறந்துள்ள வேற்றுமைக்காக நம்முடைய நிலைமையைச் சீர்படுத்திக் கொள்ளுதல் பகவானை அடைவதற்குச் சாதனமாக மாட்டாது; ஒருகால் பகவான் நம்மைத் திருவுள்ளம் பற்ற வருவானாயின், அவனது திருவருள் நம்மிடத்தில் நன்கு தங்குவதற்குப் பாங்காகும் நம்மை, நாம் திருத்தி வைத்துக் கொள்ளவேண்டும்.

ஈண்டு திருத்தமுறாத சேதநரை 'வனத்திடரின்' நிலையிலும், விருப்பம் முதலியவற்றால் நம் நெஞ்சைத் திருத்திக் கொள்வது 'ஏரியாம் வண்ணம் இயற்றுகையாம்' நிலையிலும், இறையருள் கைபுகுதல் 'மாரிபெய்கை' நிலையிலும் வைத்து இக் கருத்தினைச் சிந்தித்து அறிதல் வேண்டும். ஒரு காரணமும் பற்றாது வரும் இறைவனது திருவருளைத் தாங்கிக் கொள்வதற்கு மாத்திரம் உறுப்பாகுமேயன்றி இறையருளை நிர்ப்பந்தப்படுத்தி உறுப்பாக மாட்டாதென்று சேதநர்களின் செயல்களின் குறிக்கோளின்மை வலியுறுத்திக் காட்டப்பட்டது இப்பாசுரத்தில். அஃதாவது, பலனை எதிர்பாராது செயலாற்றவேண்டும் என்ற கீதையின் கருத்து இஃதுடன் ஒரு புடையொத்துள்ளது என்பதையும் சிந்திக்கின்றோம்.

ஆண்டான்—அடிமையை விளக்கும் பூதத்தாழ்வாரின் இன்னொரு பாசுரத்தையும் காண்போம்.

திருமங்கை நின்றருளும் தெய்வம் நாவாழ்த்தும்
கருமம் கடைப்பிடிமின் கண்டீர்—உரிமையால்
ஏத்தினோம் பாதம் இருதடக்கை எந்தைபேர்
நாற்றிசையும் கேட்டீரே நாம்.[3]

'பிராட்டி சம்பந்தத்தால் மேன்மை பெற்ற ஸ்ரீமன் நாராயணன்தான் பரதெய்வம்; அவனை நாவினால் வாழ்த்தும் செயலை உறுதியாகக் கடைப்பிடியுங்கள்' என்கின்றார் ஆழ்வார். இப் பாசுரத்தில் 'உரிமையால்' என்ற தொடர் உயிராயது; அதாவது ஆண்டான்—அடிமை (சேஷி—சேஷத்துவம்) என்ற சம்பந்த முறைமை கொண்டு என்றபடி. இதை இன்னும் தெளிவாக விளக்குவது இன்றியமையாததாகின்றது. எம்பெருமான் பொதுவாக சேதநர்கட்கும் அசேதநப் பொருள்கட்கும் சம்பந்தமுடையவன்; இவை இரண்டும் அவனுக்கு உடலாக உடையவை. அசேதநப் பொருள்கள் அவனுக்காக—அவன் பயனுக்காக இருப்பவை: அறிவையுடைய சேதநர்கட்குச் சிறப்பான முறையில் சுவாமி—அல்லது ஆண்டானாக—இருப்பவன் எம்பெருமான். ஆண்டவனுக்கு அடிமையாக இருக்கும்போது சீவர்கள்—சேதநர்கள்—அசேதநங்களை போலவே அவன் விருப்பப்படி பயன்படுத்திக் கொள்ளப்படுபவர்களாக இருப்பர்; சிறப்பான முறையில் சீவர்கள் அடியவர்களாக இருந்து அடிமைத் தொழில் (கைங்கரியம்)[4] செய்பவர்களாக இருப்பர். வைணவ தத்துவத்தில் இறைவனுக்குச் செய்யும் கைங்கரியமே பரம புருஷார்த்தமாகும்: அதாவது சீவர்கள் அடையத்தக்க உயர்ந்த குறிக்கோளாகும். இந்தக்

3. மேலது. 57.

4. கிங்கரன் - வேலையாள்; கிங்கரன் செய்வது கைங்கரியம்; அதாவது அடிமைத் தொழில்.

கருத்தின் அடிப்படையில் 'கண்ணன்—என் ஆண்டான்' என்ற பாடலை ஆராய்வோம்.

இந்தப் பாடல் கோபாலகிருஷ்ண பாரதியின் 'நந்தனார் கீர்த்தனைகள்'போல் அமைந்துள்ளது. எனினும், இது தனித்தன்மையுடன் திகழ்கின்றது. நம்மாழ்வாருக்கு "உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணன்"[5] ஆக இருந்தான். கிறித்தவப் பெருமக்கள் தம் அன்றாடக் கடவுள் வழிபாட்டில் "கர்த்தனே, எங்கட்கு அன்றாடம் உண்ணக் கூடிய ரொட்டியை அருளுவாய்" என்று வேண்டுவர். இங்கு நம் கவிஞர் இறைவனைத் தன் ஆண்டானாகக் கருதித் தனக்கு அன்றாடத் தேவைக்குரிய பொருள்களை அருளுமாறு வேண்டுகின்றார். அதற்குமுன்னர்,

தஞ்சம் உலகினில் எங்கணு மின்றித்
 தவித்துத் தடுமாறி
பஞ்சப் பறையன் அடிமை புகுந்தேன்
 பாரமுனக் காண்டே
ஆண்டே!—பாரமுனக் காண்டே!

என்று கூறி ஆண்டானிடம் தஞ்சம் அடைகின்றார். 'பறையன்' என்பது ஈண்டுச் சாதியைக் குறிப்பதன்று, இது தாழ்மையுணர்ச்சியைக்—பணிவினைக் (Humility) குறிப்பிடுகின்றது. "துன்பமும் நோயும் மிடிமையும் தீர்த்துச் சுகம் அருளுமாறு" வேண்டுகின்றார். சேரி முழுதும் குதித்துக் குதித்துப், பேரிகை கொட்டித், திசைகள் அதிரக் கண்ணன் புகழ்பாடிக் களித்து மகிழ்வதாகக் கூறுகின்றார். பறையர்களில் தாம் பாக்கியசாலி என்று சொல்லிக் கொள்ளுகின்றார். கவிஞர் கூறுவார் :

5. திருவாய். 6, 7:1

பண்ணைப் பறையர்தங் கூட்டத்தி லேயிவன்
பாக்கிய மோங்கி விட்டான்
கண்ண னடிமை இவனெனுங் கீர்த்தியில்
காதலுற் றிங்கு வந்தேன்
ஆண்டே!—காதலுற் றிங்குவந்தேன்.

அடுத்து, 'கண்ணன்—என் சேவகன்' என்பதில் தான் வீட்டு வேலைகள் அனைத்தையும் செய்வதாகச் சொல்லு வதைப்போல் இங்குக் 'காடு கழனிகள் காலிகள்' வேலைக ளனைத்தையும் செய்வதாகக் கூறுவர். பயிர்த்தொழிலுக் கேற்றவாறு 'மழைக் குறி'யைத் தப்பாமல் சொல்லுந் திறமை பெற்றிருப்பதாகவும், தன் வேலைத் திறமையைப் பார்த்துப் பின்னர் பக்குவம் பகருமாறும் பணிக்கின்றார். தன் அன்றாடத் தேவைகளைப் பட்டியலிட்டுக் காட்டு கின்றார் :

பெண்டு குழந்தைகள் கஞ்சி குடித்துப்
பிழைத்திட வேண்டு மையே!
அண்டை அயலுக்கென் னாலுப காரங்கள்
ஆகிட வேண்டு மையே!
உபகாரங்கள்—ஆகிவிட வேண்டுமையே!

மானத்தைக் காக்கவோர் நாலு முழந்துணி
வாங்கித் தரவேணும்;
தானத்துக் குச்சில வேட்டிகள் வாங்கித்
தரவும் கடனாண்டே!
சிலவேட்டி—தரவுங் கடனாண்டே.

அடுத்து, 'ஒன்பது வாயிற் குடிலினைச் சுற்றி' வரும் பேய்களை—அதாவது புலன்களால் ஏற்படும் தொல்லை களை—அடக்குவதற்கு வேண்டிய மந்திரத்தை வேண்டு வதாகக் கூறுகின்றார். இங்கு அவர் திருமந்திரத்தை— எட்டு எழுத்து மந்திரத்தை—நினைப்பதாகக் கொள்ளு வதில் தவறில்லை.

பேயும் பிசாசும் திருடரு மென்றன்
பெயரினை கேட்டளவில்
வாயும் கையுங்கட்டி அஞ்சி நடக்க
வழிசெய்ய வேண்டுமையே!
தொல்லைதீரும்—வழிசெய்ய வேண்டுமையே!

என்று பாடலை நிறைவு செய்கின்றார். இப்பாடலில் ஆண்டான்—அடிமை (சேஷ—சேஷி பாவம்) என்ற வைணவ சமயக்கருத்து பொதிந்துகிடப்பதைக் கண்டு மகிழலாம். தவிர, இப்பாடலில் 'தொண்டு செயும் அடிமையின்' (Dignity of Labour) பெருமையும் குறிப்பிட்டிருப்பதையும் தெரிந்து தெளியலாம்.

இந்தப்பாடலின் தலைப்பில் "ரசங்கள்: அற்புதம், கருணை" என்ற பாரதியாரின் குறிப்பு உள்ளது. அற்புத ரசத்தை ஏற்கெனவே விளக்கியுள்ளோம்.[6] 'கருணை' ரசத்தை ஈண்டு விளக்குவோம். இதைக் 'கருணம்' என்று சொல்வதுதான் சரி. ஓர் எடுத்துக்காட்டுமூலம் இந்த ரசத்தைப் புலப்படுத்துவோம். நடுக்காட்டில் அலைந்து களைப்புற்று மரத்தடியில் படுத்துக் கண்ணயர்ந்து விடுகின்றாள் பட்டத்து அரசி ஒருத்தி. தன் கணவன் போரில் மாண்டுவிட்டதால் பகைவன் நாட்டைப் பிடித்துக் கொள்ளவே அவளுக்கு இந்த அவல நிலை ஏற்படுகின்றது. தன்னை மறந்து அவள் கண்ணயர்ந்தபொழுது தன்னுடைய காதலனோடு அரண்மனையில் இருக்கும் நினைவு வந்துவிடுகின்றது. கனவு காணத் தொடங்குகின்றாள். பலநாட்கள் அயலூர் சென்றிருந்த தன் கணவன் வந்திருப்பதாகவும். உடனே புறப்பட்டு மறுபடியும் போவதாகவும் கனவில் அவள் காண்கின்றாள்.

---

6. இயல் - 6. இந்நூல் பக்கம் (68—69)

அவன் கழுத்தை இறுகப் பற்றிக்கொண்டு 'போகற்க என்னைத் தனியே விட்டு ஏகுவது அறமன்று. நீ இல்லாமல் யான் படுந் துயரங்கள் எண்ணிலடங்கா. இனி ஒரு நொடிகூட உன்னைப் பிரிந்திரேன்' என்று பிடிவாதம் செய்கின்றாள். அவன் முறுவலித்துத் தான் மேற்கொள்ள விருக்கும் செயலின் அவசரத்தை அவசியத்தை எடுத்துக் கூற முயல்கின்றான். அப்பொழுது காதலி 'முறுவலிக் காதே. உன் முறுவலின் கருத்தை யான் அறிவேன். உன்னை நான் விடவேமாட்டேன்' என்று இறுகக் கட்டி அணைக்கின்றாள். உடனே விழிப்பு ஏற்பட்டுவிடுகின்றது, வெறுங்கையைத் தன் மார்புடன் அணைத்திருப்பதைக் காண்கின்றாள். எல்லாம் 'பொய்யாய்ப் பழங்கதையாய்ப்' போனது தெளிவாகின்றது. மீளாத துன்பததிற்குத் தான் ஆளானதை உணர்கின்றாள்—'ஓ' என்று நடுக்காட்டில் அலறுகின்றாள்.

இங்கே கவிஞன் தோல்வியுற்ற அரசனின் தேவி படுந்துயரங்களை விளக்க அழகிய உத்தியைக் கையாண் டுள்ளான். இங்கு நிலைத்து நிற்கும் மனோபாவம் துக்கமே. நிகழ்ச்சியை விளக்கும் கவிதைகளைப் படித்து அநுபவிக்கும்போது நமது உள்ளம் துக்க உணர்ச்சியால் பூரிக்கத் தொடங்குகின்றது; இப்போது 'கருண ரசம்' பிறக்கின்றது. கருண ரசம் உலகின் அடிப்படையான உண்மை நிலையில் கிடக்கின்றது. ஆன்மாவும் உலகும் பின்னிக் கிடப்பதாக அறிஞர்கள் கூறுவர். ஆன்மாவின் கூறு இன்பமாகவும் உலகின் பங்கு துன்பமாகவும் இருப் பதாக பெரியோர்கள் உணர்த்துவர். துன்பத்தில் இன்பத்தைக் காண்பது உலக வாயிலாக ஆன்மாவை உணர்வதாகும். ஆகவே, கருண ரசத்தைச் சிறந்ததாக்க் குறிப்பிடுவர் அறிஞர்கள். வால்மீகி கிரௌஞ்சப் பறவை கள் இறந்ததைக் கண்டு மனம் துக்கத்தில் ஆழ்ந்து கிடக்

குடக்கும்போது—உள்ளம் பூரித்திருக்கும்போது—கருணம் பிறந்ததாகவும் அப்போதுதான் இராமாயணம் உதய மாயிற்று என்றும் சொல்வதுண்டு. பவபூதி என்ற கவிஞர் உத்தர ராமாயணத்தில் இந்தக் கருண ரஸத்தை நன்கு வளர்த்துக் காட்டியுள்ளார்.

பாரதியின் இந்தக் கவிதையில் உள்ளம் தோயும் போது அற்புதமும் கருணமும் பிறப்பதைக் கண்டு அநுப விக்கலாம்.

# கண்ணம்மா—என் குலதெய்வம்

எல்லாச் சமயங்களுமே இறைவனைச் சரண் அடைதலைப் பேசுகின்றன. வைணவதத்துவம் பிரபத்தி நெறி அல்லது சரணாகதியை முக்தி யடையும் ஒரு நெறியாகவே பேசுகின்றது.

நிகர்இல் அமரர் முனிக்கணங்கள்
    விரும்பும் திருவேங் கடத்தானே
புகல்ஒன்று இல்லா அடியேன்உன்
    அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே.[1]

என்று நம்மாழ்வார் திருவேங்கடமுடையானைச் சரண் அடைகின்றார். பிறிதோர் இடத்தில் இந்த ஆழ்வார்,

சரணமாகும் தனதாள் அடைந்
    தார்க்கு எல்லாம்
மரணமானால் வைகுந்தம்
    கொடுக்கும் பிரான்[2]

என்று சரணம் அடைதலைப்பற்றிப் பேசுகின்றார். எம்பெருமானிடம் அடைக்கலம் புகுந்து விட்டாலும் ஒருவரது பிராரப்த கருமம் தீரும் வரையில் காத்திருக்கத்

1. திருவாய். 6. 10:10
2. மேலது 9. 10:5

தான் வேண்டும் என்ற தத்துவத்தை விளக்குகின்றது இந்தப் பாசுரப் பகுதி.

திருமழிசை பிரான் எம்பெருமான் திருவடியில் அடைக்கலம் புகுகின்றார். புகுந்தவர்,

அடைக்கலம் புகுந்த என்னை
அஞ்சல் என்ன வேண்டுமே[3]

என்று தன்னை நோக்கி 'அஞ்சற்க' என்று திருவாய் மலர வேண்டும் என்று எம்பெருமானை இறைஞ்சுகின்றார். திருமங்கையாழ்வாரும்,

தேன்ஏய் பூம்பொழில்சூழ் திருவேங்
கடமா மலைஎன
ஆனாய்! வந்துஅடைந்தேன் அடியேனை
ஆட்கொண் டருளே.[4]

என்று வேங்கடவாணனை வேண்டுகின்றார். இவரே அரங்கத்து அம்மானை,

ஆழி வண்ணநின் அடியிணை அடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத் தம்மானே,[5]

[ஆழி - கடல்; அணி பொழில் - அழகான சோலை.]

என்று சரண் அடைகின்றார்; இந்தத் திருமொழி ஒன்பது பாசுரங்களும் இங்ஙனம் பல்லவிபோல் சரணாகதி தத்துவத்தையே பேசுகின்றன. திருமங்கையாழ்வார் திருக்குடந்தை ஆரா அமுதனை,

---

3. திருச்சந்த - 92
4. பெரி. திரு. 1. 9:2
5. பெரியாழ். திரு. 5. 8:1

ஆடு அரவு அமளியில் அறிதுயில் அமர்ந்த
பரம! நின் அடிஇணை பணிவண்
வரும் இடர் அகல மாற்றோ வினையே[6]

என்று சரண் அடைகின்றதைக் காண்கின்றோம். நாயன்மார் திருப்பாடல்களிலும் இத் தத்துவம் ஆங்காங்கு பளிச்சிடுகின்றது. மாணிக்கவாசகரின் அடைக்கலப் பத்தும்[7] இந் நெறியையே எடுத்தோதுகின்றது. ஒரு தடவைக் கொன்பது தடவையாக ஒன்பது திருப்பாடல்களும்,

அழுக்கு மனத்தடி யேன்உடை
யாய்!உன் அடைக்கலமே[8]

என்ற பாணியிலேயே அமைந்துள்ளன. கிறித்தவப் பெருமக்களும் கிறித்துவப் பெருமானின் இந் நெறியினை நினைந்து 'அடைக்கலம்', 'அடைக்கலசாமி' என்று தம் குழவிகட்குத் திருநாமம் சூட்டுவதையும் காண்கின்றோம்.

பாரதியார் 'கண்ணம்மா—என் குல தெய்வம்' என்ற தலைப்பிலுள்ள 'கண்ணன் பாட்டில்' இந்த நெறியினையே எடுத்தோதுகின்றார். இங்குக் கண்ணன் பாரதிக்கு மிகவும் பிடித்த அருள் சக்தியாக—கண்ணம்மாவாக—மாறி அவன் இதய கமலத்தில் அமர்கின்றான்.

நின்னைச் சரணடைந்தேன்—கண்ணம்மா!
நின்னைச் சரணடைந்தேன்

என்று பாடல் தொடங்குகின்றது. பொன்னையும் உயர்வையும் புகழையும் 'கொன்றழிக்கும் கவலைகள்' தன்னைத்—தன் ஆன்மாவைத்—தின்னத்தகாதென்று

6. திரு எழுகூற்றிருக்கை—அடி 45 - 48
7. திருவாசகம் - அடைக்கலப்பத்து
8. மேலது. பாடல். 1

கண்ணம்மாவிடம் முறையிடுகின்றார்; அன்னை நிலையிலுள்ள கண்ணம்மாவைக் கற்பனையில் காண்கின்றார்.

மிடிமையும் அச்சமும்
மேவிஎன் நெஞ்சினில்
குடிமை புகுந்தன
கொன்றவை போக்கென்று
நின்னைச் சரணடைந்தேன்
கண்ணம்மா!

என்று கண்ணம்மாவிடம் வேண்டுகோள் விடுக்கின்றார்.

அரிசினத்தால் ஈன்றதாய்
அகற்றிடினும் மற்றுஅவள்தன்
அருள்நினைந்தே அழுங்குழவி.[9]

யாக இருந்து கொண்டு முறையிடுகின்றார்.

நல்லது தீயது
நாமறியோம் அன்னை!
நல்லது நாட்டுக!
தீமையை ஓட்டுக!
நின்னைச் சரணடைந்தேன்
கண்ணம்மா!

என்று இப்பாடல் முடிவடைகின்றது. இந்த அடிகள் பெரியாழ்வாரின்,

நன்மை தீமைகள் ஒன்றும் அறியேன்
நாரணா என்னும் இத்தனை அல்லால்[10]

என்ற அடியை நினைவுகூரச் செய்கின்றன. பெரியாழ்வாரின் இக் கருத்துதான் பாரதியாரின் பாடற் போக்

---

9. பெரு. திரு. 5:1
10. பெரியாழ். திரு. 5. 1:3

கிற்கு வழியமைத்துத் தந்ததோ என்று கூடக் கருதத் தோன்றுகின்றது.

'சுதந்திரப் பள்ளு'[11] பாடும்போதுகூட 'கைங்கரிய ருசி' தலையெடுக்கின்றது.

பூமியில் எவர்க்கும் இனி
அடிமை செய்வோம்—பரி
பூரணனுக் கேயடிமை
செய்து வாழ்வோம்.

என்று கூறுவதில் 'பரிபூரணன்' என்ற தொடர். 'கண்ணனையே' குறிக்கின்றது. பிறிதோரி இடத்தில்[12]

"எல்லா உயிர்களிலும் நானே இருக்கின்றேன்"
என்றுரைத்தான் கண்ண பெருமான்;
எல்லாரும் அமரநிலையை எய்தும்நன் முறையை,

இந்தியா உலகிற் களிக்கும்—ஆம்
இந்தியா உலகிற் களிக்கும்—ஆம்ஆம்
இந்தியா உலகிற் களிக்கும்.

என்று கீதையின் பெருமையை எடுத்துக் காட்டிக் கீதாசாரியனின் புகழ் பாடுகின்றார்.

'ஆறுதுணை'[13] என்ற பாடலின்,

பாம்புத் தலைமேலே—நடஞ்செயும்
பாதத்தினைப் புகழ்வோம்
மாம்பழ வாயினிலே—குழலிசை
வண்மை புகழ்ந்திடுவோம்

என்று கண்ணனைத் தனக்குத் துணை புரியும் தெய்வமாகக் கருதுகின்றார்.

---

11. தேசிய கீதங்கள்—31 சுதந்திரப் பள்ளு
12. ” —17 பாரத சமுதாயம்
13. தோ. பா.—1. ஆறு துணை

எம்பெருமானைச் சரணம் அடையும்போது சேதநன் இலக்குமியைப்—பெரிய பிராட்டியாரைப்—புருஷகாரமாக பற்றவேண்டும் என்பது வைணவ தத்துவம். இதனால் பெரிய பிராட்டியார் புருஷகார பூதை[14] என்று வழங்கப்படுகின்றார். சேதநன் பல தீங்குகளைப் புரிந்தவன்; ஆகவே, அவன் இறைவனால் தண்டிக்கப்பட வேண்டியவன். ஆனால் அவன் தன்னைக் காப்பாற்றுமாறு இறைவனை நாடி வருகின்றான். பிராட்டியார் அவனைக் காப்பாற்றுமாறு பரிந்துரைக்கின்றார். இறைவனை நாடாது தன்னிச்சைப்படி செயற்படும் சேதநனைச் சாத்திர முறைப்படி தண்டிக்குமாறும், எம்பெருமானை நாடிவந்தவனை இரட்சிக்குமாறும் பரிந்துரைக்கின்றார். அப்பொழுது தான் சாத்திரமும் எம்பெருமானின் அருட்குணமும் நிலைபெறும் என்கின்றார். இங்ஙனம் பல இனிய சொற்களால் எம்பெருமானின் சினத்தை மாற்றி அவனுக்குச் சேதநனிடம் அருள் பிறக்குமாறு செய்பவர் பிராட்டியார். இவ்வினிய சொற்களாலும் ஈசுவரனது நெஞ்சு இளகவில்லையேல் பிராட்டியார் தம் அழகைக் காட்டி அவனைத் தம் வசப்படுத்திச் சேதநனை ஏற்றுக் கொள்ளுமாறு செய்வர். எனவே, சேதநனுக்குப் பிராட்டியாரின் புருஷகாரம் தேவைப்படுகின்றது. இதனைப் பிள்ளை உலக ஆசிரியர்,

> சேதநனை அருளாலே திருத்தும்
> ஈசுவரனை அழகாலே திருத்தும்[15]

என்று விளக்குவர், இதனால் ஈசுவரனும் பிராட்டியாருக்காகவே சேதநனின் குற்றங்களைப் பொறுக்கின்றான். இது வைணவ தத்துவம்.

---

14. புருஷகாரபூதை—தகவுரை கூறுபவள்
15. ஸ்ரீ வசன பூஷணம்—14 (புருடோத்தம நாயுடு பதிப்பு)

பாரதியார் இந்தத் தத்துவத்தை அறிந்தவர் என்று கருதுவதில் தவறில்லை. இலக்குமிபற்றி வரும் பாடல்கள் யாவும் இந்தக் கருத்தின் அடிப்படையில்தான் ஆக்கி இருக்கவேண்டும். 'திருமகளைச் சரண்புகுதல்'[16] என்ற தலைப்பிலுள்ள பாடலில்,

மாதவன் சக்தியினைச்—செய்ய
மலர்வளர் மணியினை வாழ்த்திடுவோம்
..............................
வாதனை பொறுக்க வில்லை—அன்னை
மாமகள் அடியிணைச் சரண் புகுவோம்

என்ற பகுதியில் இக்கருத்தினைக் காணலாம். 'மாதவன் சக்தி' என்பது எம்பெருமானின் அருட்குணம். அதனைச் சரியாகச் செயற்படச் செய்வது, பிராட்டியாரின் புருஷகாரம் என்பது தெளிவாகின்றதல்லவா?

கண்ணனைக் குலதெய்வமாகக் கொண்ட பாரதியின் எண்ணத்தை இன்னொரு பாடலிலும் காணலாம். 'வருவாய் கண்ணா'[17] என்ற தலைப்பில் காணப்பெறும் இசைப் பாடலொன்றில்,

வருவாய் வருவாய் வருவாய்—கண்ணா
வருவாய் வருவாய் வருவாய்

என்று 'பல்லவி' தொடங்குகின்றது, அடுத்து 'சரணங்களில்',

உருவாய் அறிவில் ஒளிர்வாய்—கண்ணா!
உயிரின் அமுதாய்ப் பொழிவாய்—கண்ணா!
கருவாய் என்னுள் வளர்வாய்—கண்ணா!
கமலத் திருவோ டிணைவாய்—கண்ணா (வருவாய்)

இந்தப் பாடற்பகுதி பூத்தாழ்வாரின்,

---

16. தோ. பா.—19. காண்க.
17. மேலது - 46.

கருக்கோட்டி யுள்கிடந்து
கைதொழுதேன் கண்டேன்
திருக்கோட்டி எந்தை
திறம்[18]

[கருக்கோட்டி - கருவறை]

என்ற பாசுரப் பகுதியையும், திருமழிசையாழ்வாரின்,

என்றும் மறந்தறியேன்
என் நெஞ்சத் தேவைத்து
நின்றும் இருந்தும்
நெடுமாலை—என்றும்
திருஇருந்த மார்பன்
சிரீதரனுக்கு ஆளாய்
கருவிருந்த நாள்முதலாக்
காப்பு.[19]

[ஆள் - அடிமை]

என்ற பாசுரப் பகுதியையும் ஒருபுடை யொக்கும். தாம் கருவில் கிடந்த நாள்தொட்டு எம்பெருமான் ஒரு காரணமும் பற்றாது தம்மை ஆட்கொண்டதாகப் பேசுகின்றார் பூதத்தாழ்வார். தாம் கருவறையில் வாழத் தொடங்கிய நாள்முதல் எம்பெருமான் தம்மைக் காத்து வருவதாகக் கூறுகின்றார் திருமழிசையாழ்வார். தாம் கருவாய் இருந்து கண்ணனும் தம்முடன் அந்தர் யாமியாய் இருந்து வளர்வதைக் குறிப்பிடுகின்றார் பாரதியார்.

வைணவ தத்துவப்படி எம்பெருமான் உடலிலும் உள்ளான், உயிரிலும் உள்ளான்.

18. இரண். திருவந். 87
19. நான். திருவந். 92

அடியோன் உள்ளான்
உடல் உள்ளான்[20]
[அடியேன், இங்கு ஆன்மா]

என்பது நம்மாழ்வாரின் உயிரனைய பாசுரப்பகுதி. இத்தகைய எம்பெருமானை,

உணர்வின் உள்ளே
இருத்தினேன்
அதுவும் அவனது
இன்னருளே.[21]

என்கின்றார் ஆழ்வார். 'உணர்வின் உள்ளே இருத்தினேன் என்பதற்கு 'அவனை என்னுடைய ஞானத்திற்கு விஷய மாக்கினேன்' என்று பொருள் கொள்வர் உரையாசிரியர் கள். 'அதுவும் அவனது இன்னருளே' என்ற தொடர் "அவனருளாலே அவன்தாள் வணங்கி'[22] என்ற மணிவாசகப் பெருமானின் திருவாக்கை நினைவுகூரச் செய்கின்றது. அந்தர்யாமியாய் உள்ள எம்பெருமான் நம் இதயத்தாமரையின்மீது பெரிய பிராட்டியாரோடு கட்டைவிரலளவாய் (அங்குஷ்ட ப்ரமாணமாய்) எழுந் தருளியிருப்பான் என்று பிள்ளை உலக ஆசிரியரின் 'தத்துவத் திரயம்' என்ற நூல்[23] குறிப்பிடும். இதனைத் தான் பாரதியாரும் மேற்குறிப்பிட்ட இசைப்பாடலில்,

இணைவாய் எனதா வியிலே—கண்ணா
இதயந் தனிலே யமர்வாய்—கண்ணா

என்று குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். 'இணைவாய் என தாவியிலே' என்ற அடி 'அடியேன் உள்ளான்' என்ற

20. திருவாய் 8. 8 : 2
21. மேலது 8. 8 : 3
22. திருவா. சிவபுரா. அடி. 17
23. ஈசுவரப் பிரகரணம் - 58.

நம்மாழ்வார் கருத்தையும், 'இதயந்தனிலே அமர்வாய்' என்ற அடி தத்துவத் திரயத்தின் கருத்தையும் ஒருபுடை ஒத்திருப்பதாகக் கொள்ளின் வாதத்திற்கு இடம் இல்லை. இதையே இன்னோர் இசைப்பாடலில்,[24]

பீடத்தி லேறிக் கொண்டாள்—மனப்
பீடத்தி லேறிக் கொண்டாள்

என்று பல்லவியாகத் தொடங்குகின்றார். கண்ணனைக் கண்ணம்மாவாக்கித் தம் இதயத் தாமரையில் ஏற்றி மகிழ்கின்றார் கவிஞர். எல்லாக் கடவுளர்களையும் தாம் குலதெய்வமாக வணங்கும் 'பராசக்தி' யாக்கிவிடும் அற்புதத் திறன் படைத்தவர் நம் கவிஞர் கோமான். இதே இசைப்பாடலில்,

கண்ணன் திருமார்பில்
கலந்த கமலை என்கோ?
[கமலை - இலக்குமி]

என்றும் பேசுகின்றார்,

பாரதியார் சில சமயங்களில் ஒருவித சமரசத்தைக் காண்பவராயினும், அவரது குல தெய்வமாக இருப்பது 'சக்தி' தேவதையே. அவரது பாடல்களை ஊன்றிப் படித்தால் அவர் ஒரு 'சக்தி வழிபாட்டாளர்' என்பது தெளிவாகும். இதனால் அவர் கண்ணனைக் 'கண்ணம்மா' வாக்கி அந்தக் கண்ணம்மாவைக் குலதெய்வமாக்கினார் என்று கருதுவதில் உண்மை இல்லாமல் இல்லை.

ஆதிப் பரம்பொருளின் ஊக்கம்—அதை
அன்னை எனப்பணிதல் ஆக்கம்;
சூதில்லை காணுமிந்த நாட்டீர்!—மற்றத்
தொல்லை மதங்கள் செய்யுந் தூக்கம்[25]

---

24. தோ. பா.—54 மனப்பீடம்.
25. மேலது-23. சக்திவிளக்கம்

என்ற பாடற்பகுதியையே இதற்குச் சான்றாகக் கொள்ளலாம்.

மூர்த்திகள் மூன்று, பொருள் ஒன்று;—அந்த
மூலப்பொருள் ஒளியின் குன்று;
நேரத் திகழும் அந்த ஒளியை—எந்த
நேரமும் போற்று சக்தி என்று.[26]

என்று நாட்டுமக்களை ஆற்றுப்படுத்தும் பகுதி இக்கருத்தினை மேலும் அரண்செய்கின்றது. சக்திபற்றிய பாடல்களனைத்தையும் ஆழ்ந்து நோக்கினால் இக் கருத்து மேலும் வலியுறும்; உறுதிப்படும்.

26. மேலது - மேலது.

# கண்ணனைப்பற்றிய தனிப்பாடல்கள்

நம்முடைய பாரத நாட்டின் குல தெய்வமாகிவிட்ட கண்ணனுக்குப் பாமாலை சூட்டாத கவிஞர்கள் அரியர். ஆயினும், இந்தத் தெய்வத்தைப் பாரத நாடு நெடு நாட்களாக மறந்திருந்தது; எப்படியோ திடீரென்று விழித்துக் கொண்டது. இதன் எதிரில் கீதையை உபதேசித்துப் பார்த்தனுடைய தேரை வெற்றிபெற ஓட்டிய கண்ணபிரானின் உருவமே தோன்றியது. 'பார்த்தசாரதி'[1] என்ற திருநாமத்தில் சௌலப்பிய குணம் நிறைந்து நிற்கின்றதல்லவா? இந்த எளிய தன்மையைக் கொண்ட உருவம் பாரதியின் இதயத்திலும் எழுந்து இவருடைய கவிதைகட்கெல்லாம் ஓர் உயிரோட்டத்தைத்—ஒரு வித சோபையைத்—தந்துள்ளது.

இப் பாட்டில் தேரும் தேர்ப்பாகனும் குறியீடுகளாக அமைகின்றன. எம்பெருமான் சேதநனை உய்விக்க மேற்கொள்ளும் வழிகள் விளங்காப் புதிர்களாகவே உள்ளன. அவன் சீவகோடிகள் யாவும் கைப்பாவைகளே. பாடலில் குறிப்பிடப்பெற்றுள்ள பார்த்தன் பிரபத்தி நெறிக்குக்—சரணாகதித் தத்துவத்திற்குக் குறியீடாக

1. தோ. பா.—15 ஆரிய தரிசனம்

உள்ளான். கீதை தரும் செய்தியும் இதுவேயாகும். மேலும் பார்த்தனுடைய தேரில் தலைவனான கண்ணன் முன்பும், பார்த்தன் பின்பும் வீற்றிருப்பது போல, பிரணவத்தில்—'ஓம்' என்ற மொழியில்[2]—பகவானைக் கூறும் 'அகாரம்' முன்பும் அடியவனான சீவனைக் கூறும் 'மகாரம்' பின்பும் இருப்பதால், பிரணவதிற்கு பார்த்தன் தேரை ஒப்பிடுவது முன்னோர் வழக்காகும்.

கண்ணனைப்பற்றிக் 'கண்ணன் பாட்டு' என்ற தலைப்பில் காணப்படும் இருபத்து மூன்று பாடல்களைத் தவிர, 'தோத்திரப் பாடல்கள்', 'வேதாந்தப் பாடல்கள்' என்ற பிரிவுகளில் பல்வேறு தலைப்புகளில் பதிநான்கு பாடல்கள் காணப்படுகின்றன. பல இயல்களிலும் சில பாடல்களைக் குறிப்பிட்டுள்ளேன்; எஞ்சியவற்றை ஈண்டுக் காட்டுவேன். 'ஆரியதரிசனம்'[3] என்ற தலைப்பில் காணப்பெறும் ஒரு பாடலில், 'பார்த்தன் செல்வத் தேர்ஏறு சாரதியாய்' நின்ற காட்சி காட்டப்பெறுகின்றது. இந்தப் பாடல், கனவாகப் பாரதியிடம் முகிழ்த்தது. கனவில் ஒரு கானகம்; அடர் கானகம். வான்முகட்டில் மதியொளி தென்படுகின்றது. அந்தக் கானகத்தில் ஒரு குன்றம்; அதைச் சுற்றிலும் சுனைகளும் பொய்கைகளும் நிறைந்துள்ளன. அந்தக் குன்றத்தின்மீது பார்த்தன் வீற்றிருந்த தேர் தென்படுகின்றது. பார்த்தசாரதி தேரின் முன்பக்கம் காணப்படுகின்றான். அவன் சீரினைக் கண்டு திகைத்து நிற்கின்றார் கவிஞர். அவனுடைய எழில் கொழிக்கும் திரு உருவமும் அருள் பொங்கு விழியும் கையில் இலங்கும் சுதர்சனம் என்னும் திகிரியும் கவிஞரின் கண்ணையும் கருத்தை

2. 'ஓம்' என்பது அ, உ, ம என்ற மூன்றெழுத்துகள் கொண்டது.

3. தோ. பா.—15 ஆரிய தரிசனம்

யும் கவர்கின்றன. களிப்பை அவரிடம் எழச்செய்கின்றன. அந்த எக்களிப்பில் 'கிருஷ்ணார்ச்சுன தரிசனம்' அற்புத மான இசைப்பாடல் வடிவம் கொள்ளுகின்றது.

கண்ணனைக் கண்டேன்—எங்கள்
கண்ணனைக் கண்டேன்—மணி
வண்ணனை ஞான மலையினைக் கண்டேன்
கனவென்ன கனவே

என்கின்றார். போர்க்களத்தைக் காண்கின்றார். தேர் களும் யானைகளும், பரிகளும் வீரர்களும் அணி வகுத்து நிற்பதைக் காண்கின்றார். கண்ணன் நேரில் ஓர் இளைஞன் காணப்படுகின்றான்.

கண்ணனற் றேரில்—நீலக்
கண்ணனற் றேரில்—மிக
எண்ணயர்ந் தானோர் இளைஞனைக் கண்டேன்
கனவென்ன கனவே.

என்று பாடுகின்றார். அந்த இளைஞனின் தோற்றத்தை,

வீரிய வடிவம்!—என்ன
வீரிய வடிவம்!—இந்த
ஆரியன் நெஞ்சம் அயர்ந்ததென்விந்தை!
விசயன்கொல் இவனே!

என்று காட்டுகின்றார். பார்த்தன் சோகமுற்ற நிலையில் பேசுகின்றான் :

'வெற்றியை வேண்டேன்;—ஐய,
வெற்றியை வேண்டேன்;—உயிர்
அற்றிடு மேனும் அவர்தமைத் தீண்டேன்
பெற்றதென் பேறே.''

சுற்றங் கொல்வேனோ?—என்றன்
சுற்றங் கொல்வேனோ?—கிளை
அற்றபின் செய்யும் அரசுமோ ரரசோ?
பெற்றதென் பேறே''

இங்ஙனம் மாயையின் வசப்பட்ட வெஞ்சிலை வீரன் பேசுவதைக்கேட்ட பார்த்தசாரதி "செம்மலர் வதனத்தில் சிறுநகை பூத்தான்." பார்த்தனைச் செயற்படுத்துகின்றான் :

வில்லினை எடடா—கையில்
வில்லினை எடடா—அந்தப்
புல்லியர் கூட்டத்தைப் பூழ்திசெய் திடடா
வில்லினை எடடா.

என்று ஆணையிடுகின்றான்.

வாடி நில்லாதே;—மனம்
வாடி நில்லாதே;—வெறும்
பேடியர் ஞானப் பிதற்றல்சொல் லாதே
வில்லினை எடடா.

என்று உற்சாகம் ஊட்டுகின்றான். "பார்த்தா, இப்போது உன்னிடம் தோன்றியுள்ளது விபரீத ஞானம். அதன் காரணமாகவே, நித்தியமான ஆன்மாவுக்கு யாதொரு தொடர்பும் படாமல் அநித்தியமாகிய உடலைப்பற்றிய தாய் முதலியோரிடத்துச் சுற்றத்தவர் என்ற பொய் அன்பு உன்னிடம் நிலைபெற்று நிற்கின்றது. கடைப்பூதங் களான நிலம், நீர், காற்று, வானம் என்பனவற்றினுள்ளே மனிதன் புகுந்து அவற்றைக் கொண்டு பல்வேறு தொழில் களை நடத்துவதைப் போலவே, இறைவனும் உயிருள்ள பொருள்களினிடத்தும், அந்தர யாமியாகத் தங்கியிருந்து தொழில் நடத்துகின்றான் என்பதைத் தெளிவாயாக.

என்னை நீ புகலக் கேண்மோ
'எங்குமாய் யாவும் ஆகி
மன்னிய பொருளும் யானே;
மறைக்கெலாம் முடிவும் யானே' (வில்லிபாரதம்)

என்ற உண்மையையும் உணர்வாயாக," என்று கூறுகின்றான். மேலும், விளக்கம் அடைவதற்குத் தன் நிலையை "விசுவரூபமாக"க் காட்டுகின்றான். சீவான்மாவுக்கும் பரமான்மாவுக்கும் உள்ள தொடர்பை விளக்குகின்றான். "தர்மங்களையெல்லாம் அறவே ஒதுக்கித் தள்ளிவிட்டு என்னைச் சரணடைக; பாவங்கள் அனைத்தினின்றும் உன்னை நான் விடுவிப்பேன். வருந்தாதே"[4] என்பது கீதோபதேசம். பாரதியார் இதனை,

செய்தலுன் கடனே—அறம்
செய்தலுன் கடனே—அதில்
எய்துறும் விளைவினில் எண்ணம்வைக் காதே.

என்று பேசுகின்றார். அந்நிய ஆட்சியில் அடிமைப்பட்டுக் கிடக்கும் இந்திய மக்களைக் கிளர்ந்தெழுந்து சுதந்திரப் போரில் குதிக்குமாறு கவிஞரின் அறைகூவலே இது என்று இதனைக் கருதலாம். அன்றாடம் வாழ்வே சதம் என்று கருதி மயங்கி நிற்கும் மக்களுக்குப் புதிய வாழ்வில் புகுவதற்கு மக்கள் யாவரும் சுதந்திரப் போரில் பங்குபெற வேண்டும் என்பதே பாரதியின் கீதோபதேசம்.

'கண்ணனை வேண்டுதல்'[5] என்ற ஒரு பாடலிலும் நாட்டு நலனைக் கருத்தில் கொண்டுதான் கீதாசாரியனை வழிபடுகின்றார் கவிஞர்.

எங்க ளாரிய பூமியெ னும்பயிர்
மங்க ளம்பெற நித்தலும் வாழ்விக்கும்
துங்க முற்ற துணைமுகி லே! மலர்ச்
செங்க ணாய்நின் பதமலர் சிந்திப்பாம்.

இதனைத் தொடர்ந்து வரும் பாடல்களில் நாட்டு நலனையே திரும்பத் திரும்ப வேண்டுவதைக் காணலாம்.

---

4. பகவத் கீதை 18 : 66.
5. தோ. பா.—45

வீரர் தெய்வதம் கர்ம விளக்குநற்
பார தர்செய் தவத்தின் பயனெனும்
தார விர்ந்த தடம்புயப் பார்த்தனோர்
கார ணம்மெனக் கொண்டு கடவுள்நீ

நின்னை நம்பி நிலத்திடை யென்றுமே
மன்னு பாரத மாண்குலம் யாவிற்கும்
உன்னுங் காலை உயர்துணை யாகவே
சொன்ன சொல்லை உயிரிடைச் சூடுவாம்

ஐய கேளினி யோர்சொல் அடியர்யாம்
உய்ய நின்மொழி பற்றி யொழுகியே
மைய ரும்புகழ் வாழ்க்கை பெறற்கெனச்
செய்யும் செய்கையின் நின்னருள் சேர்ப்பையால்

[நின்மொழி - கீதை]

என்ற பாடல்களில் இதனைக் கண்டு மகிழலாம்.

கண்ணனுக்குக் 'கோவிந்தன்' என்ற ஒரு திருநாமமும் உண்டல்லவா? கோவர்த்தனம் என்ற மலையைத் தூக்கிக் கல்மாரியைத் தடுத்துக் கோக்களை காத்தபோது இந்திரன் சூட்டிய பெயர் இது. எனவே, கோவிந்தன் பாட்டு[6] என்ற பாடலும் கண்ணனைப்பற்றியதாகவே கொள்ளல் ஏற்புடைத்து. இப்பாடலில் கோவிந்தனைச் 'சராசரத்து நாதா' என்று விளிக்கின்றார். 'சர்வம் விஷ்ணுமயம் ஜகத்' என்று மக்களிடையே வழங்கும் சொற்றொடர்தான் இங்ஙனம் விளிக்கத் தூண்டுகின்றது என்று கருதலாம். கோவிந்தனிடம் வேண்டுவனவற்றைப் பாடலில் காண்போம்.

எளியனேன் 'யான்' எனலை எப்போது
போக்கிடுவாய்? இறைவ னேஇவ்
வளியிலே பறவையிலே மரத்தினிலே
முகிலினிலேவரம்பில் வான

6. மேலது.—44

வெளியிலே, கடலிடையே மண்ணகத்தே
வீதியிலே வீட்டி லெல்லாம்
களியிலே, கோவிந்தா! நினைக்கண்டு
நின்னொடுநான் கலப்ப தென்றோ?

என்கண்ணை மறந்துனிரு கண்களையே
என்னகத்தில் இசைத்துக் கொண்டு
நின்கண்ணாற் புவியெல்லாம் நீயெனவே
நான்கண்டு நிறைவு கொண்டு
வன்கண்மை மறதியுடன் சோம்பர்முதல்
பாவமெலாம் மடிந்து, நெஞ்சிற்
புன்கண்போய் வாழந்திடவே, கோவிந்தா!
எனக்குமுதம் புகட்டு வாயே.

இங்கும் கண்ணனை 'விசுவரூப தரிசனமாகவே, கண்டு களிப்பதைக் காணலாம்.

பாரதியின் 'பாஞ்சாலி சபதத்திலும்' திருதராட்டிரன் வாய்மொழியாகக் கண்ணனைப்பற்றிக் கவிஞர் பேசுகின்றார்.

"ஆதில் பரம்பொருள் நாரணன்;—தெளி
வாகிய பாற்கடல் மீதிலே—நல்ல
சோதில் பணாமுடி யாயிரம்—கொண்ட
தொல்லறி வென்னுமோர்' பாம்பின்மேல்
—ஒரு
போதத் துயில்கொளும் நாயகன்—கலை
போந்து புவிமிசைத் தோன்றினான்
சீதக் குவளை விழியினான்"—என்று
செப்புவர் உண்மை தெளிந்தவர்[7]

உண்மை தெளிந்தவரில் நம் கவிஞர் என்பதற்கு என்ன தடை? அடுத்து,

---

7. பாஞ்சாலி சபதம்—81.

—'ஒரு
பேயினை வேதம் உணர்த்தல்போல்,—கண்ணன்
பெற்றி உனக்கெவர் பேசுவார்?'

என்று கூறுவதும் நம்மைச் சிந்திக்க வைக்கின்றது. ஞானியர் உணர்ந்த உண்மையை ஒரு பேயினுக்கு எங்ஙனம் உணர்த்தல் முடியும்?

நந்தலாலா : கரிய நிறத்தையேனும் நீல நிறத்தையேனும் காணும்போதெல்லாம் ஆழ்வார்கள் எம்பெருமான் கண்ணனைக் கண்டதாகவே மயங்குவர். அவ்வளவு அன்பு ஆழ்வார்கட்கு அத்திருமேனியில் நம்மாழ்வார் பேசுகின்றார் :

பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற
காவி மலரென்றும் காண்டோறும்—பாவியேன்
மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும் அவ்வவை
எல்லாம் பிரான்உருவே என்று.[8]

[பூவை - ஒருவகைப் பூ; காயா - ஒருவகைப் பூ; நீலம் - செங்கழு நீர்ப் பூ; மெல் ஆவி - மிருதுவான உயிர்.]

"பூவைப் பூ, காயாம் பூ, நீலோற்பலம், கருநீர்ப் பூ என்னுமிவற்றை நான் காண்கின்ற பொழுதெல்லாம் எம்பெருமான் உருவைக் கண்டதாகவே நினைத்து ஆவியும் உடலும் பூரிக்கப் பெறுகின்றேன்" என்கின்றார் ஆழ்வார். இன்னொரு பாசுரத்தில்[9] மேகம், மலை, கடல், செறிந்த இருள், பூவைப் பூ, மற்றும் கருநெய்தல், குயில், மயில், கருவிளை, களங்கனி இவற்றைக் காணும்போதெல்லாம்

8. பெரி. திருவந். 73
9. மேலது - 49.

கண்ணபிரானை நேரில் காண்பது போன்ற அநுபவம் ஏற்படுவதாகக் கூறுகின்றார் ஆழ்வார். ஆண்டாளும்,

பைம்பொழில்வாழ் குயில்காள்!
மயில்காள்! ஒண் கருவிளைகாள்!
வம்பக் களங்கனிகாள்!
வண்ணப்பூவை நறுமலர்காள்!
ஐம்பெரும் பாதகர்காள்!
அணிமாலிருஞ் சோலைநின்ற
எம்பெருமா னுடையநிறம்
உங்களுக்கு என்செய்வதே.[10]

[என் செய்வது - ஏதுக்கு]

குயில், மயில், கருவிளை, களங்கனி, காயாம்பூ என்னும் இவை ஐந்தையும் ஐம்பெரும் பாதகர்கள் என்று பழிக்கின்றாள். அவை எம்பெருமானுடைய நிறத்தைக் கொண்டு தன்னைத் தீங்கு செய்வதாகக் கருதுகின்றாள்; தனக்குத் தீங்கு விளைவிப்பதற்காக அவை எம்பெருமானின் நிறத்தை ஏறிட்டுக் கொண்டன என்பது அவள் நினைப்பு. இவற்றை யெல்லாம் நினைந்து 'நந்தலாலா' என்ற பாடலில் பாரதியார்,

காக்கைச் சிறகினிலே
நந்தலாலா—நின்றன்
கரிய நிறம் தோன்றுதையே
நந்தலாலா;

பார்க்கு மரங்களெல்லாம்
நந்தலாலா—நின்றன்
பச்சைநிறம் தோன்றுதையே
நந்தலாலா[11]

---

10. நாச். திரு. 9 : 4
11. வேதாந்தப் பாடல்கள்—11. நந்தலாலா.

என்று கூறுவதாகக் கருதலாம். நந்தகுமரனைக் கவிஞர் 'நந்தலாலா' என்று விளிக்கின்றார், கவிஞர் இந்திப் பகுதி யான காசியில் வாழ்ந்ததால் இந்தி மொழியின் தாக்கம் கண்ணனுக்கு இத் திருநாமமிடச் செய்துவிட்டதுபோலும்! அடுத்து, தான் கேட்கும் ஒலிகள் யாவும் கண்ணனின் புல்லாங்குழலின் இனிய ஓசையை நினைவூட்டுவதாகச் செப்புகின்றார்.

பராங்குச நாயகியின்[12] நிலையைக் கூறும் திருத் தாயார்,

அறியும் செந்தீயைத் தழுவி
அச்சுதன் என்னும்;[13]

[அறியும் - சுடும் என்று அறியப்பட்ட]

என்று பேசுகின்றாள். தன் மகள் செவ்விய தீயைக் காணும்போது அதனை அச்சுதனாகவே கருதி அதனைத் தழுவுவதாகக் கூறுகின்றாள். இங்ஙனம் இத் திருவாய் மொழியில் தன் மகள் உறவு கொள்ளும் பல பொருள் களைப் பட்டியலிட்டுக் காட்டுகின்றாள். பாரதியாரும் இவ்வநுபவத்தைப் பெற்று,

தீக்குள் விரலை வைத்தால்
நந்தலாலா—நின்னைத்
தீண்டும்இன்பம் தோன்றுதடா
நந்தலாலா

என்று பேசுகின்றார். பெரியாழ்வார் பாசுரங்கள் மட்டுமே யன்றி நாலாயிரத் திவ்வியப் பிரபந்தப் பாசுரங்கள் யாவும் பாரதியின் பாடல்களில் நிழலிடுவதைக் காணமுடிகின்றது.

12. நம்மாழ்வாருக்குப் 'பராங்குசர்' என்ற திருநாம முண்டு. நாயகி நிலையை ஏறிட்டுககொண்டு பேசும்போது பராங்குச நாயகி ஆகின்றார்.

13. திருவாய். 4. 4 : 3

கண்ணன் திருவடி : எம்பெருமானின் திருவடி பெருமையை முமுட்சுப்படி இவ்வாறு பேசும் :

> 'பிராட்டியும் அவனும் விடினும்
> திருவடிகள் விடாது, திண்கழலா
> யிருக்கும்'[14]

தன்னைப் பற்றினாரை, புருஷகாரப் பொருளான[15] பிராட்டியாரும் உபாயப் பொருளான எம்பெருமானும் கைவிடினும் பகவானுடைய திருவடிகள் என்றும் விடா; அவை மிக்க உறுதியுடையனவாகும். எம்பெருமானின் திருவடிகள் அவனை விடவும் புருஷகார பூதையான பிராட்டியாரைவிடவும் சிறந்தனவாகும். இதன் விளக்கம் ஈண்டுத் தேவைப்படுகின்றது.

பிராட்டியார் சேதநனுடைய துன்ப நிலையைக் கண்டு மனமிரங்கி அவனை ஏற்றுக்கொள்ளுமாறு புருஷ காரம் செய்கின்றார். இத்தகைய பண்புடைய அவர் இவனுடைய குற்றங்களை எடுத்துரைக்க மாட்டார் என்பது உண்மை ஆயினும், ஈசுவரன் மனத்தில் இவனை ஏற்றுக்கொள்ளும் எண்ணத்தை ஊன்றுவிப்பதற்காக ஒரு கால் சில குற்றங்களை உரைக்கக்கூடும்; இங்ஙனம் குற்றம் உரைக்கும் முறையில் பிராட்டியார் இவனைக் கைவிட்ட வராகின்றார். இந்தச் சேதநனிடம் ஊன்றிய அன்பு கொண்ட பகவான், தனக்குள்ள வாத்சல்யம் முதலிய குணங்களால்,

> என் அடியார் அது செய்தார்
> செய்தாரேல் நன்று செய்தார்.[16]

---

14. முமுட்சுப்படி—146.

15. புருஷகாரம் - தகவுரை; புருஷகார பூதை—தகவுரை கூறுபவள்

16. பெரியா. திரு. 4. 9 : 2 (உரை கண்டு தெளிக).

என அவனை ஏற்றுக்கொள்ள முன் வந்து நிற்பன். இத் தகைய எம்பெருமானும் சில சமயம் கைவிடுவதுண்டு. இம் முறையில் சேதநனுக்கு நன்மை புரிபவராகிய இவ் விருவரும் கைவிடினும், தம் அழகினால் சேதநனை அப்புறம் செல்லாதவாறு அகப்படுத்திக் கொள்ளும் அவன் திருவடிகளோ, சேதநனை விடாது பற்றிக்கொள்ளும் திண்மை வாய்ந்தனவாக இருக்கும். இதனை மனத்திற் கொண்டே நம்மாழ்வார்,

> வண்புகழ் நாரணன்
> திண்கழல் சேரே.[17]

என்று திருவாய் மலர்ந்தருளினார். சேஷ பூதனுடைய சொரூபத்தை நோக்கினும் அவன் இறங்கும் துறை பகவா னுடைய திருவடிளே யாகும்.[18]

பெரியார்கள் திருநாட்டுக்கெழுந்தருளும் இறுதிக் காலத்தில் தமக்கு மிகவும் வேண்டிய உள்ளன்பர்கட்கு அருமையான சில உபதேசங்களைச் சொல்லிப்போவ துண்டு. இதனைச் 'சரம சந்தேசம்' என்று வழங்குவர். எம்பெருமான் நம்மாழ்வாரைத் திருநாட்டிற்குக் கொண்டு போக விரைகின்றான்; ஆழ்வாரும் தமக்கு இனி அடைய வேண்டிய பொருள் தப்பாது என்று துணிவு கொள்ளு கின்றார். இவர் சம்சாரிகளாகின்ற நம் போலியர் பக்கல் பரம கருணை வடிவெடுத்தவராகையாலே, சரம உபதேசம் செய்யத் தொடங்குகின்றார்.

> கண்ணன் கழலிணை
> நண்ணும் மன முடையீர்
> எண்ணும் திருநாமம்
> திண்ணம் நாரணமே[19]

---

17. திருவாய். 1. 2 : 10
18. முமுட்சுப்படி—147. 19. திருவாய் 10, 5 : 1.

[நண்ணும் - அடைய வேண்டும்]

என்று தம் உபதேசத்தைத் தொடங்குகுன்றார். 'எம் பெருமான் கழலிணை' என்று சொல்லவேண்டிய இடத்தில் 'கண்ணன் கழலிணை' என்று சொல்லப்பட்டிருப்பது சிந்திக்கத்தக்கது. அடியார்க்காகத் தூது சென்றும், தேரோட்டியும் ஆன்மகோடிகட்காகத் தன் சௌலப்பியம் (எளியனாயிருக்கும் இருப்பு) என்னும் திருக்குணத்தைக் காட்டியும் பெருமை பெற்றவன் கண்ணன். ஆகவே, அவன் திருவடிகள் குறிப்பிடப்பெறலாயிற்று. 'நண்ணும் மனமுடையீர்!' என்ற விளியினால், எம்பெருமான் திருவடி களை அடையவேண்டும் என்ற 'ருசிக்கு' மேற்பட்ட வேறோர் அதிகாரமில்லை என்பதும், அந்த ருசியுடையா ரெல்லாரும் அதிகாரிகளே என்பதும் தெளிவாகின்றன.

பாரதியார் இக்கருத்துகளையெல்லாம் நன்கு அறிந்து தெளிந்தவர். 'வைணவ தத்துவம் இவர் அறியாததன்று; பாரதியார் பிறந்து வளர்ந்த எட்டயபுரமும், கல்விகற்ற நெல்லையம் பதியும் ஆழ்வார் திருவவதரித்த குருகூருக்கு எட்டாத ஊர்களன்று. 'இறைவா! இறைவா!'[20] என்ற இசைப்பாடலொன்றே இவர் வைணவ தத்துவத்தை நன்கு அறிந்தவர் என்பதற்கு அரணாக அமைகின்றது.

எத்தனைகோடி இன்பம்
வைத்தாய்—எங்கள்
இறைவா! இறைவா! இறைவா!

என்பது இசைப்பாடலின் பல்லவி. இங்குக் கடவுளைப் பொதுவாக 'இறைவா!' என்றுதான் விளிக்கின்றார்—கசேந்திரன் 'ஆதிமூலமே!' என்று பொதுவாய் விளித்தது போல.

---

20. தோ. பா.—36 இறைவனை வேண்டுதல்.

சித்தினை அசித்துடன்
இணைத்தாய்—அங்கு
சேரும் ஐம்பூதத்து
வியன் உலகு அமைத்தாய்
அத்தனை உலகமும்
வண்ணக் களஞ்சியம்
ஆகப் பலப்பலநல்
அழகுகள் அமைத்தாய்

இதில் சித்து, அசித்து, ஈசுவரன் என்ற மூன்று விசிட்டாத் வைத தத்துவங்கள் இயைந்து நிற்கும் அதிசயம் நம் கருத்தினைக் கவர்கின்றது. சித்து என்பது, அறிவுள்ள ஆன்மா. அசித்து என்பது, உயிரற்ற சடப்பொருள்; உடலும் இதனுடன் சேரும். சித்தாகிய உயிரை அசித்தாய உடம்புடன் இணையச்செய்து அந்த உயிரை இயக்கும் இறைவனின் செயலையும், அந்த உயிர்கள் அசித்தினைக் கொண்டு கைபுனைந்தியற்றி எத்தனையோ கோலங்கள் புனைந்து தமக்கு வேண்டிய விதவிதமான வசதிகளை யெல்லாம் அமைத்து இந்த உலகினைக் 'கண்டுகேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புலனுக்கும்' ஏற்ற வண்ணக் களஞ்சியமாக ஆக்கிக்கொள்ளும் அற்புதத்திறத் தினையும் வியந்து போற்றுகின்றோம். எம்பெருமான் தலைமைப் பொறியாளராக நின்று எத்தனையோ பொறி யாளர்களையும் எண்ணற்ற தொழிலாளர்களையும் கொண்டு எத்தனையோ நீர்த்தேக்க அணைகளைக் கட்டி யுள்ளதையும், அங்ஙனம் சேமித்த நீரைக்கொண்டு எண்ணற்ற உழவர்களால் பல்லாயிரக்கணக்கான ஏக்கர் நிலங்களை வளமாக்கிய செயல்களையும் நாம் எண்ணி எண்ணி இறும்பூதெய்துகின்றோம்.

அடுத்து வரும்,

முக்தியென்று ஒருநிலை
சமைத்தாய்—அங்கு
முழுதினையும் உணரும்
உணர்வு அமைத்தாய்
பக்தியென்று ஒருநிலை
வகுத்தாய்—எங்கள்
பரமா! பரமா!
பரமா!

என்ற சரணத்தில் பரமபத நாதனைக் குறிப்பிடுவதுடன் முக்தி என்ற வீடுபேற்றையும், அதனையடையும் வழியாகிய பக்தியையும் குறிப்பிடுகின்றார்.

இவற்றையெல்லாம் அறிந்து தெளிந்த பாரதியார்,

கண்ணன் திருவடி
எண்ணுக மனமே
திண்ணம் அழியா
வண்ணம் தருமே.[21]

என்ற கண்ணனின் திருவடிச் சிறப்பைப் பாடத்தொடங்குகின்றார். இத் தலைப்பிலுள்ள எட்டுப் பாடல்களும் மேற்குறிப்பிட்ட திருவாய்மொழிப் பாசுரங்கள்போல் அமைந்திருத்தலை ஒப்புநோக்கிக் கண்டு மகிழலாம். முதல் திருவாய்மொழிப் பாசுரமும் பாரதியாரின் பாடலும் அடியொற்றி அமைந்துள்ளன. ஏனையவை அமையாவிடினும் அவற்றில் கருத்தொற்றுமை நிழலிடுவதைக் காணலாம்.

---

21. வேதாந்தப்பாடல்கள்—22 மனமே. சில பதிப்புகளில் இப்பாடல் 'கண்ணன் திருவடி' என்ற தலைப்பில் 'தோத்திரப்பாடல்கள்' என்ற தலைப்பின் கீழ்க் காணப்படுகிறது.

மாதவன் என்றுஎன்று
ஓத வல்லீரேல்
தீதுஒன்றும் அடையா
ஏதம் சாராவே (7)

என்பது திருவாய்மொழிப் பாசுரம்.

புகழ்வீர் கண்ணன்
தகைசேர் அமரர்
தொகையோ(டு) அசுரர்
பகைதீர்ப் பதையே (5)

என்பது பாரதியாரின் பாடல், இவை இரண்டிலும் ஓரளவு கருத்தொற்றுமை காணப்படுகின்றது.

நாரணன் எம்மான்
பாரணங்கு ஆளன்
வாரணம் தொலைத்த
காரணம் தானே (2)

என்பது திருவாய்மொழிப் பாசுரம்.

நலமே நாடில்
புலவீர் பாடீர்
நிலமா மகளின்
தலைவன் புகழே (4)

என்பது பாரதியார் பாடல். ஆழ்வார் பாசுரத்திலுள்ள 'பாரணங்கு ஆளன்' என்ற தொடர் பாரதியாரின் பாடலில் 'நிலமா மகளின் தலைவன்' என்று மாறிக்கிடக்கின்றது; ஆனால் இரண்டிலும் கருத்தொற்றுமை இல்லை.

ஆழ்வார் மறந்தும் புறந்தொழா மாந்தர்; பாரதியாரோ சமரச நிலையினர்; எல்லாக் கடவுளர்களையும் பாடுபவர்; வழிபடுபவர். ஆகவே, ஆழ்வார் பாசுரங்களில் திருமால், நாரணன், அரவு அணையான், காயாமலர்

வண்ணன், மாதவன், முகில் வண்ணன், நெடியான் என்றெல்லாம் சுட்டப்பெறுகின்றான். பாரதியாரோ தம் பாடலில் பல கடவுளர்களையும் சுட்டுகின்றார்.

தவறாது உணர்வீர்
புவியீர்! மாலும்
சிவனும் வானோர்
எவரும் ஒன்றே (7)

ஒன்றே பலவாய்
நின்றோர் சக்தி
என்றும் திகழும்
குன்றா ஒளியே (8)

இந்தப் பாடல்களில் திருமால், ·சிவன் தேவர்கள், சக்தி என்ற தெய்வங்கள் குறிப்பிடப்பெற்றிருப்பதைக் காண லாம். கருத்தில் வேறுபடினும் பாடல் அமைப்பு ஒன்று படுகின்றது. ஆழ்வாரையொட்டி பாரதியாரும் கண்ணன் வழிபாட்டில் ஆழங்கால் படுகின்றார்.

# பாட்டிலமைந்துள்ள படிமங்கள்

கவிஞர்கள் தம் அநுபவத்தைத் தேர்ந்தெடுத்த சொற்களால் உணர்வூட்டி நமக்குத் தருகின்றனர். உருக் காட்சிகள் சிந்தனை இவற்றின் குறியீடுகளாக (Symbols) சொற்கள் துணை புரிகின்றன. பர்ட்டன் என்ற திறனாய் வாளரின் கருத்துப்படி கவிதையின் உருக்காட்சி சொற் களின்மூலம் நம்புலன்களைத் (Senses) தொடுகின்றது. புலன்களின்மூலம் படிப்போரின் உணர்ச்சிகளும் அறிவும் விரைவாகத் தூண்டப்பெறுகின்றன. இதன் காரணமாகக் கவிதையில் உருக்காட்சி அதிகமாகப் பயன்படுகின்றது.[2] அவ்வறிஞர் மேலும் கூறுவது: "செலுத்தப்பெறும் புலன் களுக்கேற்ப உருக்காட்சிகள் வகைப்படுத்தப் பெறுகின்றன. ஆகவே, நாம் பெறுபவை : கட்புல உருக்காட்சிகள் (Viusal images)—(இவற்றில் வண்ண உருக்காட்சிகளும் வடிவ உருக்காட்சிகளும் அடங்கும்), செவிப்புல உருக்காட்சிகள் (Auditory images), சுவைப்புல உருக்காட்சிகள் (Giustatory Images), நாற்றப்புல உருக்காட்சிகள் (Olfactory images) ஊறு அல்லது தொடுபுல (நொப்புல) உருக்காட்சிகள்

1. படிமங்கள்—உருக்காட்சிகள் (Imagery)

2. Burton, N : *The Criticism of Poetry;* (Longmans & Greenns Company Ltd, London) p. 97

(Tactual images) என்பவையாகும். இவற்றைத்தவிர' இயக்க நிலை உருக்காட்சிகள் (Kinaesthetic images), மரபு நிலை உருக்காட்சிகள் (Conventional images) என்பவையும் உள்ளன."[3] இவை தனியாகவும், ஒன்று இரண்டு பலவுமாக இணைந்து கலவை உருக்காட்சிகளாகவும் (Cluster images) கவிதையில் அமைகின்றன. மேலும், குறியீடுகளாக அமையும் சொற்கள் 'கட்டுண்ட' உருக்காட்சிகளையும் (Tied images), விடுதலை உருக்காட்சிகளையும் (Free images) உண்டாக்கிப் படிப்போரிடையே ஒத்துணர்வுத் துலங்கலையும் (Sympathetic response) ஒட்ட உணரும் துலங்கலையும் (Empathetc response) எழுப்புகின்றன. இவற்றால் படிப்போரின் கவிதையநுபவம்—முருகுணர்ச்சி—கொடுமுடியை எட்டுகின்றது. இக்கருத்துகளை அடிப்படையாகக்கொண்டு 'கண்ணன் பாட்டை' ஆராய்வோம். பாரதியாரின் முருகியல் நோக்கு அவர்தம் இந்த அற்புதமான பாடலில் எவ்வாறு அமைந்துள்ளது என்பதையும் காண்போம்.

கட்புல உருக்காடசிகள் : கண்ணனாகிய தோழன் எவ்வெவ்வாறெல்லாம் தமக்குத் துணை புரிவான் என்று கூறுமிடத்தில் வரும் 'பொன்னவிற் மேனி சுபத்திரை, (1) 'தீபத்திலே விழும் பூச்சிகள்' (7), 'கண்மகிழ் சித்திரம்' (10) இவற்றில் கட்புல வண்ண உருக்காட்சிகளும் வடிவ உருக்காட்சிகளும் அமைந்திருப்பதைக் கண்டு மகிழலாம். அங்ஙனமே 'கண்ணன்—என் தாய்' என்னும் பாடலில் வரும் 'சந்திரன் என்றொரு பொம்மை' (3), 'மந்தை மந்தையாக மேகம்' (3),

'வானத்து மீன்க ளுண்டு—சிறு
மணிகளைப் போல்மின்னி நிறைந்திருக்கும்' (4)

3. மேலது - பக். 99

என்ற தொடர்களிலும் கட்புல உருக்காட்சிகள் அமைந்து பாட்டைக் கவினுறச் செய்வதைக் காண்க. 'கண்ணன்—என் தந்தை' என்ற பாடலில் காணப்பெறும்,

நிறந்தனிற் கருமை கொண்டான்;—அவன்
நேயமுறக் களிப்பது பொன்னிறப் பெண்கள் (4)

என்ற அடிகளைப் படிக்கும்போது கருநிறக் கண்ணனும் பொன்னிறப் பெண்களும் நம் மனக்கண்ணில் வண்ண—வடிவ உருக்காட்சிகளாக அமைகின்றனர். 'கண்ணன்—என் அரசன், என்ற பாடலில் வரும் 'முல்லை மென்னகை மாதர்' (4) என்ற தொடரில் கட்புல—வடிவ உருக்காட்சி தென்படுவதைக் காணலாம். 'கண்ணன்—என் சற்குரு' என்ற பாடலில் வரும்,

—தடி
ஊன்றிச் சென்றாரோர் கிழவனார்;—ஒளி
கூடு முகமும் தெளிவுதான்—குடி
கொண்ட விழியும் சடைகளும்;—வெள்ளைத்
தாடியும் கண்டு வணங்கியே—பல
சங்கதி பேசி வருகையில் (3)

என்ற பகுதியில் பல கட்புல—வடிவ உருக்காட்சிகள்கவிதையைக் கவினுறச் செய்வதைக் கண்டு மகிழலாம். இதே பாடலில் வரும்,

ஆதித் தனிப்பொரு ளாகுமோர்;—கடல்
ஆகுங் குமிழி உயிர்களாம்;—அந்தச்
சோதி யறிவென்னும் ஞாயிறு—தன்னைச்
சூழ்ந்த கதிர்கள் உயிர்களாம்;—இங்கு
மீதிப் பொருள்கள் எவையுமே—அதன்
மேனியில் தோன்றிடும் வண்ணங்கள்;—வண்ண
நீதி யறிந்தின்பம் எய்தியே—ஒரு
நேர்மைத் தொழிலில் இயங்குவார் (8)

என்ற பகுதியில் பல்வேறு கட்புல—வண்ண—வடிவ உருக்காட்சிகள் அமைந்து கவிதைக்கு எழிலூட்டுவதைத்

தெளியலாம். 'கண்ணம்மா—என் காதலி - 6' என்ற பாடலில்வரும்,

எல்லை யற்ற பேரழகே!
 எங்கும் நிறை பொற்சுடரே!
முல்லைநிகர் புன்னகையாய்!
 மோதுமின்பமே! கண்ணம்மா! (7)

என்ற பகுதியில் கட்புல - வண்ண உருக்காட்சிகளை அநுநுவித்து மகிழலாம்.

செவிப்புல உருக்காட்சி : இவ்வகை உருக்காட்சிகளும் பாட்டின்பத்தை மிகுவிக்கத் துணை புரிகின்றன. 'கண்ணம்மா - என் தாய்' என்ற பாடலில் வரும்,

—அலை
எற்றிநுரை சுக்கியொரு பாட்டிசைக்கும்;
ஒல்லெனுமப் பாட்டினிலே—அம்மை
 ஓமெனும் பெயரென்றும் ஒலித்திடுங் காண் (5)

என்ற பகுதியில் தாய் தன் குழந்தைக்குக் காட்டும் 'விரிகடற் பொம்மை' பாட்டிசைப்பதிலும், அப்பாட்டில் 'ஓம்' எனும் பெயர் ஒலிப்பதிலும் செவிப்புல உருக்காட்சி களைக் கண்டு மகிழலாம். 'கண்ணம்மா—என் சீடன்' என்ற பாடலில் கவிஞர் சீடரிடம் முனிந்து பேசுகின்றார் :

'என்றுமிவ் வுலகில் என்னிடத் தினிநீ
போத்திடல் வேண்டா போபோபோ'' என்று
இடியுறச் சொன்னேன். (126-128)

இப் பாடற்பகுதியைப் படிக்கும்போது கவிஞரின் இடிக்குரல் (செவிப்புல உருக்காட்சி) நம் மனக்காதில் கேட்கின்ற தன்றோ? 'கண்ணன்—என் ஆண்டான்' என்ற பாடலில் ஆண்டானிடம் அடிமை பேசுகின்றான்;

சேரி முழுதும் பறையடிச் தேயருட்
சீர்த்திகள் பாடிடு வேன்;
பேரிகை கொட்டித் திசைக ளதிரநின்
பெயர் முழக்கிடு வேன்.

இப்பாடற் பகுதியில் 'பறையடித்தல்', 'சீர்த்திகள் பாடுதல்', 'பேரிகை கொட்டுதல்', 'பெயர் முழக்குதல்' இவை செவிப்புல உருக்காட்சிகளாக நின்று அவற்றின் ஒலிகள் நமது மனக்காது' கேட்குமாறு செய்கின்றன. ஒரு சில உருக்காட்சிகள்தாம் ஈண்டுக் காட்டப்பெற்றன. பாடல்களைப் படித்து நுகரும்போது பலவற்றைக் கண்டு மகிழலாம்.

**சுவைப்புல உருக்காட்சிகள் :** இந்த வகை உருக்காட்சிகள் 'கண்ணன் பாட்டில்' அதிகமாகக் காணப் பெறவில்லை. தேடி எடுத்து ஒன்றிரண்டு காட்டுவேன். 'கண்ணன்—என் தாய்' என்ற பாடல்,

உண்ண உண்ணத் தெவிட்டாதே—அம்மை
உயிரெனும் முலையினில் உணர்வெனும்பால்;
வண்ணமுற வைத்தெனக் கே—என்றன்
வாயினிற்கொண் டூட்டுமோர் வண்மையுடை
யாள் (1)

'உண்ணும்போது தெவிட்டுதல்', 'வாயினில் ஊட்டுதல்' என்பவை சுவைப்புல உருக்காட்சிகள். 'கண்ணன்—என் விளையாட்டுப் பிள்ளை' என்ற பாட்டில் கண்ணனின் செயல்களைக் கூறுமிடத்து வருவது இது :

தின்னப் பழங்கொண்டு தருவான்;—பாதி
தின்கின்ற போதிலே தட்டிப் பறிப்பான்;
என்னப்பன் என்னையன் என்றால்—அதனை
எச்சிற் படுத்திக் கடித்துக் கொடுப்பான்.

இப்பாடற்பகுதியில் 'தின்னுவதற்குப் பழம்', 'தின்கின்ற போதில்', 'எச்சிற்படுத்திக் கடித்துக் கொடுத்தல்' என்பவை

சுவைப்புல உருக்காட்சிகள். இப்பகுதியைப் படிக்கும் போதே பழத்தின் சுவையை நம் மனம் உணர்கின்ற தன்றோ? இதே பாட்டில் வரும் 'தேனொத்த பண்டங்கள்' என்ற தொடரிலும் இவ்வகை உருக்காட்சி தென்படு கின்றது. 'கண்ணன்—என் காந்தன்' என்ற பாடல்,

கனிகள் கொண்டுதரும்—கண்ணன்
கற்கண்டு போலினிதாய் (1)

என்று தொடங்குகின்றது. கனிகள், கற்கண்டு இவை சுவைப்புல உருக்காட்சிகளை எழுப்புகின்றன; பாட்டைப் படிக்கும்போதே இனிப்புச் சுவையை நம் மனம் உணர் கின்றது. 'கண்ணம்மா—என் காதலி—(6).' என்ற பாடலில் வரும்,

ஆசை மதுவே, கனியே
அள்ளு சுவையே கண்ணம்மா!

என்ற அடியைப் படிக்கும்போதே மது, கனி இவற்றின் 'அள்ளு சுவையை' நம் மனம் உணர்ந்து நுகர்கின்றது.

நாற்றப்புல உருக்காட்சிகள் : இவ்வகைக் உருக்காட்சிகள் அரியனவாகவே காணப்பெறுகின்றன. 'கண்ணன்—என் காதலன்' என்ற பாடலில் வரும் 'நெஞ்சில் கனல் மணக்கும் பூக்கள்' (2) என்ற தொடரிலும். 'கண்ணன்—என் காந்தன்' என்ற பாட்டில் வரும்,

பணிசெய் சந்தனமும்—பின்னும்
பல்வகை அத்தர்களும்
குனியும் வாண்முகத்தான்—கண்ணன்
குலவி நெற்றியிலே
இனிய பொட்டிடவே—வண்ணம்
இயன்ற சவ்வாதும் (1)

கொண்டை முடிப்பதற்கே;—மணம்
கூடு தயிலங்களும் (2)

என்ற பகுதிகளைப் படிக்கும்போதே சந்தனம், அத்தர், சவ்வாது, மணம் கூடு தைலம்—இவை நாற்றப்புல உருக்காட்சிகளை எழுப்புகின்றனவன்றோ?

நொப்புல உருக்காட்சிகள் : இவ்வகை உருக்காட்சிகளும் பாட்டில் அதிகமாகத் தென்படவில்லை. எனினும் ஒன்றிரண்டைக் காட்டுவேன். 'கண்ணன்—என் தோழன்' என்ற பாட்டில் வரும் 'தண்மைக் குணமுடையான்' (8), 'தழலின் குணமுடையான்' (8), 'அழலினும் கொடியான்' (9) என்ற தொடர்களிலும்; 'கண்ணன்—என் சீடன்' என்ற பாட்டில் வரும்,

சினத்தீ யாகிநான்
"ஏதடா, சொன்னசொல் அழித்துரைக்கின்றாய்;
பித்தனென் றுன்னை உலகினர் சொல்வது
பிழையிலை போலும்'' என்றேன்;

வெடுக்கெனச் சினத்தீ வெள்ளமாய்ப் பாய்ந்திடக்
கண்சிவந் திதழ்கள் துடித்திடக் கனன்றுநான்

என்ற தொடர்களிலும் நொப்புல உருக்காட்சிகளை (வெம்மை) உணரமுடிகின்றது. 'கண்ணன்—என் காதலன்—(1)' என்ற பாடலில் வரும்,

எண்ணும் பொழுதிலெல்லாம்—அவன்கை
இட்ட விடத்தினி லே
தண்ணென் றிருந்த தடீ!—புதிதோர்
சாந்தி பிறந்த தடீ!

என்ற பகுதியில் நொப்புல உருக்காட்சி (தண்மை) தட்டுப் படுகின்றது. 'கண்ணன்—என் காதலி—(5) என்ற பாட்டில் வரும்,

மேனி கொதிக்கு தடீ!—தலைசுற்றியே
வேதனை செய்கு தடீ!

என்ற அடியைப் படிக்கும்போதே இவ்வகை உருக்காட்சியை (வெம்மை) நம் மனம் உணர்கின்ற தன்றோ?

**இயக்கப்புல உருக்காட்சிகள் :** 'கண்ணன் பாட்டில்' பல இடங்களில் இவ்வகை உருக்காட்சிகள் அமைந்து பாடலின் சுவையைப் பன்மடங்கு உயர்த்துகின்றன.

சேனைத் தலைநின்று போர் செய்யும் போதினில்
　　தேர் நடத்திக் கொடுப்பான் (தோழன்-2)

ஆட்டங்கள் காட்டியும் பாட்டுக்கள் பாடியும்
　　ஆறுதல் செய்திடுவான் (மேலது-4),

பள்ளத்தி லேநெடு நாளழு குங்கெட்ட
　　பாசியை யெற்றிவிடும்—பெரு
வெள்ளத்தைப் போல் (மேலது-5)

தீபத்தி லேவிழும் பூச்சிகள் போல்வருந்
　　தீமைகள் கொன்றிடுவான் (மேலது-7)

நல்ல நல்ல நதிகளுண்டு—அவை
　　நாடெங்கும் ஓடிவிளை யாடி வருங்காண்
மெல்ல மெல்ல போயவை தாம்—விழும்
　　விரிகடல்... (தாய்-5)

பூமிக் கெனைய னுப்பினான்;—அந்தப்
　　புதமண்ட லத்திலென் தம்பிக ளுண்டு;
நேமித்த நெறிப்படி யே—இந்த
　　நெடுவெளி யெங்கணும் நித்தம் உருண்டே
போமித் தரைகளி லெல்லாம் (தந்தை-1)

மேற்காட்டப்பெற்ற தொடர்களிலும் பாடற்பகுதிகளிலும் இவ்வகை உருக்காட்சிகள் அமைந்திருப்பதைக் கண்டு மகிழ்க.

கலவை நிலை உருக்காட்சிகள் : சில பாடல்களில் ஒன்றுக்கு மேற்பட்ட பலவகை உருக்காட்சிகள் அமைந்து அவற்றிற்குப் பொலிவூட்டுகின்றன. இவ்வகை உருக்காட்சிகள் சிலவற்றைக் காண்போம்.

வெடுக்கெனச் சினத்தீ வெள்ளமாய்ப் பாய்ந்திடக்
கண்சிவந் திதழ்கள் துடித்திடக் கனன்றுநான்
(சீடன்-122-3)

இந்த அடிகளில் 'சினத்தீ' நொப்புல உருக்காட்சியையும் (வெம்மை), கண்கள் சிவத்தல் கட்புல உருக்காட்சியையும் (வண்ணம்), வெள்ளமாய்ப் பாய்தல், துடித்திடுதல் இவை இயக்க நிலை உருக்காட்சிகளையும் எழுப்பச் செய்து, இக் கலவை நிலை உருக்காட்சி கவிதையைக் கவின்பெறச் செய்கின்றதன்றோ? 'தேனினினிய குரலிலே—கண்ணன் செப்பவும் (சற்குரு—12) என்றதொடரில் தேன் சுவைப்புல உருக்காட்சியையும், குரலில் செப்புதல் செவிப்புல உருக் காட்சியையும் எழுப்பிக் கலவையை உருவாக்குதலைக் காண்கின்றோமன்றோ?

பிள்ளைக் கனியமுதே—கண்ணம்மா
பேசும்பொற் சித்திரமே
அள்ளி யணைத்திடவே—என்முன்னே
ஆடிவருந் தேனே

ஓடி வருகையிலே—கண்ணம்மா!
உள்ளங் குளிரு தடீ!
ஆடித்திரிதல் கண்டால்—உன்னைப்போய்
ஆவி தழுவு தடீ![4]

என்ற பாடற்பகுதிகளில் கனியமுது, தேன் இவை சுவைப் புல உருக்காட்சிகளையும்; பேசும் பொற்சித்திரம் செவிப் புல உருக்காட்சியையும்; அள்ளி அணைத்திடல், உள்ளம்

4. கண்ணம்மா.—என் குழந்தை - 2, 3.

குளிருதல், ஆவிதழுவல் இவைநொப்புல உருக்காட்சிகளை யும்; ஆடிவருதல், ஓடிவருதல், ஆடித்திரிதல் இவை இயக்க நிலை உருக்காட்சிகளையும்; இவற்றையெல்லாம் கொண்ட குழந்தை கட்புல உருக்காட்சியையும் எழுப்பி கலவை நிலை உருக்காட்சியை உருவாக்கிப் பாட்டின் சுவையைப் பன்மடங்கு உயர்த்துவதைக் காணலாம். இன்னும்,

> சொல்லும் மழலையிலே—கண்ணம்மா!
> துன்பங்கள் தீர்த்திடுவாய்!
> முல்லைச் சிரிப்பாலே—எனது
> மூர்க்கந் தவிர்த்திடுவாய் [5]

என்ற இதே பாடற்பகுதியில் 'சொல்லும் மழலை' என்ற தொடர் செவிப்புல உருகாட்சியையும், 'முல்லைச்சிரிப்பு' கட்புல உருக்காட்சியையும் எழுப்பி ஒரு கலவை நிலையை உண்டாக்குவதையும் கண்ணுறுகின்றோம். இப்படிப் பாடல்களில் பல்வேறு இடங்களில் பலவித கலவை நிலை உருக்காட்சிகளைக் கண்டு மகிழலாம்.

மின்வெட்டுப் போன்ற மணிமொழி உருக்காட்சிகள் : மேற் கண்ட உருக்காட்சிகளைத் தவிர, பல்வேறு இடங்களில் கவிஞரின் சொற்களிலும் சொற்றொடர்களிலும் மின் வெட்டுகள் போன்ற பல்வேறு உருக்காட்சிகள் பாங்குற அமைந்திருப்பதையும் கண்டு மகிழலாம். அவற்றுள் சிலவற்றை ஈண்டுக் காட்டுவோம். 'சந்திரன் என்றொரு பொம்மை —அதில், தண்ணமுதம் போல ஒளி பரந்தொழு கும்', 'வானத்து மீன்களுண்டு—சிறுமணிகளைப்போல் மின்னி நிறைந்திருக்கும்', 'சோலைகள் காவினங்கள்— அங்கு, சூழ்தரும் பலநிற மணிமலர்கள்', 'தருக்களில் தூங்கிடும் கனிவகைகள்', இளைஞன் பித்தனென்றுலகினர்

---

5. மேலது—8.

பேசிய பேச்சென்' 'நெஞ்சினை அறுத்தது' 'உன்கண்ணில் நீர் வழிந்தால்—என்னெஞ்சில், உதிரங் கொட்டுதடீ', 'ஆசைபெற விழிக்கும் மான்கள்' 'உள்ளம் அஞ்சக் குரல் பழகும் புலிகள்', 'வண்டு விழியினுக்கே—கண்ணன், மையும் கொண்டு தரும்', 'சுட்டும் சுடர்விழி', 'பாட்டும் சுதியும் ஒன்று கலந்திடுங்கால்—தம்முள், பன்னி உபசரணை பேசுவதுண்டோ?', 'வானிலிடத்தை யெல்லாம்—இந்த வெண்ணிலா, வந்து தழுவதுபார்!'— இந்தச் சொற்றொடர்களில் பொதிந்திருக்கும் பல்வேறு வகை உருக்காட்சிகள் படிப்போர் மனத்தைக் கொள்ளை கொள்ளுகின்றன.

கவிதையநுபவம் : நம் உடல் தூண்டல் துலங்கல் முறையில் இயங்குகின்றது. உள்ளமும் அதற்கேற்பத் துலங்குகின்றது. வெளியுலகிலிருந்து தூண்டல்கள் புலன் களைத் (Sensey level) தாக்கும்போது, அவற்றிற்கேற்பப் புலன்கள் துலங்குகின்றன. அதாவது, அப்புலன்கள் அத் தூண்டல்களால் கிளர்ச்சியடைகின்றன. அதனால் ஏற்படும் உணர்ச்சியை மனம் அநுபவிக்கின்றது. இந்த உணர்ச்சிப் பெருக்கில் உண்டாகும் இன்பமே—முருகுணர்ச்சியே—சுவையாகும். எடுத்துக்காட்டாக மணப்பொருள்கள் நல்கும் மணத்தை நாற்றப்புல நரம்பு கள் வாங்கி, மூளைக்கு அனுப்புகின்றன. மனம் அப் பொருள்கள் தரும் மணத்தை அநுபவிக்கின்றது. எ-டு : ஊதுவத்தியின் மணம். இப்படியே பிற புலன்களின்மூலம் பெறும் தூண்டல்களால் மனம் அந்தந்தப் பொருள்கள் தரும் சுவைகளைப் பெற்று அவற்றில் ஈடுபடுகின்றது. இவ்வாறு வெளியுலகத் தூண்டல்களால் அடிக்கடி மனம் பெறும் அநுபவம் பெருமூளையில் பதிவாகின்றது. உலகை இன்பமயமாகக் கண்டு, உள்ளத்தில் பூரிப்பு அடைபவர்கள் கவிஞர்கள். அதற்கு உள்ளத்தில் கனிவு வேண்டும்.

இவ்வாறு பெருமூளையில் பதிவாகி யிருக்கும் அநுபவம் கவிதைகளைப் படிக்கும்போது நினைவாற்றலின் காரணமாகத் தூண்டல்களாக (Ideational level) மாறுகின்றன. அவை மூளையிலுள்ள பூத்தண்டு (Thalamus), மேற்பூத்தண்டு (Hypo—thalamus) என்னும் புகுதிகளின் மூலமாகப் புலன்களை அடைகின்றன. அப்படி அடையும்போது அவை மூளையில் அற்புதமாக அமைந்திருக்கும் நரம்பு அமைப்புகளைத் தூண்டுகின்றன. இதனால் அந் நரம்புகளில் ஏற்படும் இயக்கத்தால் மாங்காய்ச் சுரப்பிகள் (Adrenal glands) போன்ற நாளமிலாச் சுரப்பிகளில் (Duct less glands) சாறுகளை ஊறச் செய்து குருதியோட்டத்தை மிகுவிக்கின்றன. உடலும் கிளர்ச்சியடைகின்றது. அப்போது கவிதைகளில் வரும் உருக்காட்சிகளைப் புலன்கள் மீண்டும் மனத்தில் தோன்றச் செய்கின்றன. மனம் அக் காட்சிகளை அநுபவித்து மகிழ்கின்றது. இத்தகைய முருகுணர்சியைத் தம் முருகியல் நோக்கால் தம்முடைய கவிதைகளில் ஏற்றிவைக்கின்றனர் கவிஞர்கள். உலக இயல்பிற்குப் படம்போலிருக்கும் அவர்களுடைய கவிதைகளை நாம் பயிலுங்கால் அதே நோக்கை நாம் பயிற்சியால் பெறுகின்றோம். கவிஞர்கள் உலகப் பொருள்களை அநுபவித்த உணர்ச்சி சுவை வடிவமாக அவர்தம் கவிதைகளில் தேக்கி வைக்கப் பெற்றுளது. அக் கவிதைகளை நாம் பயிலுங்கால் அவற்றிலுள்ள சுவைகளை நம் மனம் அநுபவித்து மகிழ்கின்றது. பாரதியாரின் 'கண்ணன் பாட்டைப்' பயின்று அநுபவிப்பவர்கள் அவருடைய முருகியல் நோக்கை மானசீகமாகக் கண்டு மகிழலாம்; நம்மிடமும் அந் நோக்கு எழுவதையும் உணர்ந்து மகிழலாம். பாடல்களும் 'மம்மர் அறுக்கும் மருந்தாக' நமக்குக் களிப்பூட்டுவதையும் உணரலாம். பாட்டிலமைந்துள்ள

படிமங்களே—உருக்காட்சிகளே—இப் பெரும்பணியை—நுட்பமான பணியை—நிறைவேற்றத் துணைபுரிகின்றன.

'கண்ணன் காதலன்'—எனக்கொரு
களிய முதமடா
விண்ண முதமுமே—அதனை
வெல்ல மாட்டாதடா [6]

என்பது கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையின் பாட்டநுபவமாகும். கண்ணன் பாட்டு முழுவதையும் காட்டும் முறையில்,

பல
கோணங்களில்
கண்ணனைப்
படம்பிடித்த
கேமரா......[7]

என்ற புதுக்கவிதை அமைகின்றது. பாரதியாரையே 'கேமரா' என்ற ஒரு குறியீடாகச் சொல்லி மகிழ்கின்றார் இப் புதுக் கவிஞர் :

---

6. மலரும் மாலையும்—பாரதியும் பட்டிக் காட்டானும்—16.

7. கவிஞர் வாலி : பாரதி ஒரு பிள்ளையார் சுழி (கல்கி—விடுமுறை சிறப்பு மலர்—1981).

# பின்னிணைப்பு—1

## பயன்பட்ட நூல்கள்

### (அ) தமிழ்நூல்கள்

1. ஆழ்வார்கள் : நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்
(மர்ரே கம்பெனி ராஜம் பதிப்பு)

2. இராகவய்யங்கார், மு : ஆராய்ச்சித் தொகுதி

3. இராச கோபாலன், கு. ப } கண்ணன் என் கவி
சுந்தர ராசன், பெ. கோ }
(பூங்கொடிப் பதிப்பகம், மயிலாப்பூர், சென்னை-600004 (ஜூலை—1981)

4. இராமலிங்க சுவாமிகள்: திருவருட்பா—ஆறாம் திருமுறை
(இராமலிங்கர் பணிமன்றம் சென்னை-86)

5. கம்பர் : கம்பராமாயணம்
(வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியார் பதிப்பு)—(உரையுடன்)

6. கிருஷ்ணவேணி அம்மையார், எஸ் : செம்பொருள்
—திருமலை - திருப்பதி தேவஸ்தான வெளியீடு —(1952)

7. சாமிநாத அய்யர், உ. வே : புறநானூறு (உரை)

8. சாமிநாத அய்யர். உ. வே : பரிபாடல் (உரை)

9. சுந்தரராமானுஜ ஸ்வாமிகள், கோ : தத்துவத்திரய விளக்கவுரை
(வேலூர் வைணவ சித்தாந்த மகா சங்கம்) —1951

10. சுப்பிரமணிய அய்யர், ஏ, வி : தற்காலத் தமிழ் இலக்கியம்
(1942)

11. சுப்பிரமணிய சாஸ்திரியார், வி. எச் : நவரஸங்கள்
(தினமணி வெளியீடு)

12. சுப்பிரமணிய பாரதியார் : கவிதைகள்
எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை வெளியீடு —1962

13. சுப்பிரமணிய பாரதியார் : கவிதைகள்
(வானவில் பிரசுரம் சென்னை-36)—1980

14. சுப்பிரமணிய பாரதியார் : கட்டுரைகள்
(வானதி பதிப்பகம்)—1981

15. சுப்புரெட்டியார், ந : கவிதையனுபவம்
(கழகவெளியீடு)—1961

16. சுப்புரெட்டியார், ந : முத்திநெறி
(பாரி நிலையம், சென்னை-1)—1982

17. தாயுமான அடிகள் : தாயுமான சுவாமிகள் பாடல்
(தருமையாதீன வெளியீடு)—1965

18. திரிகூடராசப்பகவிராயர் : குற்றாலக் குறவஞ்சி
(கழக வெளியீடு)

19. திருவள்ளுவர் : திருக்குறள்—பரிமேலழகர் உரை
(கழக வெளியீடு)

20. தேசிகவிநாயகம் பிள்ளை, சி : மலரும் மாலையும்
(புதுமைப் பதிப்பக வெளியீடு)—1944

21. தேவராசப்பிள்ளை, வல்லூர் : குசேலோபாக்கியானம்
—உரை (கழக வெளியீடு)

22. தொல்காப்பியர் : இளம்பூரணர் (கழக வெளியீடு)

23. பாரதிதாசன் : அழகின் சிரிப்பு (பூம்புகார் பதிப்பக வெளியீடு)

24. பாரதியார் பல்கலைக்கழகம் : பாரதியின் புலமை ஒளி
—(15 கட்டுரைத் தொகுப்பு)—1982

25. புருடோத்தம நாயுடு, பு. ரா : ஸ்ரீவசனபூஷணம்—
மணவாள மாமுனிகள் வியாக்கியானத் தமிழாக்கம்

26. மாணிக்கவாசகர் : திருவாசகம் (தருமையாதீன வெளியீடு)

27. வெள்ளை வாரணன், க : பன்னிரு திருமுறைவரலாறு-
இரண்டாம் பகுதி
(அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு).

(ஆ). ஆங்கிலநூல்

28. Meenakshi Sundaram. K.: *A Study of the Poetical Works of Subramania Bharathi* (Paari Nilayam, Madras-1)—1965

# பின்னிணைப்பு---2

## பொருட்குறிப்பு அகராதி

[எண், பக்க எண்]

### அ



### ஆ



### இ